# உள்ளடக்கம்

# முன்னுரை

தமிழ்ச் சிறுகதை இலக்கியம் ஏறத்தாழ எண்பதாண்டுக் கால வரலாறுடையது. இந்த எண்பதாண்டுக் காலத்தில் அது பெற்று வந்திருக்கும் மாற்றமும் வளர்ச்சியும் ஆய்வாளர்களின் கவனத் திற்கும் கணிப்பிற்கும் உரியதாகும். தமிழ்ச் சிறுகதையின் தரத்தை யும் திறத்தையும் நமக்கு நாமே கணித்துக் கொள்ளவும், அவற் றைப் பிறமொழியாளருக்கு உணர்த்தவும் அவ்வப்போது தனித் தனியான தொகுப்பு நூல்கள் வெளிவருவது மிக இன்றியமையாத தாகும்.

ஒரு குறிப்பிட்ட காலகட்டத்தின் வளர்ச்சியைப் பிரதி பலிக்கும் வகையில் நாம் எத்தகைய தொகுப்பினைக் கொண்டு வந்தாலும் அது பரவலான விமரிசனங்களுக்கு ஆளாதல் இயற்கையே. எந்தத் தொகுப்பிலும் சில விடுபாடுகள் இருக்கும். இணைக்கப் பெற்றவற்றுள் சில 'இதனினும் சிறந்ததாக எத்தனையோ உள்ளனவே? அதைத் தேர்ந்தெடுக்காமல் இதனை ஏன் தேர்ந்தெடுத்தார்கள்?' என்னும் ஐயத்தை எழுப்பும். தொகுப்பு முயற்சியில் இயல்பாக எழும் குறைகள் இவை. இத்தொகுப்பில் அதுபோன்ற குறைபாடுகளே இல்லை என்று யாரும் கூறமுடியாது. இத்தொகுப்பினை முதலில் உருவாக்கிய திரு அகிலனும், அவருக்குப்பின் அத்தொகுப்பினைச் செப்பம் செய்த திரு நா. பார்த்தசாரதியும் எத்தகு அளவுகோல்களைக் கையாண்டனர் என்று அறியேன். எனினும் ஒன்று கூறலாம்;

தமிழ்ச் சிறுகதையின் வளர்ச்சியை எடைபோட இத்தொகுப்பு பயன்படும் என்பது உறுதி.

இத்தொகுப்பில் பதினெட்டுச் சிறுகதைகள் இடம் பெற்றுள்ளன. மறைந்த எழுத்தாளர்கள், முதிய படைப்பாளர்கள், வளர்ந்து வரும் இளங்கலைஞர்கள் ஆகிய அனைத்துத் தரப்பினரின் படைப்புகளும் இத்தொகுப்பில் இடம் பெற்றுள்ளன.

தமிழ்ச் சிறுகதை இலக்கியம் தொடக்க காலத்தில் 'கதை சொல்வதை' மட்டுமே நோக்கமாகக் கொண்டு வளர்ந்தது. பின்னர் கதை சொல்வதை மட்டும் முதன்மையாகக் கொள்ளாமல் சமூக அவலங்களைப் படம் பிடித்துக்காட்டும் கருவிகயாக அது பயன்பட்டது. சமூக மாற்றத்திற்கு மக்களைத் தயார் செய்யவும், இலக்கியத்தை ஒரு போராட்டக் கருவியாக மாற்றவும் பலர் முன்வந்தனர். இத்தொகுப்பில் உள்ள ''யுகசந்தி'', ''புதிய பாலம்'' ''கதவு'' முதலிய கதைகள் படிப்போரிடையே புதியதோர் சமூகவிழிப்புணர்வைத் தோற்றுவிக்கும் என்பதில் ஐயமில்லை. ஜெயகாந்தனின் ''யுகசந்தி'' அது வெளிவந்த காலகட்டத்தில் எத்தனை வரவேற்புக்குரியதாக இருந்தது!

தமிழ்ச் சிறுகதையில் ஒரு காலகட்டத்தில் மேல்மட்டக் குடிகளே கதைமாந்தர்களாய் இடம் பெற்று வந்தனர். சமூகத்தின் அடிமட்டத்தில் உள்ள பெருவாரியான மக்கள் இலக்கியப் படைப்புகளில் இடம் பெறத் தொடங்கிய நிலை பின்னரே உருவாயிற்று. நரிக்குறத்தியும், பேருந்து ஊழியரும் தொழிற்சாலையில் நாள் ஊதியத்திற்கு வேலை செய்வோரும், சேரிவாழ் மக்களும் இலக்கியப் படைப்பில் தலைமை இடம் பெறுவதை இத்தொகுப்பில் உள்ள ''நீலச்சிலுவை'', ''நாசகாரக் கும்பல்'', ''மிதப்புகள்'', ''முறிவு'' போன்ற கதைகளில் நாம் காண
முடிகிறது. ல்

ந்தக்
தமிழ் நாட்டுச் சிறுகதைக் கலைஞர்கள் தொடக்கக் கால நல்ல
புற உலக நாட்டத்தோடு சமுதாய நிகழ்வுகளை மட்டும் ங்கீட்டு
பொருளாகக் கொண்டனர்; காலம் செல்லச்செல்ல அழுகிப்
நாட்டம் அவர்களை ஆட்கொண்டது. உள்ளுலக அனுசாற்றையா
உளவியல் அடிப்படையில் கலைநயம் புலப்படச் மல் விட்டு
தொடங்கினர். இத்தொகுப்பிலுள்ள சூடாமஔ வேளையில்
ரிப்பனும் வானவில்லும்'', வண்ணதாசனின் பில் அகப்பட்டுக்
பயணம்'', வண்ண நிலவனின் ''கரையும் உரு

கதைகள் அகமன அனுபவங்களையே பாடுபொருளாகக் கொண்டுள்ளன.

தமிழ்ச் சிறுகதை ஆசிரியர்கள் காவியத்திற்கேயுரிய வியத்தகு நிகழ்சிகளைக் கதையில் காட்ட முயலவில்லை. அன்றாட வாழ்வில் நிகழும் அற்பமான சம்பவங்களும் கூட அவர்கள் கையில் கலைவடிவம் பெறுகின்றன. அசோகமித்திரனின் ''விடிவதற்குள்'', நீல. பத்மநாபனின் ''அரிசி'' முதலிய கதைகள் இதற்குச் சான்றாக அமைகின்றன.

நாம் வாழும் இன்றைய முதலாளித்துவச் சமுதாயத்தில் எல்லாமே விற்பனைக்குரிய பொருளாக மாறிவிட்டன. கலையும் இலக்கியமும் அதற்கு விதிவிலக்காக இருக்க முடியுமா? பத்திரிகைச் சந்தையில் வணிகப் போட்டிகளுக்கிடையே நல்ல இலக்கியத்தை இனம் கண்டு போற்றுவது அரிய முயற்சி. நல்ல படைப்புகளும் கூட இச்சந்தை வழியாகத்தான் மக்களுடன் தொடர்புகொள்ள வேண்டியிருக்கிறது. கல்லும் நெல்லும் கலந்து போய்விடும்போது சல்லடையிட்டுப் புடைத்துத்தான் அவற்றைப் பிரித்தெடுக்க முடியும். இதேபோன்ற ஊக்கமும் உழைப்பும் நல்ல இலக்கியத்தை நசிவு இலக்கியத்திலிருந்து பிரித்துப் பார்க்கவும் தேவைப்படுகிறது. இத்தொகுப்பு நல்ல சிறுகதைகள் சிலவற்றைப் பிரித்துக் காட்டுவதற்காக மேற் கொள்ளப்பட்ட முயற்சி. இத்தொகுப்பு தமிழ்ச் சிறுகதையின் ஒரு குறிப்பிட்ட மட்டத்தின் வளர்ச்சி நிலையைக் காட்ட உதவும் அளவு கோலாகப் பயன்படும் என்பது என் நம்பிக்கை.

அகிலனும் நா.பா.வும் மேற்கொண்ட இம்முயற்சி என்னால் முற்றுப்பெறுவது நான்பெற்ற பேறேயாகும்.

டாக்டர் மா. இராமலிங்கம்

6
ஏ
தொ
இத்
யாரும்
திரு அகி
செய்த திரு
கையாண்ட

# தேங்காய்த் துண்டுகள்

மு. வரதராசன்

'மாலை நேரத்தில் குடித்துவிட்டுச் சாலை ஓரத்தில் விழுந்து கிடப்பவர்களைப் பார்த்திருக்கிறோம். ஆனால் இது என்ன கொடுமை! பகல் ஒரு மணிக்கு நல்ல வெயிலில் தார் வெந்து உருகும் வெப்பத்தில் இந்தச் சாலை ஓரத்தில் இப்படி ஒருவன் விழுந்து கிடக்கிறானே' என்று எண்ணிக்கொண்டே அந்த மாரியம்மன் கோயிலை அணுகி நடந்து போய்க்கொண்டிருந் தேன். வெளியூர்களில் கள், சாராயக் கடைகளை மூடிவிட்ட பிறகு, அங்கே உள்ள குடிகாரர் சிலர் அடிக்கடி சென்னைக்குப் புறப்பட்டு வந்து, ஏதோ வேலை இருப்பது போல் நகரத்தைச் சுற்றித் திரிந்து, ஆசை தீரக் குடித்து மயங்கியிருந்து, பிறகு ஊருக்குத் திரும்புவது எனக்கு நன்றாகத் தெரியும். எங்கள் ஊரில் இருந்தே பலர் அப்படிப் புறப்பட்டு வந்து சென்னையில் குடித்துவிட்டுப் போவது தெரியும். ஒருமுறை வீட்டுக்கு வந்து என்னைப் பார்த்துவிட்டு, நகரத்தில் பல வேலை இருப்பதாகச் சொல்லிவிட்டுப் போய்விடுவார்கள். உணவுக்கு ஒரு வேளை யாவது வருமாறு அழைத்தாலும் வருவதில்லை. அவர்களுக்கு விருப்பமான விருந்து கள்ளுக்கடைகளிலும் சாராயக்கடை களிலும் கிடைக்கும்போது, வெந்த அரிசிச் சோற்றைத் தேடியா வந்து காத்திருப்பார்கள்? நாட்டுப்புறத்தில் மூலைமுடுக்குகளில் காய்ச்சும் திருட்டுச் சாராயம் போதாது என்று இந்தக் கடைச்சரக்கை நாடி வருகிறவர்கள், அதையும் விட்டு நல்ல அரிசிச் சோற்றையும் பொருட்படுத்தாமல் இந்தப் பங்கீட்டு அரிசிச் சோற்றை-ஈரத்தோடு நெடுநாள் இருந்து கெட்டு அழுகிப் பல நிறம் பெற்று விளங்கும் அரிசியால் சமைத்த சோற்றையா நாடி வருவார்கள் என்று நானும் வற்புறுத்தாமல் விட்டு விடுவேன். ஆனால் மின்சாரவண்டி வரும் வேளையில் தண்டவாளப் பாலத்தின்மேல் நடந்து வண்டியில் அகப்பட்டுக்

கொண்டு மடிந்த இரண்டு பிணங்களை ஒருநாள் காண நேர்ந்தது. அவர்களுக்கு முன்னே நடந்துவந்த சிலர் அவர்களைக் குடிகாரர் என்று அறிந்து, அங்கே நடந்து போக வேண்டாம் என்று சொல்லித் தடுத்தும் கேட்கவில்லையாம். அந்தக் குடிவெறியில் தள்ளாடி நடந்து, மின்சார வண்டிக்குப் பலியானார்களே என்று அன்று என் நெஞ்சம் மிக வருந்திய போது, போக்குவரவு மிகுந்த சென்னையில்தான் கள் சாராயக் கடைகளை முதலில் மூட வேண்டும் என்று உணர்ந்தேன்.

இந்த மாரியம்மன் கோயிலருகே சாலை ஓரத்தில், பகல் ஒரு மணி வெயிலில் படுத்துச் சுருண்டிருந்த உடம்பைக் கண்ட போதும் இந்த எண்ணமே உண்டானது. நடுப்பகலிலே இப்படிக் குடிக்கிறவன், பொழுது போனால் எவ்வளவு குடிப்பான் என்று சிறிது வெறுப்போடு எண்ணிக்கொண்டே நடந்தேன். அவனைப் பார்த்துக்கொண்டே இளைஞர் இருவர் நின்று கொண்டிருந்தார் கள். என்ன நிலைமை என்றுதான் பார்க்கலாமே என்று நானும் அவர்கள் இருந்த பக்கமாக நடந்து சென்றேன்.

''குடிகாரனா?'' என்று அவர்களைப் பார்த்துக் கேட்டேன்.

''இல்லைங்'க'' என்றார் ஒருவர்.

''வேறு என்ன? காக்கை வலிப்பா?'' என்றேன்.

''அதுவும் இல்லைங்'க. காக்கைவலிப்பாக இருந்தால், இப்படி மூச்சுப் பேச்சு இல்லாமல் சும்மா விழுந்து கிடப்பானா?'' என்றார் மற்றொருவர்.

அவனுக்கு வயது இருபது இருக்கலாம். நல்ல கட்டான உடல் இருந்தது. ஆனால் அழுக்கேறிய ஆடையும் வாடிய முகமும் கண்டபோது, வேறு நோயாக இருக்க முடியுமா என்று எண்ணிப் பார்த்தேன். தீய வழியில் நடந்து பெற்ற விபசார நோயாக (மேகம் முதலிய நோயாக) இருந்து, உயிருக்கே உலை வைக்கும் அளவுக்கு முற்றியிருக்கலாம் என்றும், இந்தக் காலத்து இளைஞர்கள் மிகவும் கெட்டுப் போனவர்கள் என்றும் எண்ணினேன். ''சரி, கர்ம வினை, நாம் என்ன செய்ய முடியும்?'' என்று ஒருவகை வெறுப்போடு நடக்கத் தொடங்கினேன்.

அதற்குள் யாரோ தண்ணீர் கொண்டுவந்து முகத்தில் தெளிக்கவே, அவன் ''வேலா, வேலா'' என்று ஆழ்ந்த குரலில் இரண்டு முறை சொன்னான். இதைக் கேட்டதும் காலெடுத்துச் சில அடி தொலைவு நடந்து சென்ற நான் அந்த இடத்திலேயே நின்றேன். அப்போது அந்த இடத்தில் என்னைப்போல் வழிப்

போக்கர் ஒருவர் எட்டிப்பார்த்து, ''இது என்ன அய்யா! பாசாங்கு, வெறும் பாசாங்கு; வாய் திறந்து வேலா வேலா என்று கடவுள் பெயரைச் சொல்கிறானே! நான் இந்த மாதிரிப் பாசாங்குப் பிச்சைக்காரர் எவ்வளவோ பேரைப் பார்த்திருக்கிறேன். நேற்றுக் குழந்தை பெற்றுவிட்டு, இன்றைக்குப் பத்துமாதக் கர்ப்பவதி போல் பாசாங்கு செய்து பிச்சை கேட்பதைப் பார்த்ததில்லையா?'' என்றார். உடனே அங்கிருந்த மற்றொருவர், ''இதுதான் அய்யா பட்டணம்! போகிறவர்கள் சும்மா போகக் கூடாதா? எட்டிப் பார்த்தவுடன் பாசாங்கு தெரிந்துவிடுமா? அவரவர்கள் வயிற்றுக்கு இல்லாமல் பட்டினியால் செத்தால் தெரியும்'' என்றார். 'பட்டினி' என்ற சொல்லைக் கேட்டவுடன் எனக்கு இரக்கம் தோன்றியது. ஏதாவது வாங்கித் தரச் சொல்லலாம் என்று சட்டைப்பையில் கை இட்டுக் காசு எடுத்தேன். அதற்குள் ஒருவர்-கல்லூரி மாணவன் என்று அப்பால் தெரிந்து கொண்டேன்-ஒரு கையில் காப்பியும் மற்றொரு கையில் இரண்டு வாழைப்பழமும் கொண்டு வருவதைக் கண்டேன். என்ன நடக்கிறது, பொறுத்துத்தான் பார்ப்போம் என்று திரும்பி வந்து எட்டிப் பார்த்தேன். அதற்குள் அவனைச் சுற்றிப் பத்துப் பேருக்குமேல் நின்று கொண்டிருந்தார்கள்.

காப்பி குடிக்கச் சொல்வதற்கு அவனை அசைத்துப் பார்த்தார்கள்; கூப்பிட்டுப் பார்த்தார்கள். ஒவ்வொரு வேளையில் மெல்லிய குரலில் ஏதோ ஒலி வந்தது. ஆனால் கண் திறக்கவில்லை. தண்ணீரும் கையுமாக நின்ற ஓர் ஆள் மறுபடியும் அவன் முகத்தில் தண்ணீரைத் தெளித்து வாயைத் திறந்து கொஞ்சம் தண்ணீர் உள்ளே விட்டார். மெல்லக் கண் திறந்து பார்க்கும் காட்சியைக் கண்டோம். உடனே ஒரு மாணவர் எழுப்பி உட்காரவைத்தார். இன்னொருவர் கையில் இருந்த காப்பியை நீட்டினார். அந்தக் காப்பியைக் கண்டதும், மயக்கத்தில் இருந்த அவனுடைய கைகள் ஒரே ஆவலாக அந்தக் காப்பிக் குவளையை இழுத்து வாயில் வைத்துக் கொண்டன. ''சூடு, சூடு, பார்த்து, பார்த்து'' என்று எதிரில் இருந்தவர் சொல்வதற்குள் காப்பி முழுதும் எப்படியோ வாயினுள் சென்றுவிட்டது. அப்போது அவனுடைய கண்களில் புலப்பட்ட ஆவலையும் வேட்கையை யும் நான் எப்போதுமே கண்டதில்லை. அந்தக் கண்கள் காப்பியை யும் குவளையையும் சேர்த்து வாய்க்கும் கொடுக்காமல், தாங்களே விழுங்கிவிடுவன போல் அந்தப் பார்வை இருந்தது. உடனே அவனுடைய முகத்தில் வாட்டம் இருந்தாலும் துன்பம் இல்லை;

களைப்பு இருந்தாலும், பசிக்கொடுமை இல்லை. இப்போதோ பல்லை இளித்துக்கொண்டு, தலையைத் தொங்கவிட்டுக் கொண்டு, சாய்ந்து சாய்ந்து, ஏதோ சொன்னான். யார் காதிலும் அந்தச் சொற்கள் கேட்கவில்லை. தரையில் சாய்ந்துவிட விரும்பினான். வேண்டாம் என்று தடுத்து ஒருவர் மாரியம்மன் கோயில் சுவர் பக்கமாக நகரச் சொல்லி அந்தச் சுவரில் சாயச் செய்தார். அதற்குள் இன்னொருவர் மற்றொரு குவளைக் காப்பி யும் ரொட்டித்துண்டும் வாங்கி வந்து நீட்டினார். அவனுடைய பசிக்கொடுமையால் உடனே அவைகளும் மறைந்தன. வாழைப் பழங்களும் உடனே மறைந்தன. 'அப்பாடா' என்று அயர்ந்து சாய்ந்து, சுற்றிப் பார்த்து மருண்டு கண்ணீர் விட்டான். எல்லோருக்கும் இரக்கம் மிகுந்துவிட்டது.

''எந்த ஊர் அப்பா?'' என்றார் ஒருவர்.

''மதுரை'' என்றான் சிறிது தெளிவான குரலில்.

''எங்கே வந்தாய்?''

''பிழைக்கத்தான் அய்யா! என் கதி...!''

''போகட்டும்; என்ன உடம்புக்கு?''

''ஐந்து நாளாச்சு அய்யா'' என்று சொல்லி வயிற்றை அடித்துக்கொண்டு கண்ணீர் கலங்கினான்.

உடனே கூட்டம் மெல்ல மெல்லக் கலையத் தொடங்கியது. நான்கு பேர் நின்றார்கள்.

''எழுந்து நடக்க முடியுமா?'' என்று கேட்டேன்.

''இன்னும் கொஞ்ச நேரம் பொறுங்கள், சாமி'' என்று கெஞ்சும் குரலில் சொல்லி முகத்து வியர்வையைத் துடைத்து, கால்களை நீட்டிக்கொண்டும் மடக்கிக்கொண்டும் இருந்தான்.

பிறகு அங்கிருந்த சிலரும் மெல்ல நகர்ந்தார்கள். காப்பி கொடுத்த மாணவர் மட்டும் அங்கே நின்று கொண்டிருந்தார். பக்கத்தில் இருந்த கல்லூரி மணி அடித்தது. அந்த மணி ஒலியைக் கேட்டதும், அவரும் திரும்பித் திரும்பிப் பார்த்தார். இறுதியில் அவரும் புறப்பட்டுப் போகவே, நான் மட்டும் அங்கே நின்றேன். அந்த இளைஞனுடைய உண்மையான நிலையைக் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும் என்று ஏதோ ஒருவகை வேட்கை என் மனத்திலிருந்து தூண்டியது. அதனால் தான் நான் புறப்பட முடியாமல் அங்கே நின்று விட்டேன்.

''எழ முடியுமா?'' என்று மறுபடியும் அவனைக் கேட்டேன்.

''உடம்பு அசதியாக இருக்கிறது, சாமி'' என்றான்.

''வீடு வரைக்கும் வந்தால் வயிறாரச் சாப்பிட்டு வரலாம்'' என்று அழைத்தேன்.

''வீடு எங்கே? சொல்லுங்கள். கொஞ்சம் களைப்புத் தீர்ந்ததும் நானே வருவேன்'' என்றான்.

''இவ்வளவு களைப்பு ஏற்பட்ட பிறகு நீ ஏன் இந்த வழியில் நடந்து வர வேண்டும்? அதுவும் நடுப்பகல் வெயிலில் இப்படித் தார்ச் சாலையில் நடந்து வரலாமா?'' என்றேன்.

''இன்னும் கொஞ்சம் தூரம் தானே? இந்த மாரியம்மன் கோயிலுக்கு எப்படியாவது போய்ச் சேர்ந்துவிட வேண்டும் என்று தள்ளாடிக் கொண்டே வந்தேனுங்க!'' என்று சொல்லிவிட்டு அமைதி ஆனான். பிறகு கண்ணீர் கலங்கித் தன் அழுக்கு ஆடைகளால் கண்களைத் துடைத்துக்கொண்டான். ஏதோ உண்மைக் காரணம் இருக்க வேண்டும் என்று நானும் பொறுத்திருந்தேன்.

ஒரு பெருமூச்சு விட்டு, ''நான் பிழைக்க மாட்டேனுங்க'' என்று அழுதான். என்னால் ஆன வரையில் தேறுதல் கூறினேன். ''சொந்த ஊரில் சாகாமல் இப்படிப் பட்டணத்தில் சாக வேண்டுமா?'' என்று விம்மி விம்மிச் சொன்னான். ''அதனால் தான் இந்தக் கோயிலுக்கு வந்து உயிரை விடலாம் என்று வந்தேன்'' என்று கலங்கிச் சொன்னான்.

''நீதான் திக்கற்றவன் ஆச்சே. உனக்கு எங்கே இறந்தால் என்ன? இந்தக் கோயில்மேல் பக்தி என்ன?'' என்று மெல்லக் கேட்டேன்.

''பக்தி இல்லை சாமி. என்னோடு வந்தவன் - எங்கள் ஊரான் இங்கே அடிக்கடி வந்து தேங்காய்பழம் வைத்துப் பூசை செய்துவிட்டுப் போவது வழக்கம். அவன் வருவான். சாகும் போது அவனாவது பக்கத்தில் இருந்து பார்த்துக் கொள்வான் என்றுதான் இங்கு வந்தேன்'' என்றான்.

இதைக் கேட்டதும், இன்னும் பெரிய கதைகள் இருக்கும் என்று நம்பிப் பேச்சை நிறுத்தி, எழுந்து வீட்டுக்கு வருமாறு சொன்னேன். மெல்ல எழுந்தான். கால்கள் பின்னிக்கொள்ளும் நிலையில் தளர்ந்து அடி எடுத்து வைத்து நடந்துவந்தான். வழியில் உள்ள ஒரு பாலத்தின் சுவரின் மேலும், ஒரு வீட்டுத் திண்ணையின் மேலும் இருமுறை உட்கார்ந்து மூச்சுவிட்டு எப்படியோ வீடு வந்து சேர்ந்தான். சாப்பிட்டு முடியும் வரையில் ஒன்றும்

கேட்பதில்லை என்று இருந்தேன். உண்ட பிறகு அவன் முகத்தில் களைப்பும் தெளிவும் கலந்து விளங்கின. திண்ணையின் கீழே மெல்லச் சாய்ந்தான். ''சாமி! உங்களுக்கு எவ்வளவோ புண்ணியம்! கொஞ்சநேரம் இங்கே படுத்திருந்து விட்டுப் போய்விடுவேன்'' என்றான். இதுதான் வாய்ப்பு என்று நானும் என் ஐயம் தீரக் கேட்கத் தொடங்கினேன்.

''உங்கள் ஊரான் கோயிலுக்கு வருவதாகச் சொன்னாயே. அவனுக்கு என்ன வேலை? அவன் நாள்தோறும் கோயிலுக்கு வருகிறானா!'' என்று பல கேள்விகள் கேட்டேன்.

''அவன் எப்படியாவது இரவு படுப்பதற்குமுன், ஒவ்வொரு நாளும் இந்தக் கோயிலுக்கு வராமல் போவதில்லை. ஒருவேளை தவறிவிட்டாலும், அவன் இருக்கும் இடத்திற்குப் பக்கத்தில் உள்ள எந்தக் கோயிலுக்காவது போய்க் கும்பிட்டுவிட்டுப் படுத்துக்கொள்வான். அப்போதும் இந்தக் கோயில்மேல்தான் நினைவு இருக்கும்'' என்று கேட்டதற்கெல்லாம் விடை கூறினான்.

இவ்வளவெல்லாம் சொல்லியும் அவனுடைய தொழிலை யும் பெயரையும் சொல்லாமல் மறைத்துவந்தான். அதனால் அவற்றைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற ஆவலும் எனக்கு மிகுதியாயிற்று. வற்புறுத்திக் கேட்டதன் பிறகு, தன்னைப் போலவே கூலிவேலை செய்து பிழைப்பவன் என்றும், ஆனால் தன்னைப்போல் காசு கிடைக்காமல், கூலி வேலை கிடைக்காமல், உணவு கிடைக்காமல் திண்டாடுவதே இல்லை என்றும், அவன் பெயர் வேலன் என்றும் தெரிவித்தான். பெயர் வேலன் என்று அறிந்ததும், மயங்கி விழுந்து கிடந்தபோது ''வேலா வேலா'' என்று அவன் வாய் பிதற்றியது நினைவிற்கு வந்தது. அவனுடைய நண்பனிடத்தில் எவ்வளவு நம்பிக்கை வைத்திருந்தால், உணர்விழந்த காலத்திலும் அவன் பெயரைச் சொல்லிக் குழற முடியும் என்றும், அப்படிப்பட்ட உண்மை நண்பன் நாள் தவறாமல் பூசை செய்யும் நல்ல நிலைமையில் இருக்கும்போது, இவன் மட்டும் ஏன் வாட வேண்டும் என்றும் நான் வியந்து அமைதியானேன். அதற்குள் அந்த இளைஞனை உறக்கம் ஆட்கொள்ள வந்ததை உணர்ந்தேன். சிறிது நேரத்தில் குறட்டை விட்டு உறங்கும் நிலைமை அடைந்தான்.

நான் எழுந்து போய் என் கடமைகளை முடித்துக் கொண்டு திரும்பி வந்து, அந்தத் திண்ணைமேல் சமக்காளம் விரித்துப்

படுத்துக்கொண்டு, அவனைப் பற்றியும் அந்த வேலனைப் பற்றியும், வேலன் தொழில் எதுவாக இருக்கும் என்பதைப் பற்றியும் எவ்வளவோ எண்ணிப் பார்த்தேன். உண்மை அறிய முடியாமல் மயங்கிக்கொண்டிருந்தேன். எப்படியாவது கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும் என்று துணிந்தேன். சிறிது நேரம் கழிந்தது.

திடீரென்று அவன் எழுந்து உட்கார்ந்து, ''நீங்கள் இல்லாவிட்டால், நான் இன்றைக்குச் செத்தே போயிருப்பேன். என்னோடு வந்தவன் முனிசாமி என்று ஒருவன் அப்படித்தான் பட்டணத்து மண்ணுக்குப் பலியானான்'' என்று பக்கத்தில் இருந்த ஒரு கல்லையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். எழுந்த ஐயங்கள் தீர்வதற்கு முன்னே இன்னொரு முனிசாமி கதையும் புகுந்துவிட்டதே என்று எண்ணிக்கொண்டு, ''அவனும் வேலனோடு வந்தானா? வேலனுக்குப் பணமும் சாப்பாடும் கிடைத்தபோது இந்த முனிசாமி மட்டும் ஏன் பட்டினியால் சாக வேண்டும்?'' என்று கேட்டேன்.

''வேலன் தைரியம் எங்களுக்கு வராது. வேலன் பள்ளிக் கூடத்திலும் சில மாதம் படித்திருக்கிறான். நான் படிக்கவே இல்லை. முனிசாமி மூன்றாவது படித்து நின்று விட்டான். தவிர, வேலன் செய்வதெல்லாம் முனிசாமிக்குப் பிடிப்பதில்லை. அது நல்லது அல்ல, பாவம் என்று முனிசாமி அடிக்கடி சொல்லுவான். அதனால் வேலனுக்குக் கோபம். அவன் முனிசாமிக்கு உதவி செய்வதே இல்லை. எனக்குக் கொடுக்கும் பணத்தில் கொஞ்சம் எடுத்து வேலனுக்குத் தெரியாமல் முனிசாமிக்குக் கொடுப்பேன். அவன் அதையும் வாங்க மாட்டான். வேலன் கொடுத்த காசு பாவக் காசு, அது எனக்கு வேண்டா, அதைவிட உயிரை விடலாம் என்று பிடிவாதமாய் வாங்க மறுத்துவிடுவான். அதனால் பல நாள் பட்டினியிருக்க வேண்டி ஏற்பட்டது. ஒருநாள் ர'பிலில் வரும்போது தலை கொடுத்துவிட்டான். அதுவும் எனக்குத் தெரியாது. வேலன்தான் அந்தப் பிணத்தைப் பார்த்ததாக இரண்டு நாள் கழித்துச் சொன்னான் எனக்காவது, அம்மாவும் இல்லை, அப்பாவும் இல்லை. நான் செத்தால் அழுவாரும் இல்லை. அந்த முனிசாமிக்கு அம்மா இல்லாவிட்டாலும், அப்பா இருக்கிறார். அவர் ஏழை. இருந்தாலும் கேள்விப்பட்டால் என்ன பாடு படுவாரோ'' என்று சொல்லிப் பல பல என்று கண்ணீர் விட்டான். இதுதான் நல்ல சமயம் என்று, நான் தேறுதல் சொல்வதுபோல், ''நீ அவசரப்பட்டுப் பைத்தியக்காரனைப் போல் உயிரைப்

போக்கிக்கொள்ளாதே. என்னால் ஆன உதவி செய்வேன். கடும்பசியாக இருக்கும்போதெல்லாம் இங்கே வந்து போ. உண்மையை மறைக்காமல் சொல்லும்படி பலமுறை கேட்டேன். யாரிடமும் வெளிப்படுத்த மாட்டேன் என்றும், தீமை ஒன்றும் நேராமல் பார்த்துக்கொள்வேன் என்றும் உறுதி கூறிய பிறகே அதைப்பற்றி வாய் திறந்தான். அப்போதும், நீண்ட முகவுரைக்குப் பிறகே சொல்லத் தொடங்கினான்.

''நீங்கள் யாருக்கும் சொல்லக் கூடாது, சாமி. சொன்னால் என் உயிருக்கும் முடிவுதான். முனிசாமி எங்காவது போலீசாரிடம் தன்னைப் பற்றிச் சொல்லிவிடுவானோ என்று அவன் பல நாள் பயப்பட்டான். அதனால் முனிசாமிமேல் சந்தேகமும் கொண்டான். ஆனால் முனிசாமி மிக நல்லவன்; பகையாளிக்கும் தீங்கு செய்ய மாட்டான். வேலனும் நல்லவன்தான். வேறு வழியில்லை என்றுதான் இந்தத் தொழில் செய்கிறான். எனக்கு அதை நினைத்தாலும் பயமாக இருக்கிறது. ஒருநாள் ஒரு விலையுயர்ந்த பேனாவைக் கொடுத்து வைத்திருக்கச் சொன்னான். அன்றெல்லாம் நான் வெளியே திரியாமல் ஒரு மூலையில் முடங்கியிருந்தேன். போலீசாரைக் கண்டாலும் நடுக்கமாக இருந்தது. வேலன் தைரியம் வராது. யாருக்கும் சொல்லாதீர்கள், சாமி'' என்று சொல்லி முடித்துக் கெஞ்சுவது போல் என் முகத்தைப் பார்த்தான். மறுபடியும் உறுதி கொடுத்தேன். இங்கும் அங்கும் திரும்பிப் பார்த்தபடியே பேசினான்.

''அவன் பட்டணத்துக்கு வந்த நாலாம் நாளே ஒரு கூட்டத்தில் சேர்ந்துவிட்டான். அந்தக் கூட்டத்தில் ஐந்தாறு போக்கிரிகள் இருக்கிறார்கள். அவர்கள் எந்த நேரமும் சைனா பசாரிலிருந்து மூர்மார்க்கெட் வரையிலும் எங்காவது நின்று கொண்டும் திரிந்து கொண்டும் இருப்பார்கள். சில வேளைகளில் பஸ் நிற்கும் இடங்களில் நிற்பார்கள். ஆட்கள் கூட்டமாகச் சேரும் இடங்களிலே அவர்கள் நடுவில் திரிந்து கொண்டிருப்பார்கள். வேலன் அவர்களோடு சேர்ந்துவிட்டான். எனக்கோ முனிசாமிக்கோ அது பிடிக்கவில்லை. ஆனால், நாங்கள் கூலியும் கிடைக்காமல் பட்டினி இருந்த போதெல்லாம் எங்களுக்குக் காப்பி, பழம் எல்லாம் வாங்கிக் கொடுத்துக் காப்பாற்றினவன் அவன்தான். ஒரு நாள் வேலனிடத்தில் பத்து ரூபாய் நோட்டு ஐந்து பார்த்தோம். யாரோ சட்டைப்பையில் பணப்பை (மணிபர்ஸ்) வைத்துக்கொண்டு போனதாகவும், அதை அந்த ஐந்தாறு பேரில்

ஒருவன் கத்தரித்து இன்னொருவன் கையில் கொடுத்ததாகவும், அது அப்படியே கைமாறி மாடர்ன் கபேயிலிருந்து சென்ட்ரல் ஸ்டேஷன் வரையில் வந்ததாகவும், அது வேலன் கைக்கு வந்தபோது, அதிலிருந்து ஐந்து நோட்டு எடுத்து வைத்துக் கொண்டதாகவும் சொன்னான். இதைக் கேட்டதும் முனிசாமி, எங்கள்மேல் கோபத்தோடு புறப்பட்டான். வேலன் ஓடிப்போய் அவனுடைய இரண்டு கைகளையும் பிடித்துக்கொண்டு, போலீசாரிடம் சொல்லாதிருக்குமாறு கெஞ்சினான். இனிமேல் அந்தத் தொழில் செய்வதில்லை என்று வாக்குறுதி கொடுக்கும் படி முனிசாமி கேட்டான். வேலன் வாக்குறுதியும் கொடுத்தான். ஆனால் சொன்னபடி நிற்கவில்லை. ஒருநாள் உங்களைப் போல் ஒருவர் பணப்பை போய்விட்டதாகவும், இருநூறு ரூபாய் இழந்ததாகவும் அழுதுகொண்டே சைனா பசாரில் சொன்னார். அதைக் கேட்டபோது முனிசாமி என்னைத் தனியே அழைத்துக் கொண்டுபோய், ''வேலன் இப்படிப் பலரை அழவைத்துப் பாவம் தேடிக் கொள்கிறானே'' என்றான். வேலனை நான் தனியே ஒருநாள் உருக்கத்தோடு கேட்டேன். தான் ஒன்றும் செய்வதில்லை என்றும், மற்றவர்களுக்குத் துணையாக இருந்து, திருடிய பொருள் கைமாறும்படி செய்வதாகவும் சொல்லிச் சத்தியம் செய்தான். முனிசாமி இறந்த பிறகு நான் வேலனை ஒன்றுமே கேட்பதில்லை. எப்படியாவது போகட்டும் என்று விட்டுவிட்டேன். ஆனால், நான் பட்டினி இருந்ததைப் பற்றியும் வருத்தப்படவில்லை. ஐந்து நாளாக அவனைப் பார்க்கவில்லை. இந்தக் கோயிலுக்கும் அவன் ஐந்து நாளாக வரவில்லை. வந்திருந்தால் எனக்குத் தெரியும். கிழக்கு இறவாணத்து மூலையில் கல்சந்தில் தேங்காய் கொஞ்ச மாவது வைக்காமல் போக மாட்டான். ஐந்து நாளாக அங்கே தேங்காயும் இல்லை. சைனா பசாரிலும், மூர் மார்க்கெட்டிலும் தேடினேன். எங்கும் கிடைக்கவில்லை. என்னாலும் நடக்க முடியாதபோதுதான் இந்தக் கோயிலில் இருந்து உயிரை விட வந்தேன். இரவில் நேரம் கழித்து வந்தால் பார்க்க முடியும் என்று வந்தேன். கையில் காசு அகப்படாத கராணத்தால் தேங்காய் வாங்க முடியாமல் போனதோ அல்லது கூட்டாளிகள் துரத்திவிட்டார் களோ அல்லது போலீசார் பிடித்துச் சிறையில் வைத்துவிட்டார் களோ, என்ன ஆனானோ, ஒன்றும் தெரியவில்லை. என் மனத்தில் ஒரே கவலையாக இருக்கிறது. தூங்கிக்கொண்டே இருந்தேன். அதை நினைத்துத்தான் திடுக்கிட்டு எழுந்தேன்'' என்றான்.

''என்றைக்கும் ஆபத்து பிக்பாக்கெட்'' என்று சொல்லி முடிப் பதற்குள், அவன் எழுந்து என் இரண்டு கால்களையும் பிடித்துக் கொண்டு, ''சாமி, சொல்லிவிடாதீர்கள்'' என்று கண்ணீர் விட்டுக் கெஞ்சினான்.

மறுபடியும் அவனுக்கு நம்பிக்கை ஊட்டுவதற்குள் போதும் போதும் என்று ஆகிவிட்டது.

கொஞ்ச நேரம் எதையோ உற்றுப் பார்த்துக் கொண்டிருந் தான். பிறகு, அவனே என்னைப் பார்த்து, ''ஒருமுறை போலீசாரிடம் என்னைக் கொண்டு போய்ச் சேர்த்து, இரண்டு நாள் சிறையில் இருக்கும்படியாகவும், மூன்றாம் நாள் வெளியே அழைத்து வந்துவிடுவதாகவும் உறுதியாகச் சொன்னான். ஒரு குற்றமும் செய்யாத நான், அவனுக்காகச் சிறையில் அடைப்பட்டு இருந்தேன். ஆனால், சொன்ன சொல் தவறாமல் அவன் மூன்றாம் நாள் வந்து என்னை அழைத்துக் கொண்டுபோனான். போலீசார் யாரும் அவனுக்குப் பகையாளி அல்ல, நாள்தோறும் நிறையப் பணம் வைத்திருக்கிறபடியால், அவனிடம் எல்லாரும் அன்பாகப் பழகுகிறார்கள். ஆனால், முனிசாமியும் நானும் சைனா பசாரில் நடப்பதற்குக்கூடப் பயந்தோம். அப்படி இருந்தும் எங்களை எல்லாரும் மிரட்டினார்கள். வேலன் உங்களைப்போல் வெள்ளை வெளேர் என்று மடிப்பு வேட்டியும், மடிப்புச் சொக்காயும் சிலவேளைகளில் கோட்டும் போட்டுக்கொண்டு திரிவான். சில நாட்களில் கடைகளில் வாடகைக்கு டவுசர் வாங்கி நல்ல செருப்புப் போட்டுக்கொண்டு திரிவான். இவ்வளவு தைரியம் இருந்தும், ஐந்து நாளாக வரவில்லையே, கண்ணில் படவில்லையே என்பதை நினைக்கும்போது, வயிறு பகீர் என்கிறது. எங்காவது ஆசுபத்திரியில் இருக்கிறானோ அல்லது சிறையில் இருக்கிறானோ, தெரியவில்லை. நான் நோயாளியாக இருந்தாலும் அவன் பார்த்துக்கொள்வான்; சிறையில் இருந் தாலும் அவன் வந்து விடுதலை செய்துகொண்டு போவான். அவனிடம் பணம் இருக்கிறது. ஆனால் நான் அவனை எங்கே தேடுவது? என்ன உதவி செய்வது? எப்படி விடுதலை செய்வது? என்னிடம் பணம் ஏது?'' என்று சொல்லி ஒரே கலக்கமாகப் பைத்தியம் பிடித்தவன்போல் பழைய கல்லையே உற்றுப் பார்த்துப் பெருமூச்சு விட்டான்.

அதற்குள் ஒருவர் என்னைத் தேடிக்கொண்டு வீட்டை நோக்கி வந்து உள்ளே நுழைந்து, ''நல்ல காலம்; வெளியே போய் விட்டீர்களோ என்று நம்பிக்கை இல்லாமல் வந்தேன்'' என்று சொல்லிக்கொண்டே அணுகினார். அவரை உள்ளே அழைத்துச்

சென்று பேசிக்கொண்டிருந்தேன். பேச்சு முடிந்ததும் வெளியே வந்து பார்த்தபோது அந்த இளைஞன் அங்கே இல்லை. எவ்வளவு உறுதி கூறியும் என்மேல் அவனுக்கு நம்பிக்கை இல்லை என்று உணர்ந்தேன். 'போனதும் நன்மையே, நமக்கு ஏன் இந்தத் தொல்லை?' என்று நானும் அமைதி அடைந்தேன்.

இது நடந்து இரண்டு வாரம் கழிந்து, ஒரு நாள் மாலையில் நல்ல நிலவொளியில் வீட்டை நோக்கி வந்துகொண்டிருந்தேன். வழியில் அந்த மாரியம்மன் கோயிலைக் கண்ட கண், என் பழைய நினைவைத் தூண்டியது. அங்கே ஓர் இளைஞன் விழுந்து வணங்கிக்கொண்டிருந்தான். எதிரே ஒரு சீப்பு வாழைப் பழமும் பெரிய தேங்காய் ஒன்றும் இருந்தன. தேங்காயை உடைத்துக் கர்ப்பூரம் ஏற்றினான். கைகளைக் குவித்தபடியே நெடுநேரம் நின்று ஏதோ பார்த்துக்கொண்டிருந்தான். எனக்கு அந்த வேலன் நினைவு வந்தது. இருக்காது, இவர் யாரோ உண்மையான அன்பர் என்று நடக்க எண்ணினேன். எதற்கும் பார்த்துவிட்டுப் போகலாம் என்று இளைப்பாற வந்தவன் போல் நடித்துக் கோயிலை அடுத்த திண்ணையின்மேல் உட்கார்ந்து பார்த்துக் கொண்டிருந்தேன்.

அந்த வாழைப்பழச் சீப்பை எடுத்துத் தெருவில் போய்க் கொண்டிருந்த சில பிள்ளைகளை அழைத்து, ஆளுக்கு ஒன்றாகக் கொடுத்தான். ஒரு மூடித் தேங்காயைத் தோண்டி ஆளுக்குக் கொஞ்சம் கொடுத்தான். சிறுவர்கள் போய்விட்ட பிறகு மற்ற முடியை எடுத்துக்கொண்டு கிழக்கு இறவாணத்து மூலைக்கு வந்தான். அந்தக் கல்சந்தில் கை வைத்து எதையோ எடுத்து எடுத்து மெல்ல வீசி எறிந்தான். ஒவ்வொரு முறையும் ஒரு பெருமூச்சு விட்டது எனக்குக் கேட்டது. கடைசியில் மெல்ல நகர்ந்தான். சிறிது தொலைவு நடந்ததும், கைக்குட்டையை எடுத்துக் கண்களைத் துடைத்துக்கொண்டே செல்வதைக் கண்டேன். என் நெஞ்சத்தில் ஏதோ துயரம் குடிகொண்டது. சிறிது நேரம் கழித்து எழுந்து, அந்தக் கல்சந்தை அணுகிக் கைவிட்டுப் பார்த்தேன். அந்தத் தேங்காய் மூடியை அப்படியே வைத்திருந்ததைக் கண்டேன். என்னை அறியாமல், என் வாய் 'அய்யோ' என்று ஒலித்தது. அப்பால் வந்தேன். அவன் எதையோ எடுத்து வீசி எறிந்தானே, அது என்ன பார்க்கலாம் என்று அந்த இடத்திற்குப் போய்ப் பார்த்தேன். மேகங்கள் விலகிச் செல்ல, முன்னிலும் நன்றாய் நிலா ஒளி பரப்பியது. அந்த இடத்தில் தேங்காய்த் துண்டுகள் விழுந்து கிடந்தன; வாடிக் கிடந்தன; எறும்பு மொய்த்துக் கிடந்தன; எடுப்பாரின்றிக் கிடந்தன; கண்ணீரால் நனைந்து கிடந்தன.



# காற்று

## கு. அழகிரிசாமி

### 1

அந்தத் தெருவில் நூறு வீடுகள் இருக்கும். ஆனால் ஒரு வீட்டில்தான் தெருத் திண்ணை இருந்தது. மற்ற வீடுகள் சிலவற்றில் திண்ணை இருந்தபோதிலும், அது கம்பிக் கதவுக்கு உட்புறமாக இருந்தபடியால், அதைக் கணக்கில் சேர்க்க முடியாது. பெரும்பாலான வீடுகள் திண்ணையில்லாத நவநாகரிக மோஸ்தரிலேயே கட்டப்பட்டவையாகும்.

மேற்படி வீட்டின் தெருத் திண்ணை அக்கம் பக்கங்களில் வசிக்கும் குழந்தைகளுக்கு ஒரு பாலைவனச் சோலையாக இருந்தது. அவர்கள் தங்கள் தங்கள் வீடுகளை விட்டு வெளியே வநதால், ஒரு முக்கால் மைல் வட்டாரத்தில் அந்தத் திண்ணையைத் தவிர வேறு எங்கும் ஒதுங்க முடியாது. இதனால் எப்பொழுது பார்த்தாலும் திண்ணையில் ஐந்தாறு குழந்தைகள் விளையாடிக் கொண்டிருக்கும். விளையாட்டு என்றால் கூச்சல் இல்லாமல் இருக்குமா? உற்சாகம் மீறியதும், கூச்சலும் கும்மாளமும் அதிகமாகிவிடும். உடனே வீட்டின் உள்ளே இருந்து ஒருவன் ஓடிவருவான். தினந்தோறும் விரட்டியடித்தும் கூட, குழந்தைகள் திரும்பத் திரும்ப வந்து அமர்க்களம் பண்ணுவதைத் கண்டு அவனுக்குக் கோபம் சிரசை முட்டிக் கொண்டிருந்தது. அதனால் கைக்கு எட்டிய குழந்தைகளை அடித்து விரட்டுவான்; எட்டாத குழந்தைகளை வாய்க்கு வந்தபடி திட்டி விரட்டுவான். ஒரு வழியாகத் திண்ணை காலியாகும். ஆனால், இது எவ்வளவு நேரத்துக்கு? அவன் தலை மறைந்தால் போதும், மறுபடியும் திண்ணைக்குக் குழந்தைகள் ஓடி வந்துவிடுவார்கள். அடியையும் மிரட்டலையும் வசவையும் ஒரு பொருட்டாகவே அவர்கள் கருதவில்லை. அதற்குப் பதிலாகத் தங்கள் விளையாட்டின் ஒரு பகுதியாகவே நினைத்துவிட்டார்கள்போல் தோன்றியது.

வீட்டுக்குள் வாடகை கொடுத்துக் குடியிருக்கும் ஆசாமி, குழந்தைகளை நிரந்தரமாக ஒழித்துக் கட்டுவதற்குச் சமயம் பார்த்துக் கொண்டிருந்தான். ஒரு குழந்தையையாவது பயங்கர மாகக் கீழே இழுத்துப் போட்டு, மூச்சுப் பேச்சு அற்றுப் போகும் வரையில் மிதித்துத் துவைக்க வேண்டுமென்பது அவனது நீண்ட நாள் திட்டம். அவ்வாறு செய்தால், தன் கோபமும் தணிந்து சற்று ஆறுதல் பிறக்கும்; நாலைந்து நாட்களுக்காவது குழந்தைகள் அந்தப் பக்கம் தலைகாட்டாமல் இருப்பார்கள் என்று நினைத்தான்.

ஒருநாள் அவனுக்கு வேலையில்லை. அதனால் வெளியே போகவேண்டிய அவசியமில்லாமல், வீட்டுக்குள்ளேயே உட்கார்ந்து கொண்டிருந்தான். சும்மா உட்கார்ந்திருக்கவில்லை. குழந்தைகள் எப்போது வரும் என்று ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டுதான் உட்கார்ந்திருந்தான்.

உரிய காலத்தில் குழந்தைகள் வந்துவிட்டார்கள். வெறுமனே கைவீசிக்கொண்டு வந்தார்கள் நான்கு பேர். இரண்டு சிறுமிகள் இரண்டு கைக்குழந்தைகளையும் தூக்கிக் கொண்டு வந்தார்கள். குழந்தைகளைத் திண்ணையின் ஒரு மூலையில் விட்டார்கள். உடனே விளையாட்டும் ஆரம்பமாகிவிட்டது. அவர்கள் உலகத்தையே மறந்துவிட்டனர். சொல்ல முடியாத உற்சாகம். அவ்வப்போது தெருவே எதிரொலிக்கும்படியான சிரிப்பு, கைதட்டல். இப்படித் தம்மை மறந்து ஆனந்தமாக விளையாடிக் கொண்டிருந்த சமயத்தில், சமயம் பார்த்துக் காத்திருந்த ஆசாமி புலிப் பாய்ச்சலாகப் பாய்ந்து வெளியே வந்தான். வந்த வேகத்தில் ஒரு சிறுவனை இடுப்பில் மிதித்துத் தெருவில் போய் விழும்படி தள்ளினான். ஒரு பெண் குழந்தையின் தலை முடியை வலது கையால் எட்டிப் பிடித்தான். இதைப் பார்த்து மற்ற குழந்தைகள் ஒரே ஓட்டமாக ஓடி மறைந்து விட்டன. தெருவில் வந்து விழுந்த சிறுவன் அழுது கூப்பாடு போட்டுக்கொண்டே எழுந்து, நொண்டி நொண்டி நடந்து கொண்டு தன் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தான்.

குடித்தனக்கார ஆசாமி, அந்தச் சிறுமியின் கூந்தலை வலது கையிலிருந்து இடது கைக்கு மாற்றினான். 'இனிமேல் இங்கே வராதே! இனிமேல் இங்கே வராதே!' என்று பத்துப் பதினைந்து தடவையாவது சொல்லியிருப்பான்; ஒவ்வொரு தடவையும் குழந்தையின் கன்னத்தில் பொறி பறக்கும்படி அறை விழுந்து கொண்டிருந்தது. அந்த ஐந்து வயதுக் குழந்தை புத்தி பேதலித்துப்

போய், அழக்கூட பிரக்ஞையின்றி முகத்தை ஒரு மாதிரி கோரமாக வைத்துக் கொண்டு நின்றது. தெருவோடு சென்ற ஒருவன் வந்து விலக்கியிராவிட்டால், குழந்தையின் மூச்சு நிற்கும் வரையிலும் அடி விழுந்திருக்கும்.

விடுதலை பெற்றுத் தன் வீட்டை நோக்கி அடி எடுத்து வைத்த போதுதான், அதற்கு அடிவாங்கியிருக்கிறோம் என்ற ஞாபகம் வந்தது. அதைத் தொடர்ந்து கன்னம் எரியவும் ஆரம்பித்தது. உடனே 'கோ' வென்று அழுதுகொண்டு நாலைந்து வீடுகள் தள்ளியிருக்கும் தன் வீட்டுக்குச் சென்றாள். அதற்குள், சிவந்து தடிப்பேறியிருந்த இடது கன்னம் வீங்கி, இடது கண்ணும் தீக்கங்கு மாதிரி சிவந்துவிட்டது. அவளுடைய அழுகுரலைக் கேட்டு எதிரே ஓடிவந்து ''என்ன? ஏது'' என்று விசாரித்த தாயிடம் அவள் விஷயத்தைச் சொல்லவில்லை. சொல்வதற்கு வார்த்தைகளே உருவாகவில்லை. அடியினால் ஏற்பட்ட அதிர்ச்சியும், அனுமதி இல்லாமல் விளையாடப் போனதற்காக அம்மாவும் அடிப்பாள் என்ற பயமும் சேர்ந்து அவள் நாவைக் கட்டிவிட்டன. அவளால் அப்போது அழத்தான் முடிந்தது.

''சனியன்! சென்னாலும் நிற்காமல் தெருவுக்கு ஓடி ஓடிப் போகுதே!... உனக்கு இதுவும் வேணும்; இன்னும் வேணும்'' என்றாள் அம்மா.

கூட விளையாடும் சிறுவர்களில் எவனாவது அடித்திருப்பான் என்பது அவள் எண்ணம். விஷயத்தைத் தெரிந்து கொள்ளலாம் என்று அவள் தெருவுக்கு வந்து, இரண்டு பக்கமும் திரும்பிப் பார்த்தாள். அவளால் எதையுமே அறிந்து கொள்ள முடிய வில்லை. தெரு வழக்கம்போலவே இருந்தது. உள்ளே திரும்பி வந்து, ''என்ன சனியனே! எங்கேபோய் அடி வாங்கிக்கினு வர்ரே; சொல்லித் தெலையேன்'' என்று சீறினாள்.

அப்பொழுதும் குழந்தையால் பேச முடியவில்லை.

''அப்பா வரட்டும். உன்னைத் தூணோடு, சேர்த்துக் கட்டி வைக்கச் சொல்றேன். அப்பொத்தான் நீ வீட்டிலே கெடப்பே'' என்று சொல்லிக் கொண்டு, தன் வலக்கையால் குழந்தையின் கூந்தலைப் பிடித்துத் தரதரவென்று உள்பக்கம் இழுத்துக் கொண்டு சென்றாள். உள்ளே கொண்டு போய் கைக்குழந்தையின் பக்கம் தள்ளி விட்டு, சமையற் கூடத்தின் புகைக்குள் மறைந்து விட்டாள் அம்மா. அவ்வளவில் சிறுமியின் பயமும் தெளிந்து விட்டது; அழுகையையும் நிறுத்தி விட்டாள். அப்புறம் கைக்

குழந்தைதான் புகை எரிச்சல் தாங்க முடியாமல் அழுது கொண்டிருந்தது. சிறுமி அதற்கு விளையாட்டுக் காட்டி, அழுகையை நிறுத்த வேண்டுமென்றுதான் ஆசைப்பட்டாள்; முயற்சியும் செய்தாள். ஆனால் குழந்தை அக்காளின் விளை யாட்டைக் கண்டு ஏமாந்து விடவில்லை. அதற்கு உடம்பில் என் னென்னவோ கோளாறு. அப்புறம் இந்த ஆளை மறைக்கும் புகை வேறு. கண்கள் எரிந்து, மூச்சும் திணறியது. வீட்டுக்குள்ளேயே சுற்றிச் சுழன்று வரும் புகைக்கு, அந்தத் தாய், அந்தச் சிறுமி, இந்தக் கைக்குழந்தை ஆகிய மூவருடைய நாசித் துவாரங்களைத் தவிர வேறு போக்கிடம் இல்லை. விளையாட்டுக் காட்ட முயன்ற சிறுமியும் புகையால் திணறினாள். தெருவுக்கு எப்பொழுது போவோம் என்றிருந்தது. இனி ஓடினால் அம்மா கழுத்தை முறித்து அடுப்பில் திணித்து விடுவாள் என்று எண்ணி, அறையின் வாசற்பக்கத்துக்குக் குழந்தையை இழுத்துக் கொண்டு வந்து கொஞ்சம் தாராளமாக சுவாசிக்க முயன்றாள். அங்கே, பக்கத்துக் குடித்தனத்திலிருந்து புகை வந்து கொண்டிருந்தது. என்றாலும் அவ்வளவு கனத்த புகையல்ல. சிறுமிக்குக் கொஞ்சம் ஆசுவாச மாக இருந்தது. அந்தச் சின்னஞ்சிறு முற்றவெளிக்கு மேலாகத் தெரியும் வானத்தை ஏக்கத்தோடு பார்த்துக் கொண்டு அப்படியே உட்கார்ந்து விட்டாள். அப்பொழுது அவள் மனம் உண்மையில் வானவெளியை நினைத்து ஏங்கவில்லை; திண்ணையை நினைத்துத்தான் ஏங்கியது. 'நாளை முதல் அந்தத் திண்ணைக்குப் போக முடியாதே! போனால் கன்னம் வீங்கும்படியாக அடிவாங்க வேண்டுமே! வீடு திரும்பினால் அம்மா அடிப்பாளே! இனி என்ன செய்வது? எப்படி உயிர் வாழ்வது?' என்று அந்தத் தன் ஐந்தாவது பிராயத்திலே எதிர் காலத்தை எண்ணி அவள் கவலைப்பட்டுக் கொண்டிருந்தாள். திண்ணை என்றால், அவள் நடக்கத் தெரிந்த நாளிலிருந்து அவளுக்குக் காற்றும் வெளிச்சமும் கொடுத்து வாழ்க்கை இன்பத்தை அளித்து வந்த திண்ணை அது. இப் பொழுது அதுவும் போய்விட்டது. இனி திண்ணையும் இல்லை; காற்றும் இல்லை. வாழ்க்கையின் சந்தோஷம் என்பதும் இருக்க முடியாது... அவளுக்கு ஒரு சமயம், தன் வீட்டில் ஏன் தெருத் திண்ணை வைத்துக் கட்டவில்லை என்றும் தோன்றியது. தன் வீடு எதற்காகத் தெருவிலிருந்து வெகுதூரம் உள்ளே தள்ளி ஒரு மூலையில் இருக்க வேண்டுமென்று தன்னையே கேட்டுக் கொண்டாள். திண்ணை வைத்துக் கட்டாததற்காக அப்பாவிடம் அவளுக்குக் கோபமும் வந்தது. அப்பா வீட்டுக்குச் சாப்பிட

வரும்போது, அவரிடமே இதைக் கேட்பது. அழுது, முரண்டு பண்ணி திண்ணை கட்டச் சொல்வது என்று நினைத்தாள். தன்னிடம் பிரியமாக இருக்கும் அப்பன், தன் சொல்லைத் தட்டமாட்டான் என்று அவளுக்கு நம்பிக்கையும் பிறந்தது. அதனால் புகையைத் 'தற்காலிமாகச் சகித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள்.'

கற்பகத்தின் தகப்பன் வேதகிரி வாயையும் வயிற்றையும் கட்டிப் பழகியவன்தானே ஒழிய, எந்தக் காலத்திலும் திண்ணை கட்டியவனல்ல. வருஷம் 365 நாளும் தினந் தவறாமல் ஒரு வேளைச் சாப்பாடின்றிப் பட்டினி கிடக்கிறான். பதினான்கு வருஷ சேவைக்குப் பிறகு இப்பொழுது அவன் வாங்கும் சம்பளம் நாற்பத்தெட்டு ரூபாய். மந்தைவெளியின் ஒரு கோடியில், தன் வீட்டுக்கு மூன்று பர்லாங்கு தூரத்திலேயே ஒரு சிறு ஜவுளிக் கடையில் ஒரு சிப்பந்தியாக வேலை செய்து வருகிறான். சம்பளத்தில் பத்து ரூபாய் வீட்டு வாடகைக்குப் போய் விடும். ஆம், பத்து ரூபாய் வாடகை! சென்னை மாநகரத்தில் அந்த வாடகைக்கு வீடும், அந்த வீட்டில் ஒரு குடித்தனமும் இருக்கிறது என்றால், வீட்டையும் வாழ்க்கையையும் பற்றி அதிகம் சொல்ல வேண்டாம். ஒரே ஒரு அறைதான் வீடு. அதற்குள்ளேயே சமையல் பகுதி. மழைக்காலத்தில் ஒழுகாத பகுதி பார்த்து, கூட்டிச் சுருட்டிப் படுத்திருக்க வேண்டும், வீட்டின் முகட்டில் நாழி ஓடுகளிலிருந்து வெயில் காலத்தில் 'தொப்புத் தொப்பு' என்று தேள் விழுவதும் உண்டு. வீட்டுக்கு வாசல்தான் ஜன்னல். முற்றத் தில் குழாய் இருந்ததால் எப்பொழுது பார்த்தாலும் அங்கே ஈரமாக இருக்கும். அந்த வீட்டுக்குள்ளேயே ஐந்தாறு பகுதிகளில் பத்தும் பதினைந்தும் கொடுத்துக் குடியிருப்பவர்கள் அத்தனை பேருக்கும் குழாயும் முற்றமும் பொது. எந்த வீட்டுச் சப்தமும் எல்லா வீடுகளுக்கும் கேட்கும். எந்த வீட்டுப் புகையும் எல்லா வீடுகளுக்கும் பரவி, சுவாசத்திலும் வானத்திலும் கலக்கும். இப்படிப்பட்ட இடத்தில் வேதகிரியின் மனைவி, கற்பகத்தை யும், மேலும் நான்கு குழந்தைகளையும் பிரசவித்திருக்கிறாள். அவற்றுள், கற்பகத்தையும் கைக் குழந்தைகளையும் தவிர மற்ற குழந்தைகள் செத்துப் போய்விட்டன. அவள் மட்டும் அந்த உடம்பை வைத்துக்கொண்டு இன்னும் சாகாமல் சமாளித்துக் கொண்டு வருகிறாள்.

வேதகிரி கல்யாணம் பண்ணிக்கொண்டு அந்த வீட்டுக்குக் குடித்தனம் வந்தபோது நிலைமை இவ்வளவு மோசமாக

இல்லை. இப்பொழுது குடியிருக்கும் பகுதியோடு, மேலும் ஒரு சிறு அறையையும் சேர்த்தே பத்து ரூபாய் வாடகைக்குப் பிடித்தான். ஆனால் மந்தைவெளியைச் சுற்றி மாடமாளிகை களுடன் புது நகரம் ஒன்று ராக்ஷஸ நாகம்போல் வளைத்துக் கொண்டு கிளம்பவே, அவன் குடியிருந்த பகுதிக்கு விலை மதிப்பு உயர்ந்துவிட்டது. ஒவ்வொரு வீட்டின் மதிப்பும் ஆறு மடங்கு ஏழு மடங்காகக் கூடிவிடவே வாடகையும் உயர்ந்தது. வேதகிரி பத்து ரூபாய்க்குமேல் கொடுக்கத் தனக்குச் சக்தியில்லை என்றான். அப்படியானால் சமையல் பகுதியை மட்டும் தான் பத்து ரூபாய்க்கு விடமுடியும் என்று வீட்டுக்காரன் சொன்னான். வெளியே விரட்டாமல், அம்மட்டுக்காவது இடம் கொடுத்தானே என்று, தன் குடித்தனத்தைச் சமையற்கூடத்துக்குள்ளே ஒடுக்கிக் கொண்டு பக்கத்து அறையைக் காலி செய்து கொடுத்தான். அதன் பின் கற்பகம் பிறந்தாள். பிறந்த நாளிலிருந்து அவள் சமையற் கூடத்தைத்தான் பார்த்திருக்கிறாளே ஒழிய, திண்ணையை, தெரு வாசலை, மரத்தை, மைதானத்தை அனுபவிக்கவில்லை. ஊரின் சுற்றுப்புறம் அழகிய நகரமாக விரிவடைந்ததும், சென்னையின் ஜனத்தொகை பெருகியதும் அவளுக்குப் பெருங் கேடாக முடிந்தது. அவள் அந்த இருட்டறைக்குள் வசிப்பதற்கு, நகரமும், நகரில் வசிக்கும் அத்தனை பேருமே காரணங்கள் என்று சொல்லலாம்போல் இருந்தது.

## 2

வேதகிரி மத்தியானச் சாப்பாட்டுக்கு ஜவுளிக்கடையிலிருந்து வீட்டுக்கு வந்து சேர்ந்தான். வந்ததும் வராததுமாக அவனிடம், கற்பகம் அடி வாங்கி வந்த கதையைச் சொன்னாள் அவன் மனைவி. அதைக் கேட்டதும் அவன் குழந்தையை வெளியே முற்றவெளிக்கு அழைத்து வந்து வெளிச்சத்தில் நிறுத்திப் பார்த்தான். வீங்கிச் சிவந்த கன்னத்தைப் பார்த்ததும் அவன் கண்கள் கலங்கி விட்டன.

''இந்தச் சனியன் ஒரு நிமிசம் வீடு தங்கமாட்டேங்குது. 'குழந்தையைப் பார்த்துக்கொ'ன்னு விட்டுட்டு அந்தப் பக்கம் திரும்பினேன்- அவ்வளவுதான், மாயமா மறைஞ்சிட்டா. இவளை உசிரோடே வச்சிக் கொளுத்தினாத்தான் என் மனசு ஆறும்...'' என்று அவள் சொல்லிக்கொண்டிருக்கும்போது,

''போதும்!...போய் வேலையைப் பார்'' என்று அவள் வாயை அடைத்துவிட்டு, கற்பகத்தைத் தூக்கிக் கொண்டு வீட்டுக்குள்

போனான் வேதகிரி. ''யார் அடிச்சது?'' என்று அவளை அன்பாதரவுடன் கேட்டான்.

திண்ணையில் நடந்த நிகழ்ச்சியை அப்படியே சொன்னாள் கற்பகம்.

அடித்தவனை என்ன செய்ய முடியும்? அவன் வீட்டுத் திண்ணை. அங்கே போய் விளையாடினால் அவன் எதுவும் செய்வான். யார் கேட்க முடியும்? அதற்காகக் குழந்தையை மனைவி சொல்வதுபோல வீட்டுக்குள்ளே கட்டிப்போடுவதா? 'என்ன பாவம் பண்ணினயோ எனக்குக் குழந்தையாப் பிறந்தே!' என்று மகளைப் பார்த்து நொந்து கொண்டே அவளையும் கூட உட்கார வைத்துக்கொண்டு சாப்பிட் டான். வாரத்துக்கு ஒருநாள் விடுமுறை தினத்தன்று தன்னால் சேர்ந்தாற்போல் ஒரு மணி நேரம்கூட அந்த வீட்டுக்குள் உட்கார்ந்திருக்க முடியாதிருக்கும் போது, கற்பகம் வருஷம் முழுவதும் அங்கேயே எப்படி அடைபட்டுக் கிடப்பாள் என்று நினைத்தான். மகளுக்கு எந்த வகையில் விடுதலை அளிக்கமுடியும் என்று யோசித்து யோசித்துப் பார்த்தும் அவனுக்கு ஒரு வழியும் புலப்படவில்லை. ஏதோ அற்ப சாந்தியாகவாவது இருக்கட்டும் என்று கடைக்குத் திரும்பும் போது கற்பகத்தையும் அழைத்துக் கொண்டு போய், ஒரு டீக்கடையில் ஒரு அணாவுக்குப் பக்கடாப் பொட்டலம் வாங்கிக் கொடுத்து வீட்டுக்கு அனுப்பினான். கற்பகம் வீட்டை நோக்கி வந்து கொண்டிருந்தாள். அந்தத் திண்ணையில் குழந்தைகள் வழக்கம்போல் விளையாடிக் கொண்டிருப்பதைப் பார்த்தாள். ஆனால், தானும் போய் விளையாட வேண்டுமென்று அவள் நினைக்கவில்லை; நேரே வீட்டுக்கு வந்துவிட்டாள்.

அன்றிலிருந்து கற்பத்தின் சிறைவாசம் ஆரம்பமாகிவிட்டது. வீட்டைவிட்டு எங்கும் போகக் கூடாது என்று தாய் கண்டிப்பாகச் சொல்லித் தடுத்து நிறுத்திவிட்டாள். மிஞ்சிப் போனால், தெரு வாசலுக்கு வந்து சிறிது நேரம் நிற்கலாம்; அதற்குமேல் அடி எடுத்து வைக்க அனுமதியில்லை. யாருக்கும் சொந்தமில்லாத தெருவுக்குக் கூட அவள் போய் விளையாட முடியவில்லை. அந்தச் சின்னத் தெருவிலும் கார், டாக்ஸி, சைக்கிள் முதலிய வாகனங்களின் போக்குவரத்து அதிகமாக இருந்ததால், அங்கே போகக் கூடாது என்றும் அம்மா எச்சரித்திருந்தாள்.

கற்பகத்துக்கு இரவும் பகலும் திண்ணையைப் பற்றிய கனவுதான். தன் வீட்டில் தெருவைப் பார்த்து ஒரு திண்ணை

இருக்க வேண்டும். அப்பா எப்பொழுது கட்டிக் கொடுப்பார்? அப்பாவிடம் கேட்டதற்கு அவர் ஒரு பதிலும் சொல்லாமல் சிரித்தார். வற்புறுத்திக் கேட்ட பிறகு, ''குழந்தே! உனக்கு என்ன தெரியும்? திண்ணை கட்டவும் வீடு கட்டவும் சக்தி இருந்தால் நாம் ஏன் இப்படி இருக்கிறோம்?'' என்று 'அர்த்தமில்லாமல்' ஏதேதோ சொல்லுகிறார். அவளுக்கு ஒன்றுமே புரியவில்லை. நாலைந்து நாட்களுக்குப் பிறகு, அடி பட்டாலும் பரவாயில்லை, பழைய திண்ணைக்கே போய் விளையாடலாம் என்று ஒரு ஆசை பிறந்தது. ஆனால் அந்த அற்ப ஆசை நீடிக்கவில்லை. பயம் ஆசை யைக் கருக்கிவிட்டது. கடைசியில் வீடே கதி என்று, காற்றும் வெளிச்சமும் இல்லாத அறையில் புகைமூட்டத்துக்கு நடுவில் திக்குமுக்காடிக் கொண்டு கிடந்து தவித்தாள். சோற்றுக்குத் தரித்திரம் ஏற்படுவது போய், காற்றுக்கும் தரித்திரம் ஏற்பட்டு விட்டது. சரியான ஆகாரமின்றி, காற்றடைத்த பையாக அலைந்து திரிந்த கற்பகம், இப்போது காற்றுக்கும் வழியின்றித் திணறினாள்.

நாட்கள் செல்லச் செல்ல அவள் முகத்தில் இருள் படர்ந்தது. கண்கள் ஆழத்தில் அமுங்கிக் கொண்டிருந்தன. உடம்பும் மெலிந்தது. சரியாகச் சாப்பிடக்கூட அவளால் முடியவில்லை. தன்னை வீட்டுக்குள் போட்டு அடைக்கும் அம்மாவும், எந் நேரமும் நச்நச்சென்று அழுதுகொண்டிருக்கும் தம்பியும், திண்ணை கட்டித் தராமல் ஜால்ஜாப்புச் சொல்லும் தந்தையும் தன்னைக் கொல்ல வந்த எமன்களாகவே அவளுக்குக் காட்சி அளித்தார்கள். அவளுடைய பொறுமை எல்லை கடந்து விட்டது. பயந்த சுபாவம் மாறி, திமிற ஆரம்பித்தாள். ஒருநாள் அம்மா வுக்குத் தெரியாமல் பழைய திண்ணைக்கே ஓடிவிட்டாள்.

## 3

நாள் கணக்கில் யோசித்த வேதகிரிக்கு ஒரு நாள் திடீரென்று மார்க்கம் புலப்பட்டது. அதனால் பரம சந்தோஷத்தோடு கடையி லிருந்து வீட்டுக்குத் திரும்பினான், ஒரு நல்ல நாள் பார்த்து, கற்பகத்தைப் பக்கத்துத் தெருப் பள்ளிக்கூடத்தில் சேர்த்துவிட முடிவு செய்தான். ஒரு பிரதான சாலையைக் கடந்து செல்ல வேண்டும் என்பதைத் தவிர, பள்ளிக்கூடம் அருகாமையிலேயே இருந்தது. மத்தியானம் தர்மச்சோறும் போடுகிறார்கள். கற்பகத் துக்கு நல்ல காலம் பிறந்து விட்டது என்று எண்ணிச் சந்தோஷப் பட்டவனாய், மனைவியிடமும் விஷயத்தைச் சொன்னான். மகளின் ஓடுகாலித்தனத்தை ஒடுக்குவதற்கு அது ஒரு நல்ல

உபாயம் தான் என்ற நினைப்பில், வேதகிரி சொன்னதை அவள் ஆமோதித்தாள்.

''பள்ளிக்கூடத்துக்கு அனுப்பினால்தான் இவளுடைய கொட்டம் ஒடுங்கும். எந்த நேரமும் இதுக்கு யாரால் காவல் காக்க முடியும்? அப்படியாவது தொலையட்டும்'' என்றாள் மனைவி.

நல்ல நாளில், கற்பகத்தைப் பள்ளிக்கூடத்துக்கு அழைத்துக் கொண்டு போனான் வேதகிரி. கற்பகத்தை ஒரு மாணவியாகச் சேர்த்துக் கொண்டார்கள். பிரவேசக் கட்டணத்துக்காக ஒரு ரூபாய் செலவாயிற்று. வேறு செலவில்லை. நாலைந்து நாளில் புத்தகம் வாங்கித் தருவதாக ஆசிரியரிடம் சொன்னான் வேதகிரி. அப்புறம் கற்பகத்தைப் பார்த்து, ''பள்ளிக்கூடம் விட்டதும் நேரே வீட்டுக்கு வரணும். பக்கத்து வீட்டுப் பசங்களோடு வந்துவிடு. ரோட்டில் கார், பஸ் போகும்; பார்த்து வரணும் கற்பகம்'' என்று சொல்லி விட்டுக் கடைக்குப் போய்ச் சேர்ந்தான்.

கற்பகத்தின் வாழ்வில் உண்மையிலேயே ஒரு புதுயுகம் ஆரம்பமாகிவிட்டது. விடுமுறை நாட்களில்கூட பள்ளிக்கூடம் போனால் தேவலை என்று நினைத்தாள். வீட்டில் திண்ணை இல்லாத குறை, அவளுக்கு அப்பொழுது குறையாகவே படவில்லை. குறித்த நேரத்தில் பள்ளிக்கூடம் போய், குறித்த நேரத்தில் வீட்டுக்கு வந்து கொண்டிருந்தாள். ஒரு பெரிய பிரச்சனை தீர்ந்தது என்று தாயும் தகப்பனும் மூச்சுவிட்டார்கள்.

புதியதாகக் கிடைத்த விடுதலையினால் கற்பகத்தின் உற்சாகம் பொங்கி வழிந்தது. பள்ளிக்கூடம் போவது என்பது அவளுக்கு ஒரு இன்ப போதையாகவே இருந்தது. ஐந்து மணிக்குப் பள்ளிக்கூடம் விட்டதும் நேரே வீட்டுக்கு வராமல், எங்காவது தெருவில் சுற்றித் திரியலாம் என்று தினமும் ஆசைப்படுவாள். கஷ்டத்திலிருந்து நீங்கிச் சுகம் பெற்றதும், சுகத்தை மென்மேலும் பெருக்குவதற்கே அவள் உள்ளம் விரும்பியது. இந்த நிலையில் ஒரு நாள் அவளுக்குப் பழைய ஞாபகம் ஒன்றுவந்தது - ஏழெட்டு மாதங்களுக்கு முன், தன்னை அப்பாவும் அம்மாவும் சாந்தோம் கடற்கரைக்கு அழைத்துச் சென்றதையும், ஓடியாடி விளையாடு வதற்கு அங்கே கண்ணுக்கு எட்டிய தூரம் வரையிலும் இடம் இருந்ததையும், 'குளுகுளு' என்று காற்று வீசிக் கொண்டிருந்ததை யும், நினைவுகூர்ந்தாள். அவளுக்குத் தெரிந்த வரையில் சாந்தோம் கடற்கரை ஒன்றுதான் வாழ்க்கைக்கு ஏற்ற லட்சிய உறைவிடமாக இருந்தது. அங்கே குறுக்குச் சுவர்கள் இல்லை. எவ்வளவு தூரம்

போனாலும், எங்கே விளையாடினாலும் அடிப்பாரும் தடுப்பாரும் இல்லை. புகை என்பதோ அறவே கிடையாது. அதற்குப் பதிலாகக் காற்றும், சுகமும் வேண்டிய மட்டும் இருந்தன. இதையெல்லாம் எண்ணிப் பார்த்த கற்பகம் பள்ளிக்கூடம் எப்பொழுது விடும் என்று ஆவலோடு காத்துக் கொண்டிருந்தாள். மணிச்சத்தம் கேட்டதோ இல்லையோ, முதல் குழந்தையாகப் புத்தகப் பையுடன் வெளியே ஓடிவந்தாள், பக்கத்து வீட்டுக் குழந்தைகளுக்குத் தெரியாத வண்ணம், தெருவில் இறங்கி, பிரதான சாலையைப் பார்த்து அதிவேகமாக நடந்தாள். சாலைக்கு வந்து சேர்ந்ததும், மூலை திரும்பி, கடற்கரையை லட்சியமாகக் கொண்டு நடக்கத் தொடங்கினாள். தன்னை யாரும் பார்க்க வில்லை என்ற துணிவு ஒரு புறம்; சாலையின் இருமருங்கிலும் கண்ணுக்கு இனிய கட்டிடங்கள் நின்ற அழகு ஒருபுறம். இதனால் சாவதானமாக நடந்து, தெருக்காட்சியை அணு அணுவாக ரஸித்துக்கொண்டு சென்றாள். கண்ணில்பட்ட ஒவ்வொன்றுமே அழகாக, கவர்ச்சியாக, அதிசயமாக இருந்தது. எத்தனை மாடி வீடுகள்! எத்தனை மரங்கள்! எத்தனை பூஞ் செடிகள்! பிரம்மாண்டமானவையாக ஓடும் பஸ்கள்தான் எத்தனை! இந்தக் கண்காட்சியைத் தன் பெற்றோர் தினமும் தன்னை அழைத்து வந்து காட்டாததற்காக அவர்களைக் கடிந்து கொண்டாள். தனக்கு அப்பாவோ, அம்மாவோ இல்லாமல் இருந்தால், தன்னிச்சையாகச் சாலையில் சுற்றித் திரியலாம் அல்லவா என்று நினைத்தாள்.

நிதானமாக நடந்து போய்க் கொண்டிருந்தாள் கற்பகம். ஒரு பங்களாவின் வாசலில் பூத்து, வேலிக்கம்பியின் இடைவெளி வழியாகத் தெரிந்த செந்நிறப் பூ ஒன்றைக் கையை விட்டுப் பறித்தாள். சொல்ல முடியாத ஆனந்தம். அவளுக்கு அந்தச் சாலை முழுவதுமே சொந்தமாகிவிட்டது போன்ற உணர்ச்சி பிறந்தது. உலகம் என்ற ஒன்றைப்பற்றி அவளுக்குத் தெரியாது. தெரிந் திருந்தால் அதுவும் தனக்குச் சொந்தம் என்றே கருதியிருப்பாள்.

கற்பகம் நடந்துகொண்டே இருந்தாள். நாலு திசைகளையும் அவள் கண்கள் துழாவிக் கொண்டிருந்தன. இதனால் எதிரிலோ, பக்கத்திலோ வரும் யாரையும், எதையும் அவள் கவனிக்க வில்லை.

அரை பர்லாங் தூரத்தைக் கடக்கவில்லை. அதற்குள்ளேயே கற்பகத்தின் நடை நின்று விட்டது. நடை மட்டுமல்லாமல் மூச்சும் நின்று விட்டது.

ஒரு பெரிய லாரியில் அடிபட்டு, அந்த க்ஷணத்திலேயே செத்துப் போய்விட்டாள். உருச் சிதைந்து நடுச் சாலையில் ரத்தத்திலே கிடந்தாள் கற்பகம். சுற்றிலும் கூட்டம் கூடி விட்டது; வாகனப் போக்குவரத்து ஸ்தம்பித்து விட்டது. எல்லோரும் கற்பகத்தின் பிணத்தைப் பார்த்துத் துக்கித்தார்கள்; இரக்கப் பட்டார்கள். கேவலம், அவள் பிணமாகி விட்டதைத்தான் அவர்களால் பார்க்க முடிந்தது. அதே சமயத்தில் அவள் தன் வாழ்நாளெல்லாம் ஆசைப்பட்ட காற்றாகவும் ஆகிவிட்டாள் என்பது யாருக்குத் தெரியும்? ❑

# கதவு

கி. ராஜநாராயணன்

கதவு ஆட்டம் ஆரம்பமாகியது.

பக்கத்து வீட்டுக் குழந்தைகளும் ஆரவாரத்தோடு கலந்து கொண்டார்கள்.

''எல்லோரும் டிக்கட் வாங்கிக் கொள்ளுங்கெ'' என்றான் சீனிவாசன். உடனே ''எனக்கொரு டிக்கட், உனக்கொரு டிக்கட்'' என்று சத்தம் போட்டார்கள்.

''எந்த ஊருக்கு வேணும்? ஏய்... இந்த மாதிரி இடிச்சித் தள்ளினா என்ன அர்த்தம்.... அப்புறம் நான் விளையாட்டுக்கு வரமாட்டேன்.''

''இல்லை, இல்லை, இடிச்சித் தள்ளலெ.''

''சரி எந்த ஊருக்கு டிக்கட் வேணும்?''

குழந்தைகள் ஒருவருக்கொருவர் முகத்தைப் பார்த்துக் கொண்டார்கள். ஒருவன் ''திருநெல்வேலிக்கு'' என்று சொன்னான். 'திருநெல்வேலிக்கு, திருநெல்வேலிக்கு'' என்று கூப்பாடு போட்டுச் சொன்னார்கள் எல்லோரும்.

லக்ஷ்மி ஒரு துணியால் கதவைத் துடைத்துக் கொண்டிருந் தாள். சீனிவாசன் வெறுங்கையால் டிக்கட் கிழித்துக் கொடுத்து முடித்ததும், கதவில் பிடித்துத் தொத்திக் கொண்டார்கள். சிலர் கதவை முன்னும் பின்னும் ஆட்டினார்கள். தன்மீது ஏறி நிற்கும் அக் குழந்தைகளை, அந்த பாரமான பெரிய கதவு பொங்கிப் பூரித்துப்போய் இருக்கும் அக் குழந்தைகளை, வேகமாக ஆடி மகிழ்வித்தது. ''திருநெல்வேலி வந்தாச்சி'' என்றான் சீனிவாசன். எல்லோரும் இறங்கினார்கள். கதவைத் தள்ளியவர்கள் டிக்கட் வாங்கிக்கொண்டார்கள். ஏறினவர்கள் தள்ளினார்கள். மீண்டும் கதவாட்டம் தொடங்கியது.

※ ※ ※

அது பழைய காலத்துக் காரை வீடு. பெரிய ஒரே கதவாகப் போட்டிருந்தது அந்த வீட்டுக்கு. அதில் வசித்து வந்தவர்கள் முன்பு வசதி உள்ளவர்களாக வாழ்ந்தவர்கள். இப்பொழுது ரொம்பவும் நொடித்துப் போய்விட்டார்கள். அந்த வீட்டிலுள்ள குழந்தைகளில் மூத்ததற்கு எட்டு வயது இருக்கும். பெயர் லட்சுமி. அடுத்தவன் சீனிவாசன், ஆறு வயது இருக்கும்; இன்னொரு கைக்குழந்தை.

அம்மா காட்டுக்கு வேலை செய்யப் போய்விடுவாள். அப்பா மணிமுத்தாறில் கூலிவேலை செய்யப் போய்விட்டார். லட்சுமியும் சீனிவாசனும் கைக்குழந்தையை, தாய் காட்டிலிருந்து வரும்வரை வைத்துக்கொண்டு கதவோடு விளையாடிக் கொண்டிருப்பார்கள்.



ஒருநாள் தெருவில் ஒரு தீப்பெட்டிப் படம் ஒன்றை லட்சுமி கண்டெடுத்தாள். படத்தில் ஒரு நாய் இருந்தது. அழுக்காக இருந்ததால், படத்தில் எச்சிலைத் துப்பித் தன் பாவாடையால் துடைத்தாள். இதனால் சில இடங்களில் இருந்த அழுக்கு படம் பூராவும் பரவிற்று. ஆனால் லட்சுமிக்கு மிகவும் திருப்தி, படம் சுத்தமாகிவிட்டது என்று.

படத்தை முகத்துக்கு நேராகப் பிடித்து, தலையைக் கொஞ்சம் சாய்த்துக்கொண்டு பார்த்தாள். அப்புறம் இந்தப் பக்கமாகச் சாய்த்துக்கொண்டு பார்த்தாள். சிரித்துக்கொண்டாள். காண்பிக்க பக்கத்தில் யாராவது இருக்கிறார்களா என்று சுற்றுமுற்றும் பார்த்தாள். ஒருவரும் இல்லை. வீட்டை நோக்கி வேகமாக நொண்டி அடித்துக்கொண்டே போனாள், சந்தோஷம் தாங்க முடியாமல்.

லட்சுமி வீட்டுக்கு வந்தபோது, சீனிவாசன் நாடியைக் கையில் தாங்கிக்கொண்டு வாசல்படிக்கட்டில் உட்கார்ந்திருந்தான். அவனைக் கண்டதும் லட்சுமி படத்தைப் பின்புறமாக மறைத்துக் கொண்டு, ''டேய் நான் என்ன கொண்டு வந்திருக்கிறேன் சொல்லு பார்ப்போம்'' என்றாள்.

''என்ன கொண்டு வந்திருக்கிறாயோ; எனக்குத் தெரியாது''.

''சொல்லேன் பார்ப்போம்''.

''அதென்னமோ எனக்குத் தெரியாது''.

லட்சுமி தூரத்தில் இருந்தவாறே படத்தைக் காண்பித்தாள்.

போதாது. படிப்பில் கெட்டிக்காரனாக இருந்து என்ன பயன்? இந்த வயதில், விளையாட்டில் சூரனாக இருந்தால்தான் எல்லாரும் மதிக்கிறார்கள். பள்ளிக்கூட விளையாட்டுப் போட்டி 'சாம்பியன்' கதிர்வேலுவைத்தான் எல்லாருக்கும் தெரியும். அம்பியை யாருக்குத் தெரியும்? வயசான வாத்தியார்கள் வேண்டு மானால், அவனைத் தட்டிக் கொடுக்கலாம்... ஆனால்?... கதிர்வேலுக்கு- அந்த வெறுந் தடியனுக்கு, ராதா காதல் கடிதம் எழுதினாளே, தன்னை ஒரு தடவையாவது பார்த்துப் புன்னகை செய்திருப்பாளா? 'அம்பி கெட்டிக்காரப் பையன், நல்ல மாதிரி' சே... இந்தப் பட்டங்களைச் சுமந்து கொண்டிருப்பதினால் அவனுக்கு என்ன பிரயோஜனம்?

கிட்டு போய்விட்டான்... அம்பிக்கு அழுகை வரும் போலிருந்தது...

அப்பொழுது ஒரு பஸ் வரும் சப்தம் கேட்டது. அம்பி உட்கார்ந்தபடியே தலையை நீட்டித் தெருக் கோடியை நோக்கினான். கருணு டூரிஸ்ட் பஸ். ஏன் இந்தப் பக்கம் வருகிறது? அவனுக்கு ஞாபகம் வந்தது. வழக்கமான பாதையில் குழி தோண்டி வைத்திருக்கிறார்கள்.

டூரிஸ்ட் பஸ்... பேர்தான் டூரிஸ்ட் பஸ்... அது டூரிஸ்ட் பஸ்ஸே இல்லை. தினசரி இரவு வெளியூர்களுக்கும், வெளியூர்களிலிருந்தும் பிரயாணிகளை ஏற்றிக் கொண்டு போய் வருகிறது. நடத்துகிறவர், ஆளுங்கட்சிப் பிரமுகர். அரசாங்கம் காந்திஜிக்குப் பிடித்த குரங்கு; தீமையைப் பார்க்காது. கண்ணை மூடிக் கொள்ளும். ....ஒருவேளை இரவு வேளைகளில் அரசாங்கம் தூங்கி விடுகிறதோ என்னவோ? அம்பிக்குத் தான் கெட்டிக்காரன் என்று பட்டது. தன்னை ஒத்த மற்றவர்களுக்கு இந்த வயதில் இந்த மாதிரியெல்லாம் தோன்றுமோ? கெட்டிக்காரனாக இருப்பதோடு மட்டுமல்லாமல், விளையாட்டி லும் புலியாக இருந்தால்?... ஒரு ராதா என்ன, ஒன்பது ராதாக்கள் கடிதம் எழுதலாம்...

பஸ் அருகில் வந்துவிட்டது. சிகப்பு நிற பஸ்... அம்பியின் வீட்டருகே வந்ததும் பஸ் சற்று யோசிப்பது போல், தயங்கி நின்றது. அவன் வீட்டெதிரெ, குளத்துக்கும் கோயிலுக்கு மிடையே இடைவெளியில் போகிறானோ ?...

தான் நினைத்தது சரிதான்... 'ரிவர்ஸ்' செய்யத்தான் பஸ்ஸை இங்கு கொண்டு வந்திருக்கிறான். பூதாகாரமான பஸ்... இந்தச்

சிறிய இடைவெளி போதுமோ? கண்டெக்டர் பஸ்ஸை விட்டுக் கீழே இறங்கவில்லை... பின்புறத்துக் கண்ணாடி வழியாகப் பார்த்துக் கொண்டே 'எஸ்... எஸ்... எஸ்' என்று சொல்லிக் கொண்டிருந்தான்.

பஸ் பின்பக்கம் நகர்ந்தவாறு திண்ணையருகே வந்தது. அம்பி காலைத் தூக்க வேண்டுமா என்று ஒரு கணம் நினைத்தான்... அப்படிப் பார்க்காமலேயா இருந்துவிடப் போகிறான், கண்டக்டர்?

அம்பியின் அலறல் தெரு முழுவதும் கேட்டது. கண்டக்டரின் 'ஹோல்ட் ஆன்' என்ற கத்தலும், அம்பியின் அலறலும் ஒரே சமயத்தில் ஒலித்தன.

பஸ் நின்றது... வண்டியிலிருந்து பிரயாணிகள் அவசர அவசரமாகக் கீழே இறங்கினார்கள்.

''ஐயோ பாவம், கால் சட்னியாயிடுத்தேய்யா?''

''முதல்லே ரத்தத்தை நிறுத்துய்யா... ஃபஸ்ட் எய்ட் பாக்ஸைக் கொண்டா சீக்கிரம்.''

''நோ... நோ... ஆஸ்பத்திரிக்கு எடுத்துண்டுதான் போகணும்... சின்னப் பையன்... என்னய்யா அநியாயம்...!''

கண்டக்டர் அம்பியின் கால்களை மெதுவாக விடுவித்தான். அம்பி அழவில்லை... அவனுக்கு நினைவு தப்பிவிட்டது.

அப்பொழுது திடீரென்று எல்லாருடைய நெஞ்சையும் பிழிந்தெடுக்கும்படியாக ஓர் ஓலம் கேட்டது. கண்டக்டர் பையனைத் தூக்கிப் பஸ்ஸில் வைத்து ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போகலாமா என்று யோசித்தவன், திடுக்கிட்டு நின்றான்.

''அம்பி... அம்பி... நான் என்னடா செய்வேன்... உன்னைத்தானேடா நான் நம்பிண்டிருந்தேன்...''

''யாரு இவங்க? ... பையனோட அம்மாவா?''

''ஆமாம்...''

''பெரியம்மா, கொஞ்சம் நகருங்க.. ரத்தம் போய்கிட்டே இருக்கு... பஸ்ஸிலே ஆஸ்பத்திரிக்கு எடுத்துக்கிட்டுப் போறோம்... மத்ததெல்லாம் அப்புறம் பேசிப்போம்...''

''எங்கேய்யா அவசர அவசரமா ஓடறே? பையன் பேரிலே பஸ்ஸை ஏத்திட்டுத் தப்பிச்சுக்கலாம்னு பாக்கறயா? தோப்பணில்லாத பிள்ளை, ஒரு ஏழைக் குடும்பத்தோட வயத்தலே அடிச்சிட்டியே, உருப்படுவியா?...''

''ஐயரே, நீங்க என்னய்யா வேணும் இந்தப் பையனுக்கு? சொல்லறத்தை கேளுங்க... உங்களுக்குப் பையன்தானே முக்கியம்?... சீக்கிரம் ஆஸ்பத்திரிக்கு எடுத்துக்கிட்டுப் போவோம்; அப்புறம் சத்தியமா சொல்றேன், நீங்க என்ன சொல்றீங்களோ அதைச் செய்யறேன்... நானும் பிள்ளை குட்டிக்காரன்... வேணும்னு இந்தப் பச்சைப் புள்ளை மேலே பஸ்ஸை ஏத்தலே...''

''பையன் திண்ணையிலே உட்கார்ந்திண்டிருந்ததை நீ பாக்கலே? கண் அவிஞ்சா போச்சு? காலைச் சட்டினியாக் கிட்டியே... இந்த அம்மாவுக்கு ஒரு வழி சொல்லி விட்டுப் போ...''

ட்ரைவருக்குக் கோபத்தினால் முகஞ் சிவந்தது. நன்றாக அடிபட்டுக் கிடக்கும் பையனை வைத்துக் கொண்டு வியாபாரம் பேசுகிறாரே, இவர் யாராக இருக்கும்?...

''இந்தப் பையனுக்கு நீங்க என்ன வேணும்?''

''நான் பக்கத்து வீட்டிலே குடியிருக்கேன்... நான் யாரா யிருந்தா உனக்கென்ன?''

ட்ரைவர் கண்டக்டரிடம் சொன்னான், ''ராஜு, பையனைத் தூக்கி வண்டியிலே எடுத்துட்டுப் போவோம் வா... டைம் வேஸ்ட் ஆகிகிட்டிருக்கு...''

அம்பியின் அம்மா அவன் உடம்பைக் கட்டிக்கொண்டு அழுது கொண்டிருந்தாள்.

''பெரியம்மா... சொல்லறத்தைக் கேளுங்க. நானும் பிள்ளை குட்டிக்காரன்... தெரியாத்தனமா வண்டியை ஏத்திட்டேன்... முதல்லே குழந்தையை ஆஸ்பத்திரிக்கு எடுத்துட்டுப் போவோம்... தயவு செய்து பையனை விடுங்க... நீங்களும் கூட வாங்க...''

''ஏதாவது பொய் ஸ்டேட்மெண்ட் கொடுத்து கையெழுத்து வாங்கிக்கலாம்னு பாக்கறயா? கனகா மாமி, போகாதீங்க...''

புதுக் குரல் கேட்டதும் ட்ரைவர் திரும்பினான். நெற்றியில் திருநீறு, சந்தனப் பொட்டு, நாற்பது வயதிருக்கும் அவருக்கு. குழந்தை துடித்துக் கொண்டிருக்கிறான், சட்டம் பேசுகிறார்களே படுபாவிகள்! ட்ரைவர் சீறினான். ''ராஜு, பையனைத் தூக்கு... ஹும் சீக்கிரம்.''

''அட, நீங்கதானா சட்டம் பேசறது...? இவர் யாரு தெரியுமில்லே அண்ணே, வக்கீல் குமாஸ்தா பாலு அய்யர்'' என்றான் ராஜு.

''அவர் யாரா வேணுமானாலும் இருக்கட்டும், குழந்தையக் கொஞ்சம் பிடி...''

''போலீஸ் வந்தப்புறம் போகலாம்...'' என்றார் பாலு அய்யர்.

''பையன் செத்துப் போயிடுவான்யா, ஈவு இரக்கமற்ற படுபாவியா இருக்கியே!''

''வண்டியை ஏத்தரச்சே, இந்த ஈவு இரக்கமெல்லாம் எங்கே போச்சு...? நியாயம் பேசறான், நியாயம்... நான் சட்டம் தெரிஞ்சவன், என்னை ஏமாத்த முடியாது...''

''பெரியம்மா... பையன் உங்க பையன்... என்னை நம்புங்க.. நான் திரும்பி வறேன்... எவ்வளவு ஸ்டேட்மெண்ட்லே வேணுமானாலும் கையெழுத்துப் போடறேன்... பையனுக்கு ரத்தம் போய்கிட்டே இருக்கு... ஆஸ்பத்திரிக் கேஸ்... போலீஸ் எப்பொ வர்றாங்களோ, காத்துக்கிட்டிருக்க முடியுமா? சீக்கிரம் சொல்லுங்க...''

அழுது கொண்டிருந்தவள் அவனை ஏறிட்டு நோக்கினாள். ''சரி, எடுத்துண்டு போ... நானும் வரேன்...''

ட்ரைவர் பையனைத் தூக்கி ராஜுவின் உதவியைக் கூட எதிர்பார்க்காமல், வண்டிக்குள் கொண்டுபோய் 'சீட்'டில் கிடத்தினான். அம்பியின் அம்மாவும் வண்டிக்குள் ஏறினாள்.

''ராஜு! வாப்பா சீக்கிரம்...'' என்றான் ட்ரைவர்.

பாலு அய்யரும் ராஜுவும் தனியாகப் போய் ஏதோ இரகஸ்யமாகப் பேசுவது போல், கீழ்க் குரலில் பேசிக் கொண்டிருந்தார்கள். ட்ரைவரின் குரல் கேட்டதும், ராஜு அவசர அவசரமாக வந்து வண்டியில் ஏறினான்.

''என்னப்பா எங்களையெல்லாம் 'அம்போ'ன்னு விட்டுட்டே...'' என்றார் பஸ்ஸில் வந்த பிரயாணிகளில் ஒருவர்.

''அதுதான் கும்பகோணம் வந்தாச்சேய்யா... டவுன் பஸ்லே போங்க... ஒரு உசிரு மன்றாடிகிட்டிருக்கு... வீட்டிலே ஏன் கொண்டு விடல்லேன்னு கேக்கறாரு, இவரு...''

''இதுக்கு நாங்கதானா பொணை? நீ செஞ்ச தப்புக்கு யார் மேலே கோவிச்சிக்கறே?''

''சரித்தான், வண்டியை விட்டு இறங்குங்க. ஸ்டார்ட் பண்ணனும்...''

''நான் உங்க முதலாளிகிட்டே கம்ப்ளெயின்ட் பண்ணிக் கிறேன்... திமிராவா பேசறே?''

ட்ரைவர் ஆசனத்தை விட்டு எழுந்து அந்தப் பிரயாணியிடம் வந்தான்.

''நீ மனுஷன்தானே, இல்லாட்டி மிருகமா? அதோ அந்தப் பச்சைப் புள்ளை கிடக்கிறது உன் கண்ணுக்குத் தெரியலே... கோபத்திலே நான் என்ன செய்வேன்னு தெரியாது.''

அவர் முணு முணுத்துக் கொண்டே கீழே இறங்கிவிட்டார்.

பஸ் புறப்பட்டது. ராஜு சென்னான், ''வேலு அண்ணே, நாம் செய்யறது தப்புத்தான்... திண்ணையிலே இடிச்சத்தினாலே 'டெயில் லைட்' நொறுங்கிப் போயிடிச்சி. இதைத் தவிர இன்னும் 'பாடி'க்கு வேற 'டாமேஜ்'... முதலாளிக்குப் பதில் சொல்லி யாகணும்... போலீஸ் வர்றதுக்குள்ளே நாம புறப்பட்டு வந்தது அவ்வளவு சரியில்லே.''

''நீ வாயை மூடிக்கிட்டு இரு... எல்லாப் பொறுப்பையும் நான் ஏத்துக்கறேன்...''

''குழந்தை பொழைப்பானா ட்ரைவர்?''

''நிச்சயமா பொழைப்பான், கவலைப்படாதீங்க... என்னோட போறாத காலம்...'' ட்ரைவரின் குரல் கம்மியது.

''சக்கரத் தாழ்வான் கோயிலை ஒரு சுத்து சுத்திட்டு வருவோம்னுதான் போனேன்... அதுக்குப் பலன் இப்படியா இருக்கணும்?'' அம்பியின் அம்மா சிறிது நேரம் மௌனமாக இருந்தவள், மறுபடியும் புலம்பத் தொடங்கிவிட்டாள்.

''பெரியம்மா, அழுவாதிங்க... எல்லாம் நல்லபடியா சரியாயிடும்.'' இதை வேலு சொன்னானே தவிர, அவன் சொன்னதில் அவனுக்கே நம்பிக்கையில்லை... எப்படிச் சரியாயிடும்? இரண்டு பாதங்களும் நசுங்கிவிட்டன. விரல்கள் இல்லை. பையன் எப்படி நடக்கப் போகிறான்? தகப்பன் இல்லாத பிள்ளை, இவனைத்தான் நம்பிக் கொண்டு இருந்ததாகத் தாய் புலம்புகிறாள்!

''பெரியம்மா, உங்களுக்கு வேறு குழந்தைங்க இல்லியா?'' என்று கேட்டான் வேலு.

அம்பியின் அம்மா பதில் கூறவில்லை. கண்களை மூடிக் கொண்டு ஜபித்துக் கொண்டிருந்தாள். பதில் வராததைக் கண்டு வேலு திரும்பிப் பார்த்தான். அவன் என்ன செய்கின்றாள் என்றறிந்ததும் தன் கேள்வியை மீண்டும் வற்புறுத்தவில்லை.

ராஜு சொன்னான். ''பையனை ஆஸ்பத்திரியிலே சேத்தப்புறம் முதலாளிக்கு அங்கேயிருந்து ஃபோன் பண்ணி விஷயத்தைச் சொல்லிடுவோம்... போலீஸை அவர் பாத்துப் பாரு... என்னண்ணே?''

வேலு பேசாமலிருந்தான். இந்த அம்மாவுக்கு வேறு குழந்தைகள் இல்லையோ? அப்படி இல்லையென்றால், இதைக் காட்டிலும் துயரம் இந்த அம்மாவுக்கு வேறு என்ன வேண்டும்? முதலாளியிடம் சொல்லி நஷ்ட ஈடு வாங்கித் தர முடியுமா? 'ஒண்ணாம்' நம்பர் கஞ்சன், குடிக்கும் கூத்திக்கும் செலவழிப்பான், நஷ்ட ஈடா தரப்போகிறான்?-

தானும் 'பிள்ளை குட்டிக்காரன்' என்று வேலு சொன்னது வாஸ்தவந்தான்... ஒன்பது குழந்தைகள்!... பெரியவளுக்குப் பதினெட்டு வயது... கல்யாணம் செய்தாக வேண்டும். ஆறு பெண்கள், மூன்று பிள்ளைகள். கடைசிக் குழந்தை பெண்; இரண்டு வயதாகிறது...

ராஜுவையே தன்னுடைய மூத்த பெண்ணுக்கு வளைத்துப் போடலாமென்பது வேலுவின் திட்டம். பிச்சுப் பிடுங்கலில்லை. ஒரே பிள்ளை... அம்மா கிடையாது, அப்பாதான். அவரும் வைப்பாட்டியோடு தஞ்சாவூரில் இருந்து வருகிறார்... ஆனால் இந்தக் காலத்து வாலிபர்களைப் போல், ராஜுவுக்கும் நெஞ்சில் ஈரம் இல்லையே என்ற சந்தேகம் வேலுவுக்கு உண்டு. இன்று உறுதியாகிவிட்டது... 'முதலாளி, போலீஸ், முதலாளி, போலீஸ்!' என்று அரற்றிக் கொண்டிருக்கிறானே தவிர, ஒரு சின்னப் பையனுக்கு அடிபட்டு விட்டதே என்ற வருத்தம் அவனுக்குக் கொஞ்சம் கூட இல்லை...

ஆஸ்பத்திரி வந்துவிட்டது... ராஜு இறங்கி உள்ளே போய் ஸ்டெரச்சருடன், இன்னொரு ஆளையும் கூட்டிக் கொண்டு வந்தான், அம்பியின் அம்மா வீறிட்டு அழுதாள்.

வேலு அவளருகில் போய் நின்றான். ''பெரியம்மா, உங்களுக்குத் தைரியம் இல்லேன்னா. வண்டியிலேயே இருங்க... நான் உள்ளே போய் டாக்டரைப் பார்த்துட்டு வந்து சொல்றேன்...''

அவள் அவன் சொன்னதைக் காதில் வாங்கிக் கொண்டதாகத் தெரியவில்லை. கீழே இறங்கி ஸ்டெரச்சரைத் தொடர்ந்து மிக வேகமாக ஆஸ்பத்திரிக்குள் சென்றாள்.

உள்ளே நர்ஸ் ராஜுவிடம் கூறிக் கொண்டிருந்தாள்: ''இது போலீஸ் விகாரம்... நாங்க எப்படி 'அட்மிட்' பண்ணறது?''

ராஜு வேலுவைத் திரும்பிப் பார்த்தான். ''நான்தான் அப்பவே சொன்னனேண்ணே, போலீஸ் வரக் கொள்ள நாம் வந்திருக்கக் கூடாது...''

வேலு நர்ஸிடம் மிக நிதானமாகத்தான் பேசினான். ''முதலில் பையனை 'ஆபரேஷன் தியேட்டருக்கு' எடுத்துட்டு போங்கம்மா, அதான் முக்கியம்... நான் போலீசுக்கு இதோ ஃபோன் பண்றேன்.''

நர்ஸ் புன்னகை செய்தாள். ''நோ... ரூல்படிப் பார்த்தா...''

அவள் சொல்லிக் கொண்டிருந்ததை முழுவதும் வேலு கேட்கவில்லை. டாக்டர் அறையை நோக்கி மிக வேகமாகச் சென்றான்.

நர்ஸ் கூப்பிட்டாள் : ''ட்ரைவர்... ட்ரைவர்...''

அந்த டாக்டர் இளைஞன். பெயர் ரவி. முப்பது வயதுக்குள் தானிருக்கும். குறுந்தாடி வைத்திருந்தான். வேலு சொன்னதை அவன் அமைதியாகக் கேட்டான். சொல்லப் போனால், கேட்பது போலிருந்தான். அவன் கை வேறொரு நோயாளிக்கு மருந்து எழுதிக் கொண்டிருந்தது.

''நர்ஸைக் கூப்பிடுங்க...'' என்றான் ரவி. அதற்குள் அவளே வந்துவிட்டாள்.

''பையனை ஆபரேஷன் தியேட்டருக்குக் கொண்டு போங்க.''

''டாக்டர்... இது போலீஸ் கேஸ்...''

''ஐ நோ... ட்ரைவர், நீங்க போய் போலீசுக்குப் ஃபோன் பண்ணுங்க...''

''போலீஸ் பையனோட 'கண்டிஷனை'ப் பார்த்தப்புறம் ஆபரேஷன் பண்ணறது நல்லது டாக்டர்.''

''மிஸ் தாமஸ், கைன்ட்லி டு வாட் ஐ ஸே...''

டாக்டர் எழுந்தான்...

ஆபரேஷன் தியேட்டருக்குள் அம்பிஇருந்த போது, போலீஸ் வந்தது. ராஜு ஃபோன் செய்து, முதலாளியையும் வரவழைத்து விட்டான். இன்ஸ்பெக்டர் முதலாளி வந்ததும் கேட்டார் : ''நம்ம வண்டிதானுங்களா?''

''ஆமாம்... என்ன வேலு இப்படிச் செய்திட்டே?''

வேலு பதில் சொல்லவில்லை. அவனுக்கு முதலாளியைக் கண்டால் பிடிக்காது. முப்பத்தைந்து வயதுக்குள், கட்சி செல்வாக்கைப் பயன்படுத்திக் கொண்டு, திருட்டுத்தனமாக ஏழெட்டு டூரிஸ்ட் பஸ் விடுகிறான்... கேள்வி முறையில்லை... தன் தலையெழுத்து, வேறு வேலை கிடைக்கவில்லை, இந்தத் திருட்டுக்குத் தானும் உடந்தை... சைக்கிளுக்குக் காற்று அடித்துக் கொண்டிருந்த பயல், இவனுக்கு வந்த அதிர்ஷ்டம் இன்று தன்னைக் கேள்வி கேட்கும் நிலைக்கு வந்துவிட்டான்!

இன்ஸ்பெக்டரும் முதலாளியும் ஆஸ்பத்திரியின் பின்பக்கம் சென்று சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தார்கள். ராஜு வேலுவிடம் கிசுகிசுத்தான்: ''முதலாளி சமாளிச்சிடுவாரு, பயப்படாதீங்க...''

''சமாளிக்கிறதுக்கு என்ன இருக்குது?''

''யார் யாருக்கு எங்கெங்கே கை ஊறுதுண்ணு முதலாளிக்குத் தெரியும்...'' இதைச் சொல்லிவிட்டு ராஜு புன்னகை செய்தான்.

இந்தப் பயலுக்கா தன் பெண்ணைக் கொடுக்க வேண்டு மென்று ஒரு கணம் யோசித்தான் வேலு.

தம்பியின் அம்மா ஓரமாக ஒரு பெஞ்சியில் உட்கார்ந்து கொண்டு கண்கள் மூடிய நிலையில் இருந்தாள். வாய் முணுமுணுத்துக் கொண்டிருந்தது.

இன்ஸ்பெக்டர் வேலுவிடம் சொன்னார்: ''என்ன நடந்ததுன்னு முதலாளி எழுதித் தருவாரு... கையெழுத்துப் போட்டு என்கிட்டே கொடு.''

''சம்பவம் நடந்த இடத்திலே முதலாளி இல்லே... நான்தான் இருந்தேன்.. ஆக்ஸிடென்டுக்கும் நான்தான் காரணம்.''

முதலாளி வேலுவை முறைத்துப் பார்த்தான்... அவனுடைய கோபம் முகத்தில் தெரிந்தது.

''வேலு... இப்படி வா என்னோட...''

இருவரும் ஆஸ்பத்திரியை விட்டு வெளியே வந்தார்கள்.

''இதோ பாரு... அந்தப் பையன் மண்டையைப் போட்டு வைச்சான்னா, நீ ஜெயிலுக்குப் போகும்படியா ஆயிடும்... புரிஞ்சுதா... நான் சொல்றபடி கேளு...''

''அதைப்பத்தி நான் கவலைப்படலீங்க... நான் செஞ்ச தப்புக்கு...''

முதலாளி சீறினான்: ''மூளை இருக்குதா, இல்லியா உனக்கு? ஒம்பது குழந்தைகளை வைச்சிகிட்டு அரிச்சந்திரனா இருக்க முடியுமா உன்னாலே? சொல்வதைக் கேளு... நான் இப்படி எழுதித் தரேன், கையெழுத்துப் போடு...''

''என்ன எழுதித் தருவீங்க?''

''காலை உசர வைச்சிக்கிட்டிருந்த பையன் திடீர்னு தொங்கப் போட்டுட்டான்... மற்றபடி கோர்ட்லே கேஸ் வந்திருச்சின்னா, வக்கீல் பாத்துப்பாரு. பையனுக்கும் அம்மாவுக்கும் சண்டை, அது இதுன்னு... எத்தனையோ வளி இருக்குது... வக்கீலுக்குச் சொல்லியா கொடுக்கணும்? கோர்ட் கேஸ் ஆகாமப் பாத்துக்கறேன்... பையனோட அம்மாவுக்குக் கையிலே கொஞ்சம் வைச்சு அளுத்தினா சரிம்பாங்கன்னுதான் நினைக்கிறேன்... ஏளைக் குடும்பந்தான் போலிருக்குது...''

''நான் பொய் சொல்ல மாட்டேன்.''

''அட சீ, சொல்லறத்தைக் கேப்பியா? உன் தலையிலேயே மண்ணை வாரிப் போட்டுக்கிறத்திலே என்ன லாபம்? இன்னொண்ணு நினைவு வச்சுக்க, போலீஸ் நான் சொல்லறதைத் தான் கேக்கும்...''

''உங்களுக்கு இன்ஸ்யூரன்ஸ் கம்பெனி கொடுத்துடப் போறாங்க... நான்தான் ஜெயிலுக்குப் போகப் போறேன். என்னைக் காப்பாத்தணும்னு உங்களுக்கு என்ன இவ்வளவு தீவிரம்?''

''கோர்ட் கேஸ் ஆகக் கூடாதுண்ணுதான் பாக்கறேன். உன்னைப் பத்தி எனக்குக் கவலையில்லே...''

''ஓ! கோர்ட்லே ஆயிரத்தெட்டுக் கேள்வி கேட்பாங்க... டூரிஸ்ட் விவகாரம் எல்லாம் அடிபடும்... அதுக்காகச் சொல்றீங்களா?''

''ஏன் நடுரோட்லே நின்னுகிட்டு கத்தறே? மெதுவாப் பேசேன். எனக்கென்ன காது செவிடா?''

''அந்தப் பையன் செத்துப் போயிட்டா என்ன செய்வீங்க?''

''அதைப்பத்தி நீ கவலைப்படாதே... நான் சொல்றபடி கையெழுத்துப் போட்டுத் தா... சீக்கிரம், ஹூம்... அந்த அம்மாகிட்டே பக்குவமாப் பேசி இன்ஸ்பெக்டர் ஒரு 'ஸ்டேட்மெண்ட்' வாங்கிப்பாரு.''

''என் மனசுக்குச் சரியா படலே, நீங்க செய்யறது.''

''இது என்னடா கஷ்ட காலம்? அரிச்சந்திரனையெல்லாம் ட்ரைவரா வெச்சுக்கிட்டு, ரோதனையா போச்சு... நீ, நான் சொல்றபடி செய்யப் போறயா இல்லையா? உன் குடும்பத்தைத் தூக்கிக் கிணத்திலே போடணும்னா, உன் விருப்பப்படி செய்... என்னதான் ஆனாலும், கடைசியிலே நான்தான் ஜெயிக்கப் போறேன், அத்தை நினைவு வெச்சுக்க...''

வேலுவுக்கு என்ன செய்வதென்று விளங்கவில்லை. முதலாளி மந்திரிகளுக்கு நெருங்கியவன் என்பது அவனுக்குத் தெரியும். அவன் சொல்லுவதுபோல் நிச்சயமாக அவன் ஜெயிக்கத்தான் போகிறான். உண்மைக்காகப் போராடி ஒருவன் ஜெயிலுக்குப் போவதினால், யாருக்கு என்ன பிரயோஜனம்? அவன் குடும்பம் அவனை காந்தி என்றோ, ஏசு என்றோ ஏற்றுக் கொள்ளப் போவதில்லை. வாழ்நாள் முழுவதும் தூற்றிக் கொண்டு இருக்கப் போகிறார்கள். அந்த அம்மாவுக்குத்தான் என்ன பயன்? அந்தப் பையனோட கால் திரும்பியா வரப் போகிறது. அந்த அம்மாவுக்கு எவ்வளவு தரப் போகிறான், இந்தப் படுபாவி? தனக்கும் ஏதாவது கொடுத்தானானால், அதையும் சேர்த்து அந்த அம்மாவிடம் கொடுக்கலாம். இந்த அளவுக்குத் திருப்திப்பட்டுக் கொள்ளுவதைத் தவிர அவனால் வேறு என்ன செய்ய முடியும்?

''அவங்களுக்கு எவ்வளவு தரப் போறீங்க?'' என்று கேட்டான் வேலு.

''எவங்களுக்கு?''

''அந்த அம்மாவுக்கு...''

''அத்தைப்பத்தி உனக்கென்ன கவலை?''

''நானும் பிள்ளை குட்டிக்காரன்...''

''வாய்யா வா... பெரிய நியாயம், அநியாயமில்ல பாத்துக் கிட்டிருந்தீங்க இத்தனை நேரம்? இதுக்குத்தானா? சரி எதானும் தரேன், வாங்கிக்க...''

''ஏதானும்னா எவ்வளவு?''

''குளந்தை மேலே வண்டியை ஏத்திட்டு பேரம் வேற பேசறியா? ஒரு பச்சை நோட்டுத் தரேன், ஒளிஞ்சு போ...''

''பத்தாது...''

''அடச் சீ!... உன் விருப்பப்படி என்ன 'ஸ்டேட்மெண்ட்' வேணுமானாலும் கொடுத்துக்க... இதுக்கு மேலே ஒரு பைசா கிடையாது.''

வேலு பதில் கூறாமல் திரும்பினான்.

"அவ்வளவு திமிரா உனக்கு?... உனக்கு அளுவறது தெரிஞ்சா, ராஜு சும்மா விடுவானா? அவனுக்கு வேற அளுதாவணும். சரி, இரண்டு வாங்கிக்க... போ... அதுக்கு மேலே பிச்சுப் பிடுங்காதே..."

வேலு யோசித்தான். இதற்குமேல் இவன் தர மாட்டான். தான் வாங்கிக் கொள்வது தப்புதான்... என்ன செய்ய? அரிச்சந்திரனுக்கு நிச்சயமாகத் தெரிந்திருக்கும், தான் கடைசி மட்டும் உறுதியாக நின்றால், கத்தி மாலையாக விழுமென்று. ஆனால் இந்தக் காலத்தில் கத்தி கத்தியாகத்தானிருக்கும்; மாலை போட்டுக் கொள்கிறவர்கள் நட்சத்திரேயர்கள்.

"என்ன, சரியா? சீக்கிரம் சொல்லு..." என்றான் முதலாளி.

"சரிங்க."

இருவரும் உள்ளே சென்றபோது, இன்ஸ்பெக்டர் யாரோ இருவரிடம் பேசிக் கொண்டிருந்தார். அந்தப் பையனுக்கு உறவுக்காரர்களாக இருக்க வேண்டுமென்று நினைத்தான் வேலு.

இன்ஸ்பெக்டர், "இவங்க அந்தப் பையனோட அக்காவாம், ஸ்கூல் டீச்சரா இருக்காங்களாம், இவரு அவங்க ஹஸ்பெண்ட். தாலுக்கா ஆபீஸ்ல இருக்காரு."

அவர்கள் கூட ராஜு குறிப்பிட்ட, வக்கீல் குமாஸ்தா பாலு அய்யரும் வந்திருந்தார். அவர் ஓர் ஓரமாக நின்று கொண்டிருந்தார்.

"ஏதோ தவறு நடந்துட்டுதுங்க... பையன் திடீர்னு காலைத் தொங்கப் போடுவான்னு ட்ரைவர் எதிர்பார்க்கலே..."

ஓரமாக நின்றுகொண்டிருந்த பாலு அய்யர் அப்பொழுது அங்கு வந்தார். முதலாளி சொன்னது அவர் காதில் விழுந்திருக்க வேண்டும்.

"பையன் திடீர் என்று காலைத் தொங்கப் போடலை, தொங்கப் போட்டிருந்த கால் மேல்தான் பஸ் மோதித்து... அவ்வளவு தூரம் ரிவர்ஸ் செய்ய வேண்டிய அவசியமே இல்லே." என்றார் அவர்.

"நீங்க யாரு?" என்று கேட்டார் இன்ஸ்பெக்டர்.

"வக்கீல் குமாஸ்தா."

இன்ஸ்பெக்டர் முதலாளியைப் பார்த்துப் புன்னகை செய்தார்.

அந்தப் பெண்ணின் கணவன் பேச ஆரம்பித்தான். ''இதோ பாருங்க... என்னோட மாமியாருக்கு இந்தப் பையன் ஒரே பிள்ளை. ஒரு பொண்ணு, ஒரே பிள்ளை அவ்வளவுதான்... அவனை நம்பித்தான் அவ இருக்கா. படிப்பிலே மகா கெட்டிக்காரன், பள்ளிக்கூடத்திலே விஜாரிச்சுப் பாருங்க...''

''இன்னி சாயங்காலம் போலீஸ் ஸ்டேஷனுக்கு வாங்களேன்... எல்லாம் பேசிக்கலாம்...'' என்றார் இன்ஸ்பெக்டர்.

ரவி அப்பொழுது ஆபரேஷன் தியேட்டரிலிருந்து வெளியே வந்தான்.

''எப்படி இருக்கு டாக்டர்?'' என்று கேட்டாள்.

ரவி, ''பையனோட அம்மா யாரு?'' என்று வினவியவாறு சுற்றுமுற்றும் பார்த்தான்.

அம்பியின் அம்மா எழுந்து வந்தாள்.

''நன்னாத்தான் அடிபட்டிருக்கு... நான் என்னாலே முடிஞ்சதைச் செய்யறேன்... இரண்டு காலும் ரொம்ப மோசமாத்தான் இருக்கு...'' என்றான் ரவி.

''உயிருக்கு ஆபத்தில்லையே?'' என்று கேட்டான் முதலாளி.

''அதில்லே... பட்... போத் லெக்ஸ் மே கோ அவுட் ஆஃப் ஆக்ஷன்... திஸ் ஈஸ் டூ பாட்! ஆல்ரைட் இன்ஸ்பெக்டர், நான் என் ரிபோர்ட்டைத் தரட்டுமா?''

இன்ஸ்பெக்டர் முதலாளியைப் பார்த்தார். முதலாளி டாக்டரிடம் சொன்னான்: ''நான்தான் வண்டியோட ப்ரொப்ரைட்டர்... வந்து... வந்து... கொஞ்சம் தனியா பேசலாமா உங்களோட?''

''என்ன பேசணும்?... ஐ ஹாவ் நதிங் டு டூ வித் யு.''

''சரி, உங்க ரிபோர்ட்டைக் கொடுங்க... உள்ளே போகலாமா?'' என்றார் இன்ஸ்பெக்டர்.

அவர்கள் இருவரும் உள்ளே சென்ற பிறகு, முதலாளி ராஜுவைத் தனியாக அழைத்துக் கொண்டு போய்க் கூறினார். ''பாலு அய்யர் கிட்டே பேசிப் பாரு...''

''பேச வேண்டாம்... ஒத்துக்கிற ஆள்தான்-'' என்று முணுமுணுத்தான் ராஜு.

''எவ்வளவு?''

''பெரிய ஒண்ணுக்குக் குறைஞ்சு வாங்க மாட்டார்னு தோணுது... பேசிப் பார்ப்போம்.''

''உனக்குண்டா இதிலே கமிஷன்?''

''என்னங்க முதலாளி இப்படிப் பேசுறீங்க? பாலு அய்யர் அங்கே இல்லேன்னு பொய் சொல்லச் சொல்றீங்களா? அது நியாயமில்லே...''

''வேலுவுக்கு ரெண்டு, உனக்கு ரெண்டு, பாலு அய்யருக்கு அஞ்சு... வக்கீல் குமாஸ்தா பார்ப்பான், இதுக்குக் குறைஞ்சு வாங்க மாட்டான், சீக்கிரம் கேட்டுச் சொல்லு.''

''எட்டு மட்டும் போலாங்களா? அவரையே கொண்டு அந்தப் பையனோட அக்காவையும் அவங்க புருஷனையும் சமாளிக்கச் சொல்றேன்...''

''சரி... எதை வேணுமானாலும் பண்ணு... போய்த் தொலை!'' முதலாளிக்கு எரிச்சல் அதிகமாகிக் கொண்டு வருகிறது என்பதை உணர்ந்த ராஜு, அந்த இடத்தை விட்டு அகன்றான்.

அம்பியின் அம்மா திடீரென்று சிரிக்க ஆரம்பித்தாள். எல்லோரும் திடுக்கிட்டு அவள் பக்கம் திரும்பினர்.

''அம்பி... என்னடா விளையாட்டு இது... அம்பி... அம்பி...'' என்று பலமாக, சப்தம் போட்டுக்கொண்டே குறுக்கும் நெடுக்குமாக ஓடத் தொடங்கி விட்டாள்.

நாலைந்து பேராக அவளைக் கட்டிப் பிடித்து உட்கார வைத்தனர். அம்பியின் அக்கா அவளருகே சென்று, ''அம்மா, அம்மா, என்னம்மா இது!'' என்று அழாக் குறையாகக் கேட்டாள்.

வேலு, அவள் கைகளை இறுக்கப் பற்றிக்கொண்டே சொன்னான்: ''பெரியம்மா! என்னை நம்புங்க, உங்க பையன் பொளைச்சிடுவான்.''

''ஆமாம் பொழைச்சிடுவான், நிச்சயமா பொழைச்சிடு வான்'' என்று தலையை ஆட்டிக் கொண்டே அவள் சொல்லிவிட்டு, உரக்கச் சிரிக்கத் தொடங்கினாள்.

ரவி வெளியே வந்தான்... ''வாட் ஈஸ் திஸ்?...''

நர்ஸ் அவரிடம் விரைவாக வந்து சொன்னாள்: ''ஷி ஹாஸ் பிகம் இன்ஸேன்.''

ரவி கேட்டான் : ''இவங்களுக்கு வேண்டியவங்க யாரானும் இருக்காங்களா?... ஓ! நீங்கதானா? கைண்ட்லி டேக் ஹர்

ஹோம்... மிஸ் தாமஸ்... கிவ் ஹர் ஸம் ஸெடேட்டிவ் இன்ஜெக்ஷன்... நாங்க இதுக்கு ட்ரீட் பண்ண முடியாது. நோ பெஸிலிட்டீஸ்...''

இன்ஸ்பெக்டர் முதலாளியிடம் சொன்னார்: ''டாக்டர் ரிப்போர்ட்டைக் கொடுத்திட்டாரு... உங்க ட்ரைவர், கண்டெக்டர் ரெண்டு பேரோட ஸ்டேட்மெண்ட் வேணும்... சம்பவத்தைப் பார்த்த வரு அந்த அய்யரு... அவரோட ஸ்டேட்மெண்ட்டும் வேணும். எல்லோரும் ஸ்டேஷனுக்குப் போவோம் வாங்க...''

அம்பியின் அத்திம்பேரோடு பேசிக் கொண்டிருந்த பாலு அய்யர் சிரித்துக் கொண்டே சொன்னார்: ''சரி நானும் வரேன். இவரையும் வேணும்னா கூட்டிண்டு வரேன்.''

வேலு அவரை உற்று நோக்கினான். பாலு அய்யர் அவரையும் சரிக்கட்டி விட்டாரென்று அவனுக்குப் புரிந்தது. அவர் முதலாளியருகே வந்து நின்றார்.

''அந்த அம்மாவை யார் கூட்டிக்கிட்டுப் போவாங்க?'' என்று கேட்டான் முதலாளி.

நர்ஸ் கொடுத்த இன்ஜக்ஷனின் காரணமாக அம்பியின் அம்மா மயக்கமுற்றிருந்தாள்.

''ஜானகி, நீ அம்மாவை....'' என்று ஆரம்பித்த அம்பியின் அத்திம்பேர் முதலாளியைக் கேட்டார்: ''அவ எப்படி அழைச்சிண்டு போக முடியும்? கார் இருக்குதா உங்ககிட்டே?''

இன்ஸ்பெக்டர் சொன்னார்: ''நாம் போலீஸ் ஜீப்லே போவோம். இவரோட கார்லே உங்க வொய்ஃபும், அவங்க அம்மாவும் போகட்டும், ட்ரைவர் அவங்களைக் கொண்டு போய் விட்டுட்டு, ஸ்டேஷனுக்கு வரட்டும்...''

''வேலு, ஐயா சொல்றபடியே செய்'' என்றான் முதலாளி.

எல்லாரும் வெளியே வந்தார்கள். இன்ஸ்பெக்டர் முதலாளியிடம் சொன்னார்: ''டாக்டர் ரிப்போர்ட்தான் சாதகமா இல்லே.''

''நான் யாரு, என்ன செய்ய முடியும்னு சொன்னீர்களா அந்த மடையன்கிட்டே?''

''சொன்னேன், அவன் கேக்க மாட்டேங்கிறான்... கத்துக் குட்டி ராஸ்கல்...''

ரவி அப்பொழுது வெளியே வந்தான். ''எல்லோரும் இப்படிப் போயிட்டீங்கன்னா யாரு இங்கே இருப்பாங்க, பையனைப் பாத்துக்க!''

''கொஞ்ச நேரம் கழிச்சு என் வொய்ஃப் இங்கே வருவா...'' என்றார் அம்பியின் அத்திம்பேர்.

''என்னய்யா டாக்டரே, ரிபோர்ட் இப்படிக் கொடுத் திருக்கீங்க?'' என்று கேட்டான் முதலாளி.

''உங்க இஷ்டப்படி ரிபோர்ட் கொடுக்கனும்னா நான் எதுக்காக டாக்டரா இருக்கணும்?''

''நான் டி.எம்.ஓ.வைப் பார்த்துப் பேசிக்கிறேன்... உங்க அதிஷ்டம், தண்ணி இல்லாத காட்டுக்குப் போகணும்னா போங்க...''

''நீங்க யாருன்னு நினைச்சிண்டிருக்கீங்க, இப்படி பேச?'' என்று சீறினான் ரவி.

''நான் நினைச்சிக்கிட்டிருக்கேன், சுரக்காய்க்கு உப்பு இல்லேன்னு... போய்யா தெரியும்... நானும் யாருன்னு உனக்குத் தெரியாமலேயா இருக்கப்போவுது...?''

''கேவலம் - இந்த வேலைக்காக, நீ விட்டெறியப்போற காசுக்கு இந்தக் கும்பல் மாதிரி, காக்கா கணக்கா காத்திண்டிருக்கப் போறேன்னு நீ நினைச்சியா..,? யு கான் ஜாலி வெல் கோ டு தி சீஃப் மினிஸ்டர்; ஃபார் ஆல் ஐ கோ... நான் என் ரிப்போர்ட்டை மாத்தப்போறதில்லை... எவ்வளவு தைரியம் இருந்தா ஆஸ்பத்திரி வாசல்லியே நீ இப்படிப் பேசுவே, உனக்காக இந்த இன்ஸ்பெக்டர் பேரம் பேச வரான்... கோர்ட்லே கேஸ் வந்து ஜெயிச்சா, பத்தாயிரக் கணக்கிலே அழணுமேன்னு, சாமார்த்தியமா சமாளிக்கப் பார்க்கறீங்களா?''

இன்ஸ்பெக்டர் குறுக்கிட்டார்: ''டாக்டர்... கொஞ்சம் மரியாதையா பேசுங்க...''

''என்னடா மரியாதை வேண்டிக் கிடக்குது உங்களுக்கு? ஒரு உசிரு உள்ளே மன்றாடிக்கிட்டு இருக்குது... எப்பொடாப்பா பஸ்ஸை ஏத்தப் போறேன்னு காத்துக் கிட்டிருந்தாப்பலே, எல்லாரும் பொணத்தைக் கொத்தித் தின்ன வந்துட்டீங்களே, படுபாவிகளா? இதோ பாருய்யா முதலாளி... உன் பிச்சைக் காசு எனக்கு வேண்டாம்... நான் உண்மையைச் சொல்றேன்... பஸ்ஸை ஏத்தினது நான்தான்... கோர்ட்லே கேஸ் வரட்டும்...

நாட்டை நாற அடிச்சிட்டு இருக்கிற கும்பல் யார் யாருன்னு எல்லாருக்கும் தெரிய வேணாம்? டாக்டரய்யா, வாங்க, பையனைக் கவனிச்சுக்க நான் இருக்கேன்...'' என்று கூறிக்கொண்டே உள்ளே சென்றான் வேலு. ❑

# விடிவதற்குள்....

அசோகமித்திரன்

பங்கஜத்துக்கு முத்துவை எழுப்புவதற்கு வேதனையாகத்தான் இருந்தது. ஒன்றுக்குள் ஒன்றாக நான்கு பிளாஸ்டிக் வாளிகளை எடுத்து வந்து வாசல்படியில் வைத்தாள். இனியும் தாமதிக்க முடியாது என்று தீர்மானித்து, ''முத்து, முத்து,'' என்று அழைத்தாள்.

முத்து படுக்கையில் அசைந்து கொடுத்தான். ''முத்து, எழுந்திரு. என் கண்ணோல்லியோ,'' என்றாள். அவ்வளவு இருட்டிலும் அவன் ஒருமுறை கண் விழித்துப் பார்த்தது அவளுக்குத் தெரிந்தது.

''இதுக்குள்ளே தண்ணி வந்திருக்காதும்மா,'' என்று முத்து சொன்னான்.

''வந்துடும்டா, கண்ணு. தெருக்காரா எல்லாம் போயிட்டா. இப்போவே போனாத்தான் இரண்டு மணிக்காவது தண்ணி பிடிச்சுண்டு வந்து கொஞ்சம் கண்ணசரலாம்.''

''நீ போய் பக்கெட்டை வைச்சுட்டு வாம்மா. நான் இதோ வந்துடறேன்.''

பங்கஜம் வாசல் கதவைத் தாளிடாமல் வெறுமனே சாத்திவிட்டுத் தெருவுக்கு வந்தாள். ஒரு தெரு விளக்கும் எரியாது போனாலும், வீட்டை விட வெட்ட வெளியில் கண் நன்றாகத் தெரிந்தது. விறு விறுப்பாகப் பல உருவங்கள் வந்து போய்க் கொண்டிருந்தன.

பங்கஜம் சாலையைக் கடந்து, எதிர்சாரியில் மூடிக் கிடந்த பல கடைகள் நடுவே மறைந்து கிடந்த ஒரு குறுகலான சந்துக்குச் சென்றாள். சந்து இடைவெளியில் காலி வாளியே இருமுறை பக்கத்துச் சுவரில் இடித்தது. சந்து ஒரு வீட்டின் முற்றத்தில் முடிந்தது. அந்த இருட்டிலும் அங்கு டஜன் கணக்கில்

தவலைகளும், வாளிகளும் பரத்தி வைத்தது தெரிந்தது. சுவரோர மாகப் பதித்து வைத்திருந்த தண்ணீர் பம்பு அருகே நான்கைந்து ஆண்கள் இருந்தார்கள். அதில் ஒருவர் பங்கஜத்தைப் பார்த்து, ''இனிமே இங்கே வராதீங்கன்னு போன தடவையே சொன்னேனே?'' என்றார்.

''இன்னிக்கு மட்டும் தயவு பண்ணுங்க. நாளைக்கு வேறே இடத்துக்குப் போறேன் '' என்று பங்கஜம் சொன்னாள்.

''இங்கே வீட்டிலே இருக்கிறவங்களுக்கே தண்ணி பத்தலே. சும்மா சும்மா வந்து கூட்டம் கூடினா?''

பங்கஜம் பதில் சொல்லாமல் நின்றாள்.

''பக்கெட்டை வைச்சிட்டு வெளியே நில்லுங்க. தண்ணி வந்தா உள்ளே வந்துக்கலாம்.''

பங்கஜம் வாளிகளை ஒரு மூலையில் வைத்துவிட்டு மீண்டும் சாலைக்கு வந்தாள். நட்ட நடுநிசியில் அப்படிச் சாலையோரமாக நிற்பது அவளுக்கு அசாதாரணமாகத் தோன்றாமல்போய் மாதக் கணக்கில் ஆயிற்று. கிணறுகளில் தண்ணீர் இல்லாமல் கிடப்பது சாதாரணமாக இருந்தது. குழாய்த் தண்ணீர் ஒருநாள் விட்டு ஒருநாள் வருவதாகப் பேச்சு. ஆனால் வீட்டுக் குழாயில் வராது. எங்கே வருகிறதென்று தேடிப் பிடித்து அது வரும் இரு மணி நேரத்தில் பரபரக்க ஏராளமானவரோடு தேவையற்ற துவேஷம் வளர்த்து, இரு பாத்திரங்களில் வண்டலும் வடிசலுமாகத் தண்ணீர் பிடித்து எடுத்து வந்தால், இரு நாட்களுக்கு அதைச் சமையலுக்கும் வைத்துக் கொண்டு குடி தண்ணீராகவும் கொட்டிக்கொள்ள வேண்டும். இன்றிரவு இங்கு ஒரு வழியாகச் சமாளித்தால் நாளை மறுநாள் இப்படி நடுத்தெருவில் அலைய மனதைத் திடப் படுத்திக் கொண்டால் போதும்.

நடைபாதை ஓரக்கல்லிலும் இன்னும் பலர் காத்துக் கிடந் தார்கள். அங்கு சாதாரணமாகக் கிடக்கும் அசுத்தத்தில் பகல் வெளிச்சத்தில் நிற்கக்கூட அருவருப்பாயிருக்கும்.

※ ※ ※

தொளதொளவென்று ஒரு சட்டையில் ஒழுங்காகப் பொத்தான்கூடப் போடாமல் முத்து வந்து சேர்ந்தான். பங்கஜம் முத்துவைத் தன்னோடு சேர்த்து அணைத்துக் கொண்டாள். ''குழந்தை தூங்கிண்டு இருக்காளா?'' என்று கேட்டாள்.

''நான் பார்க்கலேம்மா. ஆனா அவ அழலே,'' என்று முத்து சொன்னான்.

''கதவைச் சாத்திண்டுதானே வந்திருக்கே?''

''ஆமாம்.''

''நீ இங்கேயே நில்லு. நான் தவலையை எடுத்துண்டு ஐஸ் டெப்போலே ஒரு தடவை தண்ணி பிடிச்சிண்டு வந்திடறேன்.''

''இங்கே தண்ணி வந்துடுத்தா?''

''இன்னும் வரலே. வீட்டுக்காரர் இப்போதான் பம்பை மாட்டிண்டு இருக்கா.''

பங்கஜம் சாலையைக் கடக்கவிருந்தவள் சட்டென்று நின்றாள். அசாத்திய வேகத்தில் ஒரு லாரி அவளைக் கடந்து சென்று மறைந்தது. அதை அடுத்து இன்னும் ஒரு காரும் மோட்டார் சைக்கிளும் பறந்து சென்றன.

பங்கஜம் முத்துவைக் கவலையோடு திரும்பிப் பார்த்தாள். பிறகு அவள் வீட்டுக்கு ஓட்டமும் நடையுமாகப் போனாள். தெருவில் அப்போதுதான் யாரோ கைவண்டியில் எங்கிருந்தோ தண்ணீர் பிடித்துக்கொண்டு போயிருக்கிறார்கள். சிந்திய தண்ணீர் தெரு நடுவில் பட்டையாகக் கோடிட்டிருந்தது.

போட்ட படுக்கைக்குச் சம்பந்தமே இல்லாமல் சம்பா தரையில் தூங்கிக் கொண்டிருந்தாள். பங்கஜம் அவளைத் தூக்கவில்லை. படுக்கையில் கிடத்தும்போது குழந்தை விழித்துக் கொண்டால் என்ன செய்வது? பெரியவர்களைப் போலக் குழந்தையும் ஒரு நாள் விட்டு ஒரு நாள் தூங்கக் கற்றுக் கொள்ள வில்லை.

பங்கஜம் தண்ணீர்த் தவலையுடன் ஒரு வெண்கலப் பானை யையும் தூக்கிக் கொண்டு மீண்டும் தெருவுக்கு வந்தாள். எதை நம்பி இருட்டில் குழந்தையைத் தனியே விட்டுவிட்டு வீட்டையும் தாளிடாமல் போகிறோம்? கணவன் ஊரிலிருந்தாலும் இல்லாது போனாலும் இதுவரை தண்ணீருக்காக அவன் இன்னொருவர் வீட்டுக் கொல்லையில் நிற்கப் போகவில்லை. ஆனால் வீட்டுக் கும் குழந்தைக்குமாவது காவலாக இருக்கலாம்.

ஐஸ் டெப்போ காவல்காரன், ''ஏய் எங்கே போறே?'' என்றான். பங்கஜம் இடுப்பிலிருந்து கால் ரூபாய் சில்லரை எடுத்தாள். அவன் அதைக் கவனியாது போல, ''போம்மா. போ போ போ. இன்னிக்கு ஒத்தரை உள்ளே விடமுடியாது. போ போ

போ!'' என்றான். அங்கு கூடியிருந்த கூட்டம் அவனிடம் அந்தக் கடுமையை உண்டு பண்ணியிருக்க வேண்டும். அதைப் பொருட் படுத்தாமல் எல்லா வயதுக் காரர்களும் அவனிடம் கெஞ்சிக் கொண்டிருந்தார்கள். பங்கஜமும் அவள் பங்குக்கு, ''இன்னிக்கு ஒருநாள் மட்டுங்க,'' என்றாள். ஒருநாள் மட்டும், ஒருநாள் மட்டும் என்றே எவ்வளவு நாட்களாகி விட்டன? இன்னும் எவ்வளவு நாட்கள் இப்படி?

முத்து அவளைத் தேடி வந்து விட்டான். ''இன்னும் மூணு பேர் பிடிச்சப்புறம் நம்பதாம்மா,'' என்றான்.

''நாலு பக்கெட்டும் சரியா இருக்கா.''

''இருக்கோ''

''நீ இங்கே நில்லு. நான் போய் தண்ணி அடிச்சு வைச்சுட்டு உன்னைக் கூப்பிடறேன்.''

''இந்த வெங்கலப் பானையை ஏம்மா எடுத்துண்டு வந்தே? இதிலே தண்ணியும் ரொம்பக் கொள்ளலே, தூக்கறதும் கஷ்டமா யிருக்கே?''

''என்ன பண்ணறதுடா? பெரிய அடுக்குலே நேத்திக்குத் துணி அலசின தண்ணியைச் சேத்து வைச்சிருக்கேன்.''

முத்துவிடம் தவலையையும் வெண்கலப் பானையையும் ஒப்படைத்துவிட்டுப் பங்கஜம் வாளிகளை வைத்திருந்த வீட்டுக்கு விரைந்தாள். அங்கு இப்போது அசாத்தியக் கும்பல் சேர்ந்திருந்தது. ''இப்போ வந்துட்டே எங்கே உள்ளே போறே? நாங்கள்ளாம் உனக்கு மனுஷாள்களாகத் தெரியலியா?'' என்று ஒரு கிழவி பங்கஜத்தைத் தடுத்தாள். ''பன்னெண்டு மணிக்கே நான் வந்து பாத்திரம் வைச்சிருக்கேன்.''

கிழவி சந்தேகத்துடன் பங்கஜத்தைப் பார்த்தாள். பங்கஜம் அந்தக் கும்பலில் அந்தக் குறுகலான சந்துக்குள் முன்னேறிச் சென்றாள்.

அந்தச் சாலையில் தண்ணீர் வந்த ஐந்தாறு வீடுகளில், அந்த ஒரு வீட்டு பம்பில்தான் சிறிது அதிகமாக வரும். ஆதலால் தண்ணீர் பிடிக்க வருபவர்களும் அங்குதான் அதிகம். பம்பு அருகே நின்றவர்களுடன் பங்கஜமும் முண்டியடித்துக் கொண்டு தன் முறைக்குக் காத்திருந்தாள். தண்ணீர் இன்னும் சிறிது நேரமே வரும் என்ற உணர்வில் ஒருவர் தவறாமல் பம்புப் பிடியை அரக்கத்தனமாக இயக்கிக் கொண்டிருந்தார்கள். ஒவ்வொரு

அடியும் சம்மட்டியடிபோல ஒலியெழுப்பிக் கொண்டிருந்தது. பங்கஜத்துக்கு முந்தைய இடத்தில் பாத்திரம் வைத்திருந்த அம்மாள், தலைப்பை இழுத்துச் சொருகிக் கொண்டு தயாராக இருந்தாள். அவள் முறை வந்ததும் பங்கஜமே அந்த அம்மா ளுடைய தவலையைப் பம்படியில் நகர்த்தி வைத்தாள். அதைத் தவலை என்பதைவிட வேறு பெயர் ஏதாவது தான் சொல்ல வேண்டும். அது நிரம்பினால் எப்படி நகர்த்துவது என்று ஒரு கணம் பங்கஜத்துக்குப் பயம் எழுந்தது. பாவம், அந்த அம்மாள் வீட்டில் எவ்வளவு நபர்களோ? ஆனால் ஒருவர்கூட அவளுக்குத் துணை வரவில்லை.

தவலை பாதி நிரம்பியபோதே அந்த அம்மாள் திரும்பித் திரும்பிப் பார்த்த வண்ணம் இருந்தாள். தவலைக்குப் பிறகு இன்னும் நான்கு பெரிய அடுக்குகள். அதன் பிறகு பங்கஜத்தின் முறை.

இரண்டாம் அடுக்கு நிரம்புவதற்குள் அந்த அம்மாளுக்குப் பெரிதாக மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்கத் தொடங்கியது. பம்பு அடிப்பதிலும் கை தடுமாறியது. ''நான் அடிக்கிறேன். நீங்க பாத்திரத்தை நகர்த்துங்க'' என்று சொல்லிப் பங்கஜம் பம்ப் பிடியை வாங்கிக் கொண்டாள். பம்பைச் சுவரில் பதித்து வைத் திருந்தால் ஒரே பக்கமாக ஒரே கையில்தான் அடிக்க முடியும். நிதானமாக அடித்தாலே ஒரு பாத்திரத்திற்குள் கை சளைத்து விடும்.

பங்கஜம் அந்த அம்மாளின் பாத்திரங்கள் அனைத்திற்கும் தண்ணீர்அடித்துத் தந்துவிட்டுத்தன் வாளியை நகர்த்திவைத்தாள். அங்கு நின்றிருந்த ஒருவர், ''ஒருத்தரே அண்டா அண்டாவாத் தண்ணி எடுத்துப்போனா, மத்தவங்க என்ன பண்ணுவாங்க?'' என்று சொன்னார். மூச்சிறைக்கப் பங்கஜம், ''இதுதான் என்னுது முதல் பாத்திரம்'' என்றாள்.

அந்த நபர், ''யோவ், சந்தானம்! இங்கே என்ன கேள்வி கேப்பாரு யாருமில்லே? இந்தப் பொம்பளைங்க இப்படி ஒரே யடியா பம்பைப் பிடிச்சு வளைச்சிட்டிருக்காங்களே! விடும்மா. நாங்களும் தண்ணி பிடிக்கத்தான் மணிக்கணக்கா நின்னுட்டிருக் கோம்,'' என்றார்.

தண்ணீர் நிரம்பிய அடுக்குகளை எடுத்துப் போய்க் கொண்டிருந்த அம்மாளிடம் பங்கஜம், ''நீங்கதான் அவர் கிட்டே சொல்லுங்கம்மா,'' என்றாள்.

அந்த அம்மாள் அந்த நபரிடம், ''அவுங்க இன்னும் பிடிக்க வேல்லப்பா,'' என்றாள்.

''ஆமாம், இதுல கூட்டு.''

பங்கஜத்தின் தோளே கழண்டுவிடும் போல இருந்தது. இன்னும் மூன்று வாளிகள் அடித்தாகவேண்டும். கொண்டு வந்தவற்றில் முழுக்கத் தண்ணீர் எடுத்துக் கொண்டு போனால் கூட, இரண்டாம் நாள் மாலையில் எல்லாம் சரியாகக் களைய முடியாது. சட்டென்று யாராவது ஊரிலிருந்து வந்து விட்டால், முகம் கழுவிக்கொள்ள ஒரு செம்புத் தண்ணீர் தரமுடியாது. மறுநாள் சுத்தமான வேஷ்டி புடவை வேண்டும் என்றால் துணி நனைத்து உலர்த்த முடியாது.

பங்கஜம் அவளுக்கு ஞாபகமிருந்த தோத்திரங்களை மனதுக் குள் சொல்லிக் கொண்டு, பம்பை அடித்த வண்ணம் இருந்தாள். ஒருமுறைகூட ஒரு தோத்திரத்தைக்கூட முழுக்கச் சொல்ல முடிய வில்லை. அங்கு விரலிடுக்கு இடமில்லாமல் நிறைந்திருந்த மக்களும் பாத்திரங்களும், அவளுடைய கண்ணில் மிக இலேசான நிழலாகத் தென்பட்டது போலத் தோத்திரங்களும் ஒரே குழப்பமான குவியலாக வந்து போய்க்கொண்டிருந்தன. லலிதா சகஸ்ரநாமத்தில் சௌந்தர்ய லகரி. நடுவே கிருஷ்ணாஷ்டகம். பித்துக்குளி முருகதாஸ் பஜன் பாட்டு. அம்மா! அம்மா! அம்மா!

பங்கஜத்துக்கு அம்மாவென்று கத்தியழைக்கக்கூட முடியாது போலத் தோன்றிற்று. அவளுடைய கை ஏதோ தனிப்பட்டுப் போனதுபோல ஏறி இறங்கிக் கொண்டிருந்தது. மார்பு எவ்வளவு கனத்ததோ அந்த அளவு மனம் காலியாக இருந்தது. அவள் அவளே இல்லை. அவள் வேறு யாரோ. வேறு யாரோ என்று சொல்வதுகூடத் தவறு. வேறு ஏதோ.

மூன்றாவது வாளி அடிக்கும்போது முத்து வந்துவிட்டான். ஐஸ் டெப்போவில் என்ன ஆயிற்று என்று கேட்கக்கூட முடியாமல் பம்புப் பிடியை பங்கஜம் முத்துவிடம் கொடுத்தாள். அவன் ஒரு கையால் அடிக்க முடியாமல் இரு கைகளாலும் பிடியைப் பிடித்துக் கொண்டு ஒவ்வொரு முறையும் தன் முழு உடலையும் உயர்த்தி அடித்தான்.

பங்கஜம் ஒவ்வொரு வாளியாகத் தூக்கிச் சாலை நடை பாதையில் கொண்டு போய் வைத்தாள். அங்கே இன்னும் எவ்வளவோ பேர் தண்ணீர் பிடித்ததும் பிடிக்காததுமாகப் பாத்திரங்களையும் வாளிகளையும் வைத்திருந்தார்கள். ஆண்கள்

சைக்கிள்களில் எப்படியெல்லாமோ குடங்களையும், தவலை களையும் கட்டித் தொங்க விட்டுக் கொண்டு அலைந்து கொண்டி ருந்தார்கள். ஊரே வெறி பிடித்தது போலக் குழாய்த் தண்ணீருக்கு அலை பாய்ந்து கொண்டிருந்தது.

பங்கஜத்துக்கு அடிவயிற்றில் சுளீரென்று ஒரு முறை வலித்தது. போன தடவையும் இப்படித்தான் வலி வந்து, தெருவிலேயே சுருண்டு விழுந்திருந்தாள். சம்பா பிறந்தவுடனே அவளது கணவன் ஆஸ்பத்திரியில் கையெழுத்துப் போட்டுக் கொடுத்தான். ஆபரேஷன் ஆனபோது பெரிய தொந்தரவு இருக்க வில்லை. ஆனால் இப்போது இரண்டு வருடங்கள் கழித்து வலிவரத் தொடங்கியிருக்கிறது. பெரிதாகிப்போய் படுத்த படுக்கையாகத் தள்ளி விடக் கூடாது.

* * *

கடைசி வாளி அடித்துவிட்டுத் தூக்கமாட்டாமல் அதைச் சிறிது சிறிதாக நகர்த்திக் கொண்டு முத்துவும் நடைபாதைக்கு வந்து சேர்ந்தான். அவனுக்கும் வயிற்றை வலிக்கும். ஹெர்னியா என்று சொல்லிப் போன வருஷமே ஆபரேஷன் செய்ய வேண்டுமென்று டாக்டர் சொன்னார். சொன்னவர் பயமுறுத்திச் சொல்லியிருந்தால் ஒருவேளை உடனே ஏதாவது செய்து இருக்கலாம். பங்கஜம் முத்துவை அணைத்துக் கொண்டாள். ''நீ போடா வீட்டுக்கு. நான் ஒவ்வொண்ணா கொண்டு வந்துட றேன்,'' என்றாள்.

''ஐஸ் டெப்போலே சாவித்திரிகிட்டே சொல்லிட்டு வந்தி ருக்கேன். அதையும் அடிச்சுட்டுப் போறேம்மா,'' என்று முத்து சொன்னான்.

''வேண்டாம்டா, கண்ணா. இது போறும். எப்படியாவது பாத்துக்கலாம்.''

''அப்போ அங்கே போய்க் காலி பாத்திரத்தை எடுத்துண்டு போகட்டுமா?''

''இல்லை, நீ வீட்டுக்குப் போ. நான் எடுத்துண்டு வரேன்.''

பங்கஜம் ஒவ்வொரு வாளியாகச் சாலையைக் கடந்து மறுபுறமிருந்த நடைபாதையில் கொண்டு போய் வைத்தாள். அங்கே ஒரு கன்றுக்குட்டி அவளருகே வந்தது. ''போ போ,'' என்று விரட்டினாள். அது நகராமல் அங்கேயே நின்றது. அடுத்த வாளி எடுத்துவர அவள் நகர்ந்தவுடன், அது நிச்சயம் தண்ணீரில் வாயை வைத்து விடும்.

பங்கஜம் மறுபடியும் அந்தக் கன்றுக்குட்டியை விரட்ட முயன்றாள். எந்தத் துவேஷமும் பாராட்டாமல், அது சொறிந்து கொடுக்க வாகாகத் தலையை உயர்த்தியது.

''சரி, குடி,'' என்று பங்கஜம் சொன்னாள். சாலை மறுபுறத்தில் வைத்திருந்த இதர பக்கெட்டுகளை எடுத்து வர விரைந்தாள். நாளை மறுநாள் இந்த அளவு தண்ணீராவது கிடைக்குமா என்று தெரியாது. ஆனால் இன்றையப்போது இதோடு முடிந்து விட்டது, விடிய இன்னும் வெகுநேரம் இருந்துங்கூட. ❑

# நீல ரிப்பனும் வானவில்லும்

**ஆர். சூடாமணி**

கடல் மீது சீறிக்கொண்டு நுரை பொங்க உயரே சுழித்தெழும்பும் அலையை யாரோ பிடித்து ஆகாயத்தில் மாட்டி வைத்ததுபோல் ஒரு மேகம். அதன் கீழே, தெருப் புழுதியில், சில குழந்தைகள் விளையாடிக் கொண்டிருந்தார்கள்.

அவர்களிடையே ஒரு பின்புறத் தோற்றம். காக்கி அரை நிஜார். மேலே சட்டை இல்லை. முதுகில் நிக்கர் பட்டைகளின் 'எக்ஸ்'. அதன் இருபுறமும் இறங்கும் சாண் நீளச் செம்பட்டை இரட்டைப் பின்னல்கள். ஒரு பின்னலின் முனையில் நீல ரிப்பன் கட்டியிருந்தது ரிப்பன் இல்லை. நிஜார் போட்ட பெண் குழந்தையா அல்லது பின்னல் போட்ட ஆண் குழைந்தயா? திரும்பிய பிறகும் முகத்திலோ குரலிலோ பால் பேதம் தெரியவில்லை. வெறும் குழந்தைப் பருவமான வடிவம். மற்றக் குழந்தைகளின் இந்த அரை நிர்வாணம் ஒரு வித்தியாசம், ஒரு தீவு.

சிந்தாதிரிப் பேட்டையின் அந்தக் குறுகிய சந்தில் வரிசையாய்க் கடைகள், கூடவே சின்னச் சின்னக் குடியிருப்புகள். ஒரு சைக்கிள் ரிப்பேர்க் கடையின் முகப்பில் தான் (அது கடையின் முகப்பா அல்லது தெருவின் நடைபாதையா?) இந்தக் குழந்தைகள் விளையாடிக் கொண்டிருந்தார்கள். அந்தக் குடியிருப்புகளினின்று வந்திருக்கலாம். கடைச் சொந்தக்கார வாலிபன் தன் தொழிலுக்கிடையே அவ்வப்போது முகம் உயர்த்தி அவர்களைப் பார்த்துப் புன்சிரித்தான். மாலை நேரத்து இந்த விளையாட்டு அங்கு ஒரு மாமூல்.

கவுன் விளிம்பை இரு விரல் நுனிகளால் நாசூக்காய்த் தூக்கிப் பிடிக்கும் மிடுக்கில், அதன் கிழிசல் ஓட்டுகளை மறைந்து போகச்

செய்யும் ஒரு பெண் குழந்தை, ''நான்தான் சீதேவி'' என்று அறிவித்தாள்.

''நேத்து ஸ்ரீப்ரியான்னு சொன்னியே?'' என்றான் கடைக்காரன்.

''நேத்துதானே?''

அந்த இள உலகில் இன்று என்பது நேற்றிலிருந்து ஒரு ஜன்ம தூரம்.

ஓர் ஆண் குழந்தை தெருவில் யாரோ நசுக்கி எறிந்திருந்த அவிந்த பீடி முனையை எடுத்து வாய்க்குச் சற்றுத் தொலைவி லிருந்து சுண்டிப் போட்டு உதடுகளில் கௌவிக்கொள்ள முயன்றவாறே, ''இது ரஜினி ஸ்டைல்'' என்றான். அவன் நேற்று கமலாய் இருந்தவன்.

வானத்தில் அலைகள் மறைந்து, மரங்களும் மனித முகங்களும் தோன்றியிருந்தன. சட்டென்று படரும் ஒரு லேசான கருமை. காற்றில் ஒரு சிலுசிலுப்பு. தொலைவுப் பட்டாசாக எங்கோ விண்வெளியில் உருண்டோடும் ஒரு சப்தம். மழை வருமோ?

குழந்தைகள் கண்ணாமூச்சி, சடுகுடு போன்றவையும் வேறு பிறவும் விளையாடிக் கொண்டிருந்தார்கள். அருகில் வாகன நெரிசலுக்கு உயிரை நிமிடத்துக்கொருமுறை பணயம் வைத்து மீளும் ஆபத்தையோ, தெருவின் அசுத்தங்களில் உடம்புகள் மேலும் அழுக்காவதையோ பொருட்படுத்தாமல விளையாடி னார்கள். சிலர் தமது களிப்பினால் கந்தலைச் சிரிக்க வைத்தார்கள். வேறு சிலர் ஆட்டம் ஆடி, அந்தப் புழுதித் தெருவை நடன அரங்கமாக்கினார்கள்.

வரிசைக் கடைகளில் ஒரு பாக்கு புகையிலைக் கடைக்கு வந்த வாடிக்கையாளர், கையிலிருந்த ஐந்து ரூபாய் நோட்டை ஸ்டூல் மேல் வைத்துவிட்டு வயதான கடைக்காரரிடம், ''வழக்கம்போல அம்பது கிராம் வாசனைப் பாக்கு'' என்று கூறி அங்கு சுவரில் வாடிய பூமாலையுடன் காணப்பட்ட கஜலக்ஷ்மி படத்துக்கு ஒரு கும்பிடு போட்டார்.

''இந்தாங்க.''

பிளாஸ்டிக் உறை மடிப்பில் பாக்குத் தூள். அருகில் மிச்சப் பணம். பார்த்தவர் திடுக்கிட்டார். ''என்னய்யா இது, மூணேகால் ரூபாயில்ல தரணும்? மூணு தந்திருக்கீங்களே!''

''சாமானுங்க விலையெல்லாம் ஏறிப் போயிடிச்சே சார்! பாக்கு மட்டும் பின்னாலேயே நிக்குமா? இப்ப அம்பது க்ராம் ரெண்டு ரூபா''.

'பகல் கொள்ளை' என்று வாய்க்குள் ஒரு முணு முணுப்பு. ''இந்த நாள்ல வியாபாரிங்கதான் பிழைக்க முடியறது'' என்று வெளியில் ஓர் எரிச்சலான சிரிப்பு. வாடிக்கையாளரின் பார்வை தெருவுக்கு அலைந்தது. தெருவில் பத்து வயதுப் பையன் ஒருவன், ஒரு தட்டில் இரண்டு கண்ணாடித் தம்ளர்களில் காப்பி எடுத்துப் போய்க் கொண்டிருந்தான்.

தெருத் திருப்பத்திலிருந்த 'கீதா கபே' யிலிருந்து யாரோ தருவிப்பதை அவர்களுக்கு எடுத்துப் போகும் ஏவலாளன் போலும். பையன் சற்று நின்றான். ஒரு தம்ளரை எடுத்து மெல்ல ஒரு வாய் காப்பியை உறிஞ்சினான். கண் மலர, உதட்டை நாவால் நக்கிக் கொண்டான். பிறகு அந்தத் தம்ளரை வைத்துவிட்டு, இரண்டாம் தம்ளரை எடுத்து அது போலவே ஒரு வாய் காப்பியைப் பருகி ரசித்தான். பிறகு வாயைத் துடைத்துக் கொண்டு 'ஸீரியஸ்' முகத்துடன் தட்டைச் சுமந்தவாறு மேலே விரைந்தான்

''எல்லாம் திருட்டுப் பசங்க. ஏமாத்துக்காரங்க'' என்றார் பாக்கு வாடிக்கைக்காரர். வாய்விட்டு யாரையோ ஏச முடிந்ததில் ஒரு திருப்தி. இரண்டு கடைகள் தாண்டி விளையாடிக் கொண் டிருந்த குழந்தைகள் மேல் பார்வை சென்றது. பழசானாலும் வர்ணமயமாய் சட்டைகள், கவுன்கள், பாவாடைகள், நிக்கர்கள். 'தரையில் விழுந்த நிறங்கள்' என்று சினிமாப் பாணியில் ஒரு தலைப்பு வரி மனத்தில் தோன்றியது. வர்ணங்களிடை அந்தக் காக்கித் தீவைச் சட்டென்று கவனித்தார்.

''அட! பான்ட், பின்னல்! ஆணா பொண்ணாய்யா?''

பாக்குக் கடைக்காரர் முன்னால் வந்து தலையை நீட்டி வெளியே எட்டிப் பார்த்தார். ஆள் அடையாளத்துக்காக அல்ல. அந்த வர்ணனையே இனம் காட்டியது. சேர்ந்து பார்க்கிற சுவாரஸ்யத்துக்காகத்தான் எட்டிப் பார்த்தார்.

''ஆம்புளைக் கொழந்தைதான். பேரு ஒலகநாதன். திருத்தணியில் முடி குடுக்கிறதாய்ப் பிரார்த்தனை. பாவம், பரிதாபக் கேசு சார். அப்பன் இது வயித்திலே இருந்தப்பவே கண்ணை மூடிட்டான். இந்தத் தெருவிலேயே என்னை மாதிரிக் கடை வச்சிருந்தவன்தான். மூக்குப் பொடிக் கடை. சின்னான்

கடைகாரப் பொடின்னா வட்டாரத்திலேயே பிரசித்தம். காரில்கூட வந்து வாங்கிக்கிட்டுப் போவாங்க. பொட்டுனு ஒருநா மாரடைப்பில மண்டையைப் போட்டுட்டான். ஹூம், அவனோடகூட வசதியும் போச்சு. அம்மாக்காரி அப்பப்போ கூலி வேலையோ வேறென்ன வேலை கெடக்கிதோ செஞ்சு அரை வயித்துக்குத் தின்னு புள்ளையையும் காப்பத்தறா. இந்த ஒரு வாண்டு இருக்கிற பிடிப்பில உசிரை வச்சிருக்கேன்னு அடிக்கடி சொல்லுவா, பாவம். இதைத் திருத்தணிக்குக் கூட்டிப்போய் முடி குடுக்கணும்னு என்னமோ ஒரு ஆசை...

உலகநாதனின் ரிப்பன் கட்டாத பின்னல், அவன் குதித்த குதியில் அவிழ்ந்து போயிருந்தது. செம்பட்டை முடி சடைத் திரிகளாய்த் தொங்கியது... காற்றில் அலைந்து கண்ணில் புகுந்து ஆட்டத்துக்கு ஊறு செய்தது. பையன் அடிக்கடி சிணுங்கலுடன் இடது கையால் முடியைப் பின்புறம் தள்ளி விட்டுக் கொண்டான்.

''என்னா அர்த்தநாரீசுரரே, ஒரு பின்னலுக்கு ரிப்பன் என்னாச்சு?'' என்று பாக்குக்கடைக்காரர் குரல் கொடுத்தார்.

''எம் பேரு அர்த்தத்நாரீசுரரில்ல'' என்று முதலில் திருத்தி விட்டுப் பையன், ''எங்கம்மா கட்டி விடல'' என்றான்.

''நேரமிருந்திருக்காது அண்ணாச்சி! நாலு நா பட்டினிக் கப்புறம் இன்னிக்குத்தான் எங்கேயோ சித்தாள் வேல கெடச்சிருக்குன்னு ஓடியிருக்குதாம் இவங்கம்மா. மூணாம் வூட்ல சொன்னாங்க. இதுக்கு ரிப்பன் போட்டுக் கட்டி அழகு பாக்கத்தானா நேரம் கெடைக்கப் போகுது?'' என்றான் சைக்கிள் கடைக்காரன்.

''ஒரு பின்னலுக்கு நேரம் இருந்து இன்னொண்ணுக்குத் தான் அவசரம் வந்திடிச்சாங்காட்டியும்? ஏண்டா அர்த்தநாரீ, வீட்ல இன்னொரு ரிப்பன் இல்லையா? அப்ப ஒரே பின்னலாப் பின்னிக்கலாமில்ல? திருத்தணி சாமி கூடாதுங்குதா? ரெட்டைப் பின்னல் என்ன ஸ்டைல் பாளாப் போகுது?''

''எம் பேரு அர்த்த நாரியில்ல. இன்னொரு ரிப்பன் இருந்திச்சு. ஆனா எங்கம்மாவுக்கு அது பிடிக்கலே. வேணாம்னுட்டது.''

''பெரிய மகாராணி தாண்டாப்பா உங்கம்மா! பொளப்பே சிங்கியடிக்குது, இதிலே பிடிச்ச ரிப்பன், பிடிக்காத ரிப்பன் வேறயா?'

''அடியே பூங்கோதே!'' என்று தெருக் கோடியிலிருந்து ஒரு பெண்ணின் குரல் கேட்டது.

குழந்தைக் குவியலிலிருந்து ''என்னம்மா?'' என்று ஓர் எரிச்சலான பதில்.

''சமயம் பாத்து எங்கேடீ ஒழிஞ்சு போயிட்டே? பெரிய வூட்டாண்ட போய்க் கெணத்துல தண்ணி சேந்தியாராண்டாம்? மளை வரும் போலிருக்கு. வந்துட்டாக் கதவை அடைச்சிட மாட்டாங்க? அப்புறம் தண்ணிக்கு எங்கே போய் சாவுறது? வா வா, வாளியை எடுத்துக்கிட்டு ஓடு.''

''இன்னும் ரவூண்டு நேரம் வெள்ளாடிட்டு...''

''வெள்ளாடுமாச்சு செம்மறியாடுமாச்சு! இப்ப ஒடனே வாரியா இல்லியா? வெளக்குமாறு முறிஞ்சிப்போயிடும், கய்தே. டீ பூங்கோதே, ஒன்னத்தாண்டி!''

மனமின்றி ஸ்ரீதேவி பூங்கோதையானாள். ''தோ வாரேம்மா!'' சகாக்களை ஏக்கத்துடன் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே, ''நாளக்கென்ன, நீ ஸ்ரீவித்யாவா?'' என்ற கடைக்கார வாலிபனின் கேள்வியைப் பொருட்படுத்தாமல், தன் வீடு நோக்கி நடந்தாள்.

''சீ, எளவெடுத்த முடி பூரா அவுந்துபோச்சு'' என்று உலகநர்தன் அவிழ்ந்த குட்டை முடியை இடது கைப் பிடிக்குள் அடைத்துக் கடைக் கண்ணால் கோபமாய், முறைத்தான், செம்பட்டை பதிலுக்குக் கனன்றது.

''இருக்கற ரிப்பனைப் போட்டுக் கட்டி விட்டிருக்கக் கூடாது உங்கம்மா? இப்ப படு அவஸ்தை. ஏண்டா அர்த்தநாரி, உனக்காகவே பின்னல் போட்டுக்கத் தெரியாதா?'' என்றார் பாக்குக் கடைக்காரர். பையன் பதில் சொல்லவில்லை.

''என்னடா பொடியா, கேட்டுக்கிட்டே இருக்கேன் கம்முனு நிக்கிறே? கொளுப்பா?''

''அர்த்தநாரின்னு கூப்பிட்டா பதில் சொல்ல மாட்டேன்.''

''அட்ரா சக்கைன்னான்! இம்புட்டுப் பெரிய மனுஷ னாய்ட்டியா நீ? சரி, வுடு, ஒனக்கே பின்னல் போட்டுக்கத் தெரியாதாடா ஒலகு?''

''ஊஹூம், இந்தச் சனியனை வெட்டி எறின்னாலும் அம்மா கேக்க மாட்டேங்குது.''

''சீசீ சாமிக்குக் கொடுக்கப் போற முடிடா! சனிகினின் னெல்லாம் பேசப்படாது. கண்ணு அவிஞ்சு பூடம். சாமியை நெனச்சு மன்னாப்புக் கேட்டுக்கிட்டுக் கன்னத்தில் போட்டுக்க.''

உலகநாதன் பயந்தவனாய்ச் சாமியை நினைக்க முயன்றான். சடுகுடு ஆட்டத்தின் நடுவே அது எளிதாயில்லை. திடீரென்று மகாத்மா காந்தி சொன்ன வகையில் சாமி அவன் முன் பிரத்தியட்சமானார். அவன் அசைவிழந்தான்.

'கீதா கபேயில்' டபிள் செவன் குடித்துவிட்டுக் கையில் பொட்டலம் நிறைய முறுக்குகளுடன் கொறித்துக்கொண்டே வந்த ஓர் இளம் ஜோடி, இந்தக் குழந்தைகளைக் கண்டதும் சிரித்தவாறு அருகில் வந்து ஆளுக்கொரு முறுக்கு வழங்கினார்கள். இமைப் பொழுதில் விளையாட்டு நின்று பரபரப்பான உடல்களில் கண்கள் விரிந்தன. கைகள் நீண்டன. ஒரு சிறுமி முறுக்கைக் கொஞ்சம் சுவைத்துவிட்டு மிச்சத்தைக் கிழிசல் கவுனில் ஜாக்கிரதையாய் முடிந்து வைத்துக் கொண்டாள். இன்னொருத்தி அவசரமாய் வாய் மேல் உள்ளங்கையை அழுத்திப் புழுதியும் வேர்வையும் சேர முறுக்கை இரண்டே கவளத்தில் உள்ளே தள்ளிவிட்டு, மறுபடியும் கையை நீட்டினாள். ஒரு சிறுவன் முறுக்கைத் தின்ற பின், திட்டாக அழுக்குப் படிந்திருந்த நிக்கர் பின் பக்கத்தில் கையைத் துடைத்துக் கொண்டான். இன்றைய ரஜினிகாந்த் முறுக்கை ஒடித்து சிகரெட் புகைத்த அதே ரஜினி ஸ்டைலில் சுண்டிப் போட்டுத் தின்றான்.

உலகநாதன் நாவில் எச்சில் ஊறியது. எனினும் கைகளைப் பின்னால் வைத்துக் கொண்டு மிடுக்காக, ''எனக்கு வேணாம்'' என்றான்.

''ஏண்டா பையா, அப்படி? முறுக்கு நல்லாயிருக்கும். இவங்கள்ளாம் தின்றாங்களில்ல. நீயும் வாங்கிக்க'' என்று அந்த ஜோடி வற்புறுத்தியது.

உலகநாதன் தலையை உறுதியாய் ஆட்டினான். கண்கள் முறுக்கின் மீது படிந்தபோது அவைகளில் நீர் சுரந்தது. கூடவே மூக்கும் ஒழுகியது. உறிஞ்சிக் கொண்டான். உணவைப் பிடுங்கிக்கொள்ள வெளியே தானாகவே கழன்று விழுந்துவிடும் போலிருந்த காலி வயிற்றை அடக்கி வைத்தான்.

''ஊஹூம் வேணாம்...''

''ஏண்டா?''

''எங்கம்மா யாரண்டையும் கை நீட்டக் கூடாதுன்னு சொல்லியிருக்குது. இன்னக்கி வேலை பார்த்துக் கூலி வாங்கி எனக்குப் பன் வாங்கியாரேன்னு சொல்லியிருக்குது.''

''சரிதான் போடா. பெரிசா பிகு பண்ணிக்கிறான். கமான் லெட்ஸ்! கோ.''

அந்த ஜோடி சென்றுவிட்டது. பாக்குக் கடைக்காரர், ''என்னாடா அல்டாப்பு. இம்புட்டு ராங்கிக்காரனா எப்ப ஆனே நீ? ம். தலையெழுத்து கோணலாயிருந்தா யாரு மாத்த முடியும்? கெட பட்டினி. கை நீட்ட மாட்டாரமில்ல ஐயா! பெரிய ஜமீன்தார் பரம்பரைன்னு நெனப்பு. அப்படித் தானே அர்த்தநாரி- ஸாரி- மிஸ்டர் உலகநாதன்?'' என்று வேதனைக் கோபத்துடன் இரைந்து விட்டு, மீண்டும் கடைக்குள் வந்து வியாபாரத்தைக் கவனிக்க லானார். அந்த வாடிக்கையாளர் போய் வேறு சிலர் வந்திருந் தார்கள். தெருவில் கூட்டம் மாறிக்கொண்டே இருந்தது. விளையாட்டுக் குழுவில் குழந்தைகள் ஒவ்வொருவராய்க் கலைந்து விட்டார்கள். மழைத் தூறலுக்கு மேல் வலுக்கவில்லை. எங்கோ பெய்த நல்ல மழையின் வாலாக மேகங்களூடே ஒரு வானவில் தோன்றியது.

''வானவில்!''

''ரேய்ன்போ!''

''அங்கே பாருங்க!''

''அஸ்தமன சூரியன் தான் கலர் கலரா தெரியுது. வானவில் இல்லே.''

''இல்லீங்க, வானவில்லேதான்.''

''பட்டையா தனியாத் தெரியுதே! வளைவா மேலே போகுது, பாருங்க, தெரியலே? அதோ பச்சைக் கலர் வேற. ரேய்ன்போதான்.''

யாராரோ பேசிக்கொண்டார்கள். உலகநாதன் அது ஒன்றையும் கவனிக்கவில்லை. அவன் கண்முன் இன்னும் அந்த முறுக்குதான் இருந்தது. கடுக் முடுக் என்று சகாக்கள் கடித்துத் தின்ற சப்தம் காதுகளில் ஒலித்தது. நாவில் ஊறிய நீரைப் பிடிவாதமாய்த் துப்பினான்.

மண்ணில் ஈர மணம் எழுந்தது. இப்படி இளந்தூறலுடன் நின்றுவிடும் மழை நிச்சயம் பின்னால் புழுக்கத்தை அதிகமாக்கும். ஆனால் இந்தக் கணம் தண்ணென்று காற்று வீசியது உடம்புக்குச் சுகமாயிருந்தது. ஒரு போலிக் குளிரின் ஆனந்தம் உறைத்தது. உலகநாதன், வெற்று மார்பில் கரங்களைச் சேர்த்து இறுக்கிக் கொண்டான். கைப்பிடியிலிருந்து நழுவிக் காற்றின் அலைப்பில் கண்களுள் புகுந்த செம்பட்டை முடியைத்

தலை உதறலில் தவிர்த்துக் கொள்ள முயன்றவாறு, சைக்கிள் கடைக்காரனிடம் "எங்கம்மா வார வரைக்கும் இப்படியே படியண்ட கொஞ்சம் குந்தியிருக்கட்டுங்களா?" என்றான்.

"சரி."

ஓரமாய் உட்கார்ந்து கொண்டான். வானத்தைப் பார்த்தான். உற்றுப் பார்த்தால் ஆரஞ்சா - மஞ்சளா - அல்லது நீலமா - பச்சையா - என்று பேதம் புரியாதவாறு கண்களை ஏய்த்துக் கரைந்து போய்விடும். அத்தனை நிறங்களும் ஒரு குறுகிய வட்ட வளைவுக்குள் ஜாலம் காட்டின. மாலை முற்றவே வானம் தன் வில்லையும் எடுத்துக்கொண்டு மெல்ல மறைய ஆரம்பித்தது.

*"அடே ஒலகு! என்னாடா உக்காந்தே தூங்குறியா? பசியொறக்கமாடா கண்ணு?"*

கண்களைத் திறந்த போதுதான் கண்கள் மூடியிருந்ததையே உணர்ந்தான் உலகநாதன். எதிரே பார்த்ததும் முகம் மலர்ந்தது. *'அம்மா!'*

"வூட்டுக்குப் போகலாமா?... இந்தா, அதுக்கு முந்தி இதைத் துண்ணு."

கையிலிருந்த ஒரு பேப்பர் பொட்டலத்தையும், தையல் இலைப் பொட்டலத்தையும் அவனிடம் அவள் கொடுத்தாள். உள்ளே ஒரு பன், மூன்று இட்டலிகள்.

"இட்லிம்மா!" என்று சிறுவன் மகிழ்ச்சியில் கூவினான்.

"ஒனக்குத்தான். துண்ணு."

"ஒனக்கும்மா?"

"நான் வாரப்பதான் டீ குடிச்சேன். ஒரு பன்னும் வச்சிருக்கேன். போதும். இன்னும் துட்டு இருக்கு. ராவிக்கு வேறு எதுனாச்சும் வேணும்னாலும் வாங்கிக்கலாம்."

பையன் ஆவலாய் உண்ணத் தொடங்கினான். அவள் புன்சிரிப்போடு அக்காட்சியை ரசித்தாள். அந்தப் புன்சிரிப்பைத் தவிர வேறு எந்த மலர்ச்சியும் அவளிடம் தென்படவில்லை. ஒட்டி உலர்ந்த உடம்பு. மெலிவினால் வாய் சற்று முன்னால் நீட்டிக் கொண்டிருப்பது போல் தோற்றமளித்தது. அழுக்குப் படிந்த உடைகள், காதுகளில் ஈர்க்குச்சி, வெறுங்கழுத்து, மணிக் கட்டில் கண்ணாடிவளையல்கள். கண்களின் களைப்பு அந்த ஒரு நாளைய வேலைப் பிரயாசையின் விளைவல்ல. அது வாழ்வைச் சுமக்கும் களைப்பு, சொல்லப்போனால், இன்று அவளது அதிருஷ்ட

நாட்களில் ஒன்று. இன்று வேலை கிடைத்திருக்கிறது. சோறு கிடைத்திருக்கிறது.

வேர்வை நெடி வீசும் சேலை முந்தானையால் முகத்தையும் கழுத்தையும் அவள் துடைத்துக் கொண்டாள். "ரிப்பன் இல்லாமல் பின்னல் அவுந்து போயிடிச்சு, இல்லே?" என்றவாறு மகனின் அவிழ்ந்த முடியை விரல்களால் கோதிச் சரியாகப் பின்னி விட்டாள். பிறகு, தன் முந்தானை நுனியிலிருந்த முடிச்சை உவகையுடன் அவிழ்த்து அதனுள்ளிருந்து ஓரடி நீளத்துக்கு ; ஒரு புதிய நீல ரிப்பனை எடுத்தாள்.

"ஒரு பின்னலுக்கு அளகா நீல ரிப்பன் கட்டினேன். வூட்ல இருக்கற இன்னொண்ணு கறுப்பில்லே? அதை எப்படிக் கட்டுறது? அது எப்படி நீலத்தோட சோடி சேரும்? ரெட்டைப் பின்னல்ல ஒவ்வொரு பின்னலுக்கு ஒவ்வொரு கலர் ரிப்பன் கட்டினா அசிங்கமாயிருக்காதா? அதான் இன்னிக்கிக் கெடச்ச துட்டில இதுக்கு சோடியா இன்னொரு நீல ரிப்பனே புச்சா வாங்கியாந்துட்டேண்டா" என்று பேசிக் கொண்டே அந்த நீல ரிப்பனை மகனின் இரண்டாம் பின்னலில் வைத்துக் கட்டி முடிபோட்டாள். இரு பின்னல்களையும் மாறி மாறிப் பார்த்தவளின் கண்கள் பிரகாசமாயின.

"இப்பத்தான் அளகாயிருக்குது! இப்பத்தான் ரெண்டும் ஒரே கலராய்ப் பொருத்தமாயிருக்குது!"

கடையைப் பூட்டுவதற்குத் தயாராக வாசல் கதவுப் பக்கம் வந்த பாக்குக்கடைக்காரனின் கண்கள் அந்தக் காட்சியில் நிலைத்தன. இரு பின்னல்களில் முடிந்த இரு நீல ரிப்பன்களுடன் மகன், அவன் பின் தாய். இரு ரிப்பன்களையும் மாறி மாறிப் பார்த்து, ஜோடிப் பொருத்தத்தை ரசிக்கும் அவளுடைய குழி விழுந்த கண்களின் பிரகாசம்.

சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்த பின், அவர் பார்வை வானத்தை நோக்கி அண்ணாந்தது. அங்கு இப்போது வானவில் இல்லை. மின்னல் காட்சியாகச் சிறு பொழுது வெளிவந்து உள்ளடங்கும் வானவில். ஆனால் வானத்தை எத்தனை அழகாக்கி விடுகிறது!

அவர் மறுபடியும் உலகநாதனின் தாயைப் பார்த்தார். அவள், தான் அப்போது பின்னி விட்டிருந்த இரண்டாம் பின்னலைத் திருப்தியோடு கையில் பிடித்துப் பார்த்துக் கொண்டிருந்தாள். வானவில் அவள் கையில் ஒரு நீல ரிப்பனாக இறங்கியிருந்தது. ❑

# புதிய பாலம்

நா. பார்த்தசாரதி

சமூகத் தொண்டன் பொன்னம்பலம் நாயாக அலைந்தான். அலையாவிட்டால் முடியுமா? எடுத்துக் கொண்டிருப்பது எத்தனை பெரிய காரியம்? எவ்வளவு பெரிய பொறுப்பு? தொண்டு செய்வதும், பொதுக் காரியங்களுக்காக அலைவதும் தான் அவனால் செய்ய முடிந்த சுலபமான காரியங்கள். இதை இப்படிச் சொல்வதைக் காட்டிலும், பொதுத் தொண்டுகளுக்காக அலையாமலும் பாடுபடாமலும் இருக்க முடியாத ஆட்களில் அவனும் ஒருவன் என்று சொன்னால் சரியாக இருக்கும். அவன் சர்வ சாதாரணமான ஏழை மனிதன்தான். பணத்தை வாரி வழங்க அவனால் முடியாது ஆனால் உழைப்பை வழங்க முடியும். அந்த உழைப்பு என்னும் குறையாத நிதியைச் சமூகப் பணிக்கும், பொதுக் காரியங்களுக்கும் செலவழித்துக் கொண்டிருந்தான் பொன்னம்பலம்.

வடக்குக் கரையில் உள்ள ஊரையும், தெற்குக் கரையில் உள்ள ஊரையும் ஓர் ஆறு குறுக்கே பாய்ந்து பிரித்துக் கொண்டிருந்தது. சிறிய ஆறுதான். வருடத்தில் எட்டு மாதங்களுக்கு மணல்தான் ஓடும். எஞ்சிய நான்கு மாதங்களிலோ இருகரையும் மீறிக் கடுமையாகத் தண்ணீர் பாயும். இந்த ஆற்றுக்குச் சரியான பாலம் இல்லாமல் அக்கரை ஊர்க்காரர்களும், இக்கரை ஊர்க்காரர்களும் துன்பப்பட்டுக் கொண்டிருந்தனர். எவனோ சோழ அரசன் காலத்தில் கட்டின பழைய கல்பாலம் ஒன்று ஊரிலிருந்து வெகு தூரத்துக்கு விலகிப் பத்தாவது மைலிலோ, பதினைந்தாவது மைலிலோ இருந்தது. கரையோரமாகவே அந்தப் பாலம்வரை போய்ச் சுற்றி வளைத்து அக்கரை அடையலாமே என்றால், சுற்று வழி காரணமாக அநாவசியமான காலதாமதம் ஆயிற்று. அந்த இரண்டு ஊர்களுக்கும் வசதியாக ஊரை ஒட்டி ஒரு பாலம் இருந்தால் எவ்வளவோ நன்மையாக இருக்குமென்று

எல்லோரும் விரும்பினார்கள். சமூகத் தொண்டன் பொன்னம்பலம் இந்த விருப்பத்தை வளர்த்தான்.

ஐந்தாண்டுத் திட்டம், சமூக வளர்ச்சித் திட்டம், கிராம நலத் திட்டம் என்று என்னென்னவோ திட்டங்கள் போட்டிருக் கிறார்களே, அதற்கெல்லாம் இரண்டு ஊர் மக்களிடமும் கையெழுத்து வாங்கி விண்ணப்பம் அனுப்பினான் பொன்னம்பலம். பாலத்துக்கு அஸ்திவாரக்கல் போடுவதற்கு ஒரு மந்திரி, பாலம் முடிந்தபின் அதைத் திறந்துவைப்பதற்கு வேறொரு மந்திரி என்று வருவதைச் செய்தித்தாள்களில் நிறையப் படித்திருக்கிறான் பொன்னம்பலம். தங்கள் ஊர்ப் பாலத்தையும் ஏதாவது ஒரு திட்டத்தின்கீழ் எடுத்துக்கொண்டு அரசாங்கத்தார் முடித்து வைப்பார்கள் என்று பொன்னம்பலம் கருதினான். ஆனால் அரசாங்கத்தாருக்குக் குருவிப் பட்டிக்குப் பாலம்போட முயல்வதைவிடப் பெரிய வேலைகள் எல்லாம் இருந்தன. 'குருவிப்பட்டிக்குப் பாலம் போடாவிட்டால் இப்போது ஒன்றும் குடிமுழுகிப் போய்விடாது' என்று பேசாமல் இருந்து விட்டார்கள். எத்தனையோ உள்நாட்டு, வெளிநாட்டுப் பிரச்சினைகளைச் சமாளிக்கவேண்டிய தீவிரமான அரசியல் சூழ்நிலையில், குருவிப்பட்டியின் பாலத்தைப்பற்றி நினைவு வைத்துக்கொள்வதே கேவலமல்லவா? எனவே குருவிப்பட்டியி லும் அதன் எதிர்க்கரையிலும் உள்ள மக்களைத் தவிரக் 'குருவிப்பட்டிப் பாலம்' பற்றி வேறெவரும் நினைவு வைத்துக் கொள்ள மறுத்து விட்டார்கள்.

அதற்கென்ன செய்வது? அரசாங்கத்திலிருப்பவர்களுக்குக் கண்டதையெல்லாம் நினைவு வைத்துக் கொண்டு திரிய முடியுமா? தாங்கள் அரசாங்கத்தில் இருப்பதே சில சமயங்களில் மறந்து விடுகிறதே அவர்களுக்கு. 'ஆகவே குருவிப்பட்டியும் அதன் பாலமும் எக்கேடு கெட்டுப் போனால் என்ன?' என்று விட்டுவிட்டார்கள்.

ஆனால் குருவிப்பட்டி வாசிகள் அப்படி விடுவதற்குத் தயாராயில்லை. அந்தப் பட்டிக்காட்டு மனிதர்களிடம் உழைப்பு இருந்தது. தன்மானம் இருந்தது. தங்களையும், தங்கள் ஊர்ப் பாலத்தையும் பற்றித் தங்களிடம் ஓட்டு வாங்கிக்கொண்டு பதவிக்குப் போனவர்களே மறந்ததை, அவர்கள் மன்னித்துத்தான் தொலைக்க வேண்டியிருந்தது. மன்னிப்பு என்கிற பரஸ்பர பலவீனம் இல்லாவிட்டால் இந்த உலகம்தான் என்றைக்கோ

உருப்பட்டுத் தேறியிருக்குமே! எத்தனையோ அயோக்கியர்களை யெல்லாம் சுலபமாகப் புண்ணிய பாவங்களின் பேர் சொல்லி மன்னித்துவிட்டுக் குட்டிச்சுவராய்ப் போய்க் கொண்டிருக்கிற பெருமை இந்தப் பாரத நாட்டிற்குப் புதிதா என்ன?

குருவிப்பட்டிப் பெருமக்களும், அவர்களின் அன்புக்குரிய சமூகத் தொண்டனாகிய பொன்னம்பலமும் இறுதியாக ஒரு தீர் மானத்துக்கு வந்தார்கள். தங்கள் ஊர் ஆற்றின் குறுக்கே பாலம் போடுவதற்குத் தங்கள் ஊரைப்பற்றி அக்கறையும், நினைவும் இல்லாத அரசாங்கத்தை நம்பிப் பயன் இல்லை. ஒருவேளை அரசாங்கத்துக்குத் தங்களுடைய ஆட்சியின் கீழே குருவிப்பட்டி என்று ஒரு கிராமம் இருப்பதே மறந்து போயிருக்கலாம். எனவே தங்கள் ஊர்ப் பாலத்தைத் தாங்களே அமைத்துக்கொள்வது என்ற திடமான முடிவுக்கு வந்தார்கள். அந்த முடிவுக்கு வருமாறு அவர்களுக்கு ஊக்கமும், உற்சாகமும் அளித்தவன் பொன்னம்பலம்தான்!

ஊர்ப் பக்கத்திலிருந்த கருங்கல் குன்றிலிருந்து பாலத்துக்கான கற்கள் உடைக்கப்பட்டன. ஊர்ப்பொதுவில் ஒரு பெரிய சுண்ணாம்புக் காளவாய் போட்டுக் காரை நீற்றினார்கள். சில அவசியமான செலவுகளுக்காக இரண்டு ஊர்ப் பொது மக்களிட மிருந்தும் பொன்னம்பலம் ஒரு நிதி வசூல் செய்திருந்தான். அதற்காகத்தான் அவன் நாயாக அலைந்து பாடுபட்டான் என்று தொடக்கத்தில் குறிப்பிட்டோம். இரண்டு கிராமத்து மக்களும் தங்கள் வேலை நேரம் போக எஞ்சிய நேரமெல்லாம் பாலத்துக் காக உழைத்தனர். ஆண், பெண், இளைஞர், முதியோர், வேறுபாடின்றி எல்லோரும் பாலத்துக் காகப் பாடுபட்டனர்.

ஏழெட்டு மாதங்களில் பாலம் முடிந்தது. மிகவும் நல்லவரான குருவிப்பட்டிப் பஞ்சாயத்துத் தலைவரைக் கொண்டு ஊரார் உழைப்பால் உருவான அந்தப் பாலத்தைத் திறந்து வைக்கச் செய்தான் தொண்டன் பொன்னம்பலம். எல்லோரும் பொன்னம் பலத்தின் உழைப்பைப் பாராட்டினார்கள். கொண்டாடினார்கள்.

விவசாயத்தையே தொழிலாகக் கொண்ட இரண்டு ஊர் மக்களும், அந்தப் பாலம் உண்டானதால் ஏற்பட்ட நன்மையை அநுபவித்தார்கள். ஏர் பூட்டிய உழவு மாடுகள், கட்டை வண்டிகள், வைக்கோல் வண்டிகள் எல்லாம் பாலத்தின் வழியாக வந்து போய்க்கொண்டிருந்தன. இரு ஊர்களின் உறவும், பழக்கமும் பாலத்தால் நெருங்கிற்று. இரண்டு ஊர் மக்களும்

விவசாயிகள் ஆதலால் பாலம் வண்டிகளின் போக்கு வரவுக்கு மிகவும் பயனுள்ளதாகவும், இன்றியமையாததாகவும் இருந்தது.

குருவிப்பட்டிக்கு அப்பாலுள்ள பிரதேசம் வேறு மாகாணத்தைச் சேர்ந்தது. அங்கே மதுவிலக்கு இல்லை. குதிரைப் பந்தயம் உண்டு. எனவே குடிப்பதற்கும், குதிரைப் பந்தயத்துக்கும் பத்து மைல் சுற்றிச் சோழ அரசன் காலத்துக்கல் பாலம் வழியாகப் போய்க் கொண்டிருந்த பணக்காரர்கள் அது சுற்று வழி என்று கருதி இப்போதெல்லாம் குருவிப்பட்டிப் பாலம் வழியாகப் போகத் தொடங்கினார்கள். சமூகத் தொண்டன் பொன்னம்பலமும், ஊர்ப் பொதுமக்களும் கட்டின பாலம், ஏதோ சுய தேவைக்காகச் சுருங்கிய அளவில் கட்டப்பட்டிருந்தது.

முக்கியமாகக் கிராம மக்களின் தேவையை உணர்ந்து உழவு மாடுகளும், கட்டைவண்டிகளும், வைக்கோல் பாரவண்டிகளும், போவதற்காகக் கட்டப்பட்ட அந்தப் பாலத்தில், இப்போது கார்களும், லாரிகளும் போகத் தொடங்கிவிட்டதால், கிராம மக்கள் இடையூறு அநுபவித்தனர். கட்டை வண்டிகளும், மாடுகளும், ஊடே நுழைய நேரமே இன்றி அந்தப் பக்கமிருந்தும், இந்தப் பக்கமிருந்தும், லாரிகளும் கார்களும், மொய்த்தன. காத்திருந்தவன் பெண்டாட்டியை நேற்றுவந்தவன் கொண்டு போனானாம் என்பதுபோல ஊர்க்காரர்கள் போட்ட பாலம், ஊர்க்காரர்களுக்குப் பயன்படாமல் கார்க்காரர்களுக்குப் பயன் படத் தொடங்கிவிட்டது. ஒருநாள் குதிரைப் பந்தயத்துக்குப் போய்விட்டுத் திரும்பிய பட்டிணத்துப் பணக்காரர் ஒருவர் நிறையக் குடித்துவிட்டுப் போதையோடு மிகப் பெரிய 'பியூக்' காரில் வந்தார். கார் குருவிப்பட்டிப் பாலத்தில் வரும்போது ஒரு கட்டை வண்டியில் மோதி, வண்டிக்காரன் கீழே கார்ச் சக்கரத்தினடியில் விழுந்து நசுங்கி இறந்து போனான். இந்தச் சம்பவம் குருவிப்பட்டிக்காரர்களின் கண்களைத் திறந்தது. மறுநாள் முதல் அந்தப் பாலத்தில் கார்களையும், லாரிகளையும், விடுவதில்லை என ஊர்க்காரர்கள் எல்லோரும் சேர்ந்து மறியல் செய்தார்கள்.

குதிரைப் பந்தயத்தையும், குடியையும் நினைத்துக் கொண்டு ஆவலோடு குருவிப்பட்டிப் பாலத்தை நோக்கி வந்த கார்கள் மறியலின் காரணமாக ஏமாற்றத்தோடு திரும்பிப் போயின.

பாலத்துக்குள் நுழைகிற இடத்தில் சமூகத் தொண்டன் பொன்னம்பலம், இன்னும் நாலைந்து பேரைச் சேர்த்துக்

கொண்டு நுழைய இடமின்றிக் கைகோத்து நின்றான். ஒரு பெரிய கார்க்காரர் அவர்களுடைய மறியலைப் பொருட்படுத்தாமல் இறங்கிவந்து கூப்பாடு போட்டார்.

''இது உன் அப்பன் வீட்டுப் பாலமில்லை. நீ யார் மறியல் செய்வதற்கு? அத்தனை 'மினிஸ்டரையும்' எனக்குத் தெரியும். ஒரு வரி எழுதிப் போட்டால், உங்களையெல்லாம் உள்ளே தள்ளிவிடுவார்கள்.''

பொன்னம்பலம் அவருடைய பேச்சைக் கேட்டுக் கோபம் அடையவில்லை. அமைதியாகவே அவருக்குப் பதில் சொன்னான். ''ஐயா! இது ஊர் மக்களின் உழைப்பால் உருவான பாலம். கட்டைவண்டிகளும், உழவு மாடுகளும் போவதற்காகத் தான் ஏழை விவசாயிகளாகிய நாங்கள் இந்தப் பாலத்தைக் கட்டினோம். இந்தப் பாலத்தைக் கட்டுவதற்காக அரசாங்கம் கால் பைசா எங்களுக்குத் தரவில்லை. இப்போதோ எந்நேரமும் கார்களும், லாரிகளும் இந்தப் பாலத்தை ஆக்கிரமித்துக் கொள்கின்றன. இரண்டு கிராமத்து வண்டிகளும் போக முடிவதில்லை. நாங்கள் உழைத்ததன் பயன் வீணாவதை எங்களால் மன்னிக்க முடியவில்லை. இரண்டு மூன்று நாட்களுக்கு முன் இந்தப் பாலத்தில் ஒரு கட்டை வண்டிக்காரன் காரில் நசுங்கி இறந்துபோனான். இனியும் குடிகாரர்களுக்கும், குதிரைப் பந்தய வெறியர்களுக்கும், இந்தப் புனிதமான பாலம் பயன்படுவதை நாங்கள் அனுமதிக்கத் தயாராயில்லை.''

''நான்சென்ஸ்! நான் யார் தெரியுமா? என்னிடம் இவ்வளவு திமிராகப் பேசுகிறாயே? நான் சுட்டு விரலை ஆட்டினால், இந்த நாட்டை ஆளும் அத்தனை மந்திரிகளும் ஓடி வந்து கைகட்டி நிற்பார்கள். தெரியுமா உனக்கு?''

''அது எனக்குத் தெரிய வேண்டிய அவசியமில்லை ஐயா! இப்போது நீங்கள் இந்தப் பாலத்தின் வழியாகப் போக முடியாது. வணக்கம். திரும்பிச் செல்லலாம் நீங்கள் ''- என்று பேச்சை முடித்தான் பொன்னம்பலம்.

அவனை முறைத்துவிட்டுக் காரில் போய் ஏறிக்கொண்டு திரும்பினார் அவர்.

மறியல் தொடர்ந்து நடந்தது. கட்டை வண்டிகளையும், உழவு மாடுகளையும் தான் பாலத்தில் போக விட்டார்கள்! கார்களையும், லாரிகளையும் போகவிடவில்லை. அதற்காகக் கார்க்காரர்களையும், லாரிக்காரர்களையும் கொடுமைப்படுத்த

வில்லை. ''இந்தச் சிறு பாலம் கிராம மக்களின் நலனுக்காக நாங்கள் போட்டது. தயவுசெய்து இதை நாங்கள் உங்களுக்கு விடாமலிருப்பதற்காக மன்னியுங்கள். சிறிது தொலைவு போனால் கல்பாலம் ஒன்றிருக்கிறது. அது அரசாங்கத்துக்குச் சொந்தமான பொதுப் பாலம். அதை உபயோகப்படுத்துங்கள், இங்கே வராதீர்கள்''- என்று பணிவாகச் சொல்லித் திருப்பி அனுப்பினார்கள்.

கார் வைத்திருப்பவர்கள் எல்லாம் பணக்காரர்கள். பணம் வைத்திருப்பவர்கள் எல்லாம் அரசாங்கத்துக்கு வேண்டியவர்கள். கேவலம் ஒரு பட்டிக்காட்டுப் பாலத்தில் போக முடியாது என்றால், சும்மா இருப்பார்களா? அவர்களால் ஆகாததும் உண்டோ? இருந்த இடத்திலிருந்தபடியே 'மினிஸ்டரோடும்' 'ஹைவேஸ் கமிஷனரோ'டும் டெலிபோனில் பேசினார்கள். அந்தப் பட்டிக்காட்டான்கள் செய்யும் 'அக்கிரமத்தை' - எடுத்துக் கூறினார்கள்.

அதன் விளைவு? ... மறுநாள் குருவிப்பட்டி பாலத்தில் 'ஹைவேஸ் அதாரிடி'யோடு கூடிய விளம்பரப் பலகை ஒன்று தொங்கியது.

**'இந்தப் பாலத்தின் வழியாகக் கார்கள், லாரிகள் தவிர கட்டைவண்டிகள் போகக்கூடாது. இது அரசாங்க உத்தரவு. மீறுபவர்கள் தண்டிக்கப்படுவார்கள்.**

**இப்படிக்கு**

**கமிஷனர்**

**அரசாங்க ஹைவேஸ் இலாகா.'**

சமூகத் தொண்டன் பொன்னம்பலமும், ஊர்க்காரர்களும், மறியலை நிறுத்தவில்லை. அரசாங்க உத்தரவையும் எதிர்த்து மறியல் செய்தனர்.

சும்மா இருப்பார்களா அரசாங்கத்தார்? வண்டி வண்டியாக லாரி நிறைய ஸ்பெஷல் ரிசர்வ் போலீஸார் வந்து இறங்கினார்கள். அடிதான், உதைதான். அடி உதைக்குப் பயந்து பெரும்பாலோர் மறியலைக் கைவிட்டு ஓடிவிட்டனர். பொன்னம்பலமும் இன்னும் இரண்டு மூன்று ஆட்களும் மறியலை நிறுத்தவே இல்லை.

''இந்தப் பாலம் எங்கள் பிறப்புரிமை. இதை விட்டுக் கொடுக்கமாட்டோம். எங்கள் உழைப்பு எங்களுக்கே சொந்தம்'' என்று கோஷமிட்டான் பொன்னம்பலம்.

''போடுடா அவன் மண்டையிலே.'' முரட்டுப் போலீஸ்காரன் ஒருத்தன் அவனை அடித்தான்.

மண்டையிலிருந்து குருதி ஒழுகக் கீழே வீழ்ந்தான் பொன்னம்பலம். பிரக்ஞை தவறியது. மறுபடி அவன் தன் நினைவுற்றுக் கண்திறந்து பார்த்தபோது பாலத்தில் கார்களும், லாரிகளும் சுகமாகப் போய்க்கொண்டிருந்தன.

''இந்த உருப்படாத சமூகத்துக்கு இதுமாதிரிப் பாலங்கள் இன்று தேவை இல்லை. ஏழைகளுக்கும் நியாயத்துக்கும் நடுவிலிருக்கிற தூரத்தை இணைக்க முதலில் ஒரு புதிய பாலம் போடவேண்டும். அதைக் கல்லாலும், காரையாலும் போட முடியாதே!'' என்று முணு முணுத்துக்கொண்டே எழுந்து தள்ளாடி நடந்தான் அவன். ❑

# நீலச் சிலுவை

என்.ஆர். தாசன்

அடிக்கொரு முறை கைகளையும் கால்களையும் மண்ணில் தேய்த்துத் தேய்த்து இழுத்தபடி கிழவி இடம் மாற்றிக் கொண்டிருந்தாள்.

வெயில் நிழலை விரட்டிக் கொண்டிருந்தது.

அதன் துரத்தலுக்கும், விரட்டலுக்கும் அஞ்சி ஓடி ஒதுங்கிய அந்தக் குடிசையை ஒட்டிய முருங்கை மரநிழல், தனது இடப் பெயர்தலுக்கேற்ப கிழவியையும் நகர வைத்துக் கொண்டிருந்தது.

அவள் கண்கள் மூடிக்கிடந்தன. கண்ணிமைகள் மட்டும் சுருங்கிச் சுருங்கி அசைந்து கொண்டிருந்தது.

அது உறக்கமாகவுமில்லை, விழிப்பாகவும் இல்லை. இரண்டுமாக இருந்தது; இரண்டுமே இல்லாததாகவும் இருந்தது.

நாலைந்து பேர்களின் தடித்த காலடிச் சத்தமும், ஒரு நாயின் நம்பிக்கை இழந்த அலறலும் அவளின் இரண்டுங்கெட்டான் நிலையைக் குலைத்தது. அவள் கண் திறந்து பார்த்தாள்.

காலை வெயில் கண்களை ஊசியாய்க் குத்தியது. எழுந்து உட்கார்ந்து கையை நெற்றிக்கருகில் மறைவாக வைத்துக் கொண்டு பார்த்தாள்.

'அந்தச் சொறி நாயைக் குப்பத்துலுள்ள இள வட்டங்கள் துரத்திக் கொண்டிருந்தார்கள். மடிப்புக் குலையாத சட்டை அணிந்த மூவர், அதை ஆவலுடன் பார்த்துக் கொண்டு நின்றனர். மரினா ரோட்டின் ஓரத்தில் நீலச் சிலுவை போட்ட 'வேன்' நிறுத்தப்பட்டிருந்தது.

பைத்தியம் பிடித்த நாய்களை அடிக்க வந்தவர்களாகவே கிழவிக்குத் தெரிந்தது. உடம்பெல்லம் புண்ணாகி உண்ணி மொய்த்தது. இளஞ் சிவப்பேறி, நீர் வழியும் அந்த நாயைப் பார்க்கும்போதெல்லாம் அருவருப்பாக இருக்கும். அவள் படுக்க

ஒதுங்கும் அந்த முருங்கை மர நிழலுக்கே அதுவும் வந்து, 'உர் உர்' என்று முறைப்புக் காட்டி நிற்கும். கிழவி விரட்டி விரட்டிப் பார்ப்பாள். நாய் அசையாது. கிழவிதான் இடத்தை மாற்றிக் கொள்ள வேண்டி இருக்கும்.

''சனியன்.....தொலஞ்சி போகட்டும்-''

கிழவி அடிவயிற்றை அழுத்திப் பிடித்துக் கொண்டு 'கொக் கொக்' என்று இருமினாள். அலை அலையாக, சங்கிலிக் கோர்வையாக வந்த இருமல் அடங்கச் சிறிது நேரமாயிற்று. நெஞ்சை அவள் தடவி விட்டுக் கொண்டாள்.

அவள் முகத்தில் மங்கிய புன்னகை தெரிந்தது. சற்று முன் நினைத்துக் கொண்டது அவளுக்கே வேடிக்கையாக இருக்க வேண்டும்.

''நாம என்னமோ நூறு வருஷம் இருக்கப் போறாப்பல...''

அந்த நாயிடம் இப்பொழுது அனுதாபம் சுரந்தது.

''பாவம்... இது இவுகளெ என்ன செய்யுது?.... சாகிற போது சாகட்டுமே....''

சமீப காலத்தில் அவள் தனது குணத்திற்கு மாறாகவே நடந்து கொண்டிருக்கிறாள். தனது அந்திமக் காலம் நெருங்கி வருவது அவளுக்குப் புரிகிறதோ?

பெரிதாகச் சப்தமிட்டுக் கொண்டு நாயை அவர்கள் விரட்டுவதும், நாய் அலறிக் கொண்டு ஓடி ஓடி, இயலாமை தலை தூக்கும் போது திரும்பிக் கடிக்க முயல்வதையும் அவள் நெஞ்சு நெகிழப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

மனத்திற்கு மாற்றம் விரும்பிக் கடலை நோக்கி முகத்தை வைத்துக் கொண்டாள். காலை வெயிலில் நீர்ப் பரப்பு மின்னிப் பளபளத்தது. கரையில் வலை இழுத்துக் கொண்டிருந்தவர்கள், மீன் கூடையைத் தலையில் வைத்துக் கொண்டு 'லொங் லொங்' கென்று அகன்ற நடை போட்டு வந்த மீன்காரிகள் கிழவியின் கண்களுக்குப் பூச்சி பறப்பது போல் தெரிந்தனர்.

கிழவிக்கு இப்பொழுதும் அப்படிக் கூடையைத் தூக்கிக் கொண்டு ஓட வேண்டும் போல் ஆசை எழுந்தது. அவள் கால்களைப் பிடித்துத் தடவிவிட்டுக் கொண்டாள்.

அந்த நாளில் மீன் கூடையைத் தூக்கிக் கொண்டு ஓடி ஓடி வந்திருக்கிறாள். நடப்பது அவளுக்குப் பிடிக்காது; ஓடத்தான் இஷ்டம். அதுதான் உடம்புக்குத் தெம்பு தருவதாக அவள் நினைப்பு. வேறு ஒரு காரணமும் உண்டு.

''மீனு திங்கிற ராஜாக்க வந்து திரும்பிப் போறதுக்குள்ள நேரத்தோட போயிறணும். அப்பத்தான் மீன் பவுனாப் பறக்கும். நேரங்கழிச்சிட்டா சாவுக்கிராக்கிகளோட இழுத்துப் பறீச்சிக் கிட்டுக் கெடக்க வேணும்'' என்ற வியாபார நடைமுறை அவளுக்குத் தெரிந்ததே.

மீன் கடையில் பலகையைப் போட்டு உட்கார்ந்து விட்டால் அவளுக்கு ஒரு மகாராணியின் நினைப்பு வந்து விடும். ஸ்தூல சரீரமுள்ள அவள் சேலையை இழுத்து முழங்காலுக்குமேல் விட்டுக் கொள்வாள். அள்ளிச் செருகி இருக்கும் தலைமயிர் சிலிர்த்துக் கொண்டிருக்கும், அவளுள் ஏதோ ஓர் அம்சத்தின் குறியீடாகத் தோன்றும். அவள் அதிகமாகப் பேசுவதில்லை. விலையை யாரும் கேட்டால்கூட உடனடியாக சொல்வதில்லை. இரண்டு மூன்று முறை கேட்டால்தான் சொல்லுவாள்.

வாங்க வருபவர்களுக்கு அவளிடம் விலை கேட்கவே தயக்கமாக இருக்கும். நியாயமான விலையைத்தான் கேட்கத் தோன்றும். அவள் காட்டும் மௌனம் கேட்டவர்களை அடுத்த நிமிஷத்திலேயே சற்று விலையை உயர்த்த வைக்கும். மீன் கடையின் அன்றைய நிலவரம் அறியாமல் அநியாய விலை கேட்டுவிட்டால், அவள் வாயிலிருந்து வருகிற வார்த்தைகள் நொந்துபோன மீன்களைக் காட்டிலும் அதிக நாற்றமாய் இருக்கும்.

''புருஷன் போயிருக்கான்... கடலுக்கு, வலை எடுத்துக்கிட்டு...வரட்டும் மலிவா வாங்கிப் போகலாம்... நீயும் பயலோட படுத்துக்குவே. அடச்சீ போ. அந்தே...மீன் வாங்க வந்த மூஞ்சியைப் பாரேன்... போட்டுருக்கு அங்கே நாத்த மீனு வாங்கு போ. இது பவுனு; தக்காளி, ரஸ்தாளி...''

இந்த விறைப்பிற்குக் குடும்பமும் விதிவிலக்காக இல்லை. ஒரு சிறுவனிடம் காட்டும் மிரட்டலையும் கண்டிப்பையுமே புருஷனிடமும் காட்டுவாள். அவளுடைய இந்தப் போக்கோ, அல்லது இவளுடைய பலவீனமோ வெறொருத்தியைத் தேடிக் கொள்ளச் செய்தது. அவளுக்கு இது தெரிந்தபோது அவள் ராக்ஷசியாகிவிட்டாள். குடிசையிலிருந்து இருவரையும் இழுத்துக் கொண்டு வந்து துடைப்பைக் கட்டையால் வெறி அடங்கும்வரை அடித்தாள். அவனுடைய வேஷ்டியை அவிழ்த்து விட்டது போலவே, அவள் சேலையையும் உரித்து விட்டு ஓட ஓடத் துரத்தினாள்.

''அடப் பேமானி... ஒனக்கு ஒரு கூத்தியா வேண்டிக் கெடக்கா? என் ஒருத்திக்கு சவாப் சொல்ல முடியாத பொட்டைப்பய நீ...''

கழுத்தில் கிடந்த கயிற்றை அறுத்து அவன் மூஞ்சியில் எறிந்துவிட்டு வீட்டிற்கு வந்த பின்பு கூட, அவள் ஆத்திரம் அடங்கவில்லை அன்று. அந்தக் குப்பம் அறிய பகிரங்கமாக ஒரு முரட்டு மனிதனைக் குடிசைக்குக் கூட்டிக் கொண்டு வந்த போதுதான் அவள் கோபம் அடங்கியது. மீன் கடையில் பெரிய துண்டாக வெட்டி விற்கும் 'காதர்பாய்' அதன் பிறகு பல நாட்கள் அங்கு வந்தான். அவன் வந்து கொண்டிருந்த சமயத்திலேயே வேறு சிலர் வந்து போயினர். அந்தச் சமயத்தில்தான் கடலுக்குச் சென்ற அவள் புருஷன் எதிர்பாராது அடித்த புயலில் இறந்த செய்தி அவளுக்குக் கிடைத்தது.

அவள் அழவில்லை. அவளிடம் துக்கம் கேட்க வந்தவர்களிடமெல்லாம் அவள் கூறினாள்.

''என்னெக்கோ அவன் செத்துப் போயிட்டானே. அன்னெக்கே நான் அழுவலையே. இன்னெக்கு வந்து...''

செருக்கும், அகங்காரமும் நிறைந்த அவள் வாழ்க்கையில், பிள்ளை இல்லாதது அந்தப் போக்கைத் தண்டிப்பதுபோல் ஒரு சமயம் தோன்றும். மறு சமயம் அந்தப் போக்கை ஸ்திரப்படுத்தவே அது ஏற்பட்டுள்ளதாக நினைக்க வைக்கும்.

''நிம்மதியா இருக்கேன். பிக்கல் புடுங்கல் இல்லை....''

ஆனால், இந்த அந்திம நாட்களில்........

※ ※ ※

நாய் இன்னும் எவர் கைக்கும் அகப்படவில்லை. இள வட்டங்களுடன் சட்டை போடாத சிறுவர்களும் கூட்டமாகச் சேர்ந்துகொண்டு 'ச்சூ...சுஹா...' என்று துரத்திக் கொண்டிருந்தார்கள்.

நாகரிக உடை அணிந்த மூவரில் ஒருவர், அந்த இடத்தில் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தவர்களிடம் சொல்லிக் கொண்டிருந்தார்.

''இது நமக்குத்தான் அசிங்கம். பாவம், வாயில்லா ஜீவன்கள்... இதுக கஷ்டப்படறதெப் பாத்தும் பாக்காத மாதிரி நடந்துக்கிறது வாயுள்ள நமக்கு அழகாவா இருக்கு?''

கிழவி காதுகளுக்கருகில் கைகளைச் சாய்த்து வைத்துக் கொண்டு கூர்ந்து கேட்டாள். வெயிலையும் பார்க்காது அவர்களின் அருகில் தரையைத் தேய்த்துக் கொண்டு நகர்ந்தாள்.

''ஒவ்வொரு உயிரிலும் ஆண்டவன் இருக்குறான். அந்த உயிர்களெ அலட்சியப்படுத்துறது ஆண்டவனையே அவமதிக்கிற தில்லையா?''

சாந்தோம் மாதா கோயில் மணி அலறத் துவங்கியது.

அவர்கள் சிலுவைக் குறியிட்டுக் கொண்டனர்.

''உயிர்களிடம் அன்பாய் இருங்கள். கர்த்தர் உங்களிடம் தயை காட்டுவார்...''

கிழவி நகர்ந்து நகர்ந்து வந்து அவர் கண்களில் முழுமையாகப் படுகிற இடம் உறுதிப்பட்டதும் நகர்வதை நிறுத்திக் கொண்டாள்.

கிழவி இருமினாள்.

''ஆஸ் ....ஊஸ்...'' என்று முணங்கினாள்.

வயிற்றை அழுத்திப் பிடித்துக் கொண்டு, உள்ளே ரம்பமாக அறுக்கும் வலியையெல்லாம் முகத்தில் படமாக்கிக் காட்டினாள்.

அவருடைய கண்கள் அவளைப் பார்க்கவே செய்தன. ஆனால், அவர் பேசுவது அவளைப் பற்றியதாக இருக்கவில்லை.

மரண அலறலாகக் கேட்ட நாயின் கூச்சல், எல்லோரையும் அந்தப் பக்கம் திரும்ப வைத்தது.

கடைசியில் நாய் அகப்பட்டுக் கொண்டது.

அந்த மூவரும் நாயைப் பிடித்து வைத்திருப்பவனை நோக்கி ஓட்டமும் நடையுமாகச் சென்றனர்.

கிழவிக்கு, தான் முன்னிலும் கீழாகச் சரிந்து விழுந்தது போல் தோன்றியது.

தான் அருவருப்புக் காட்டியவற்றிலெல்லாம் மிகவும் அருவருக்கப்பட வேண்டியது தானே என்று தெரிந்தது.

விவரிக்க இயலாத இழப்பின் துக்கம் பாறாங்கல்லாகக் கனத்தது.

நாயை ஏற்றிக்கொண்ட வேன் நகர்வது கிழவிக்குத் தெரியவில்லை. கண்களில் தேங்கிய நீர்ப்படலத்தையும் துளைத்துக் காணும் சக்தி அந்தப் பார்வைக்கு இருக்கவில்லை.

கையிலுள்ள மண்ணையும் புழுதியையும் தட்டிவிட்டுக் கொண்டு, நாயைப் பிடித்துக் கொடுத்தவன் அவளிடம் கூறினான்.

''நாயுக்கு அடிச்ச யோகத்தைப் பார்த்தாயா ஆயா... இனிமே இது ராஜா மாதிரி இருக்கப் போவுது...''

கிழவி அவனை ஏறிட்டுப் பார்த்தாள். தலையைக் குனிந்து கொண்டு மௌனமாக இருந்தாள்.

பிறகு யாரும் எதிர்பாராத விதத்தில், ஆவேசம் வந்ததுபோல இரு கைகளாலும் தலையில் அடித்துக் கொண்டு ஓங்காரமிட்டு அழுதாள்.

அந்த இளைஞன் பதறிப் போய்க் கேட்டான்.

''என்ன ஆயா?... என்ன? சொல்லு ஆயா?'' அவள் சொல்லவில்லை.

அதிர்ச்சிப் பிரவாகமாக நிமிஷங்கள் தேய்ந்ததும் அவனுக்குப் புரிந்தது.

ஆயினும் வெறும் சம்பிரதாயத்தை ஒட்டி, ''என்ன ஆயா?... என்ன?...'' என்று அவனும் திரும்பத் திரும்பக் கேட்டுக் கொண்டிருந்தான். ❑

# யுக சந்தி

ஜெயகாந்தன்

கௌரிப் பாட்டி பொறுமையாய் வெகு நேரம் பஸ்ஸிற்குள் நின்றிருந்தாள். எல்லோரும் இறங்கியபின், தனது காக்கி நிறப் பையின் கனத்தை இடுப்பில் ஏற்றிக்கொண்டு கடைசியாக வந்தாள்.

''பாட்டி... பாட்டி! பையைத் தூக்கியாரட்டா? ஓரணா குடு பாட்டி.''

''வண்டி வேணுங்களா அம்மா?''

''புதுப்பாளையம் வக்கில் குமாஸ்தா ஐயர் வீடுதானுங் களே... வாங்க, போவோம்'' -என்று பல்வேறு வரவேற்புக் குரல் களுடன், அவளை இறங்கவிடாமல் தடுத்து நின்ற வண்டிக்காரர் களையும், கூலிக்காரச் சிறுவர்களையும் பார்த்துக் கனிவோடு சிரித்துவிட்டுப் பாட்டி சொன்னாள்:

''எனக்கு ஒண்ணும் வேண்டாம்பா... சித்தே வழியை விட்டேள்னா நான் மெள்ள நடந்தே போயிடுவேன்... ஏன்டாப்பா, வீட்டெக்கூடத் தெரிஞ்சு வெச்சிருக்கே.. நான் தான் மாசம் ஒரு தடவை வர்றேனே, என்னிக்கு வண்டியிலே போனேன்?'' என்று ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு பதிலைச் சொல்லி, அவர்களை விலக்கி வழியமைத்துக் கொண்டு தணலாய்த் தகிக்கும் வெயிலில், முக்காட்டை இழுத்து விட்டுக் கொண்டு, இடுப்பில் ஏற்றிய சுமையுடன் வறுத்துக் கொட்டிய புழுதி மண்ணை அழுந்த அழுந்த மிதித்தவாறு ஒரு பக்கமாய்ச் சாய்ந்து நடந்தாள் பாட்டி.

பாட்டிக்கு வயது எழுபது என்றாலும், சரீரம் திடமாய்த் தான் இருக்கிறது. மூப்பினால் ஏற்பட்ட ஸ்தூலமும், அதனால் விளை யும் இளைப்பும் வீட்டுக்குப்போன பின்தானே தெரியும்?...

அவள் கணிப்பில் நேற்றுப் பிறந்த குழந்தைகளெல்லாம் அதோ ரிக்ஷாவிலும், ஜட்காவிலும், சைக்கிளிலும் பரந்து பரந்து ஓடுகிறார்கள்.

மழையும் வெயிலும் மனிதனை விரட்டுகின்ற கோலத்தை எண்ணிப் பாட்டி சிரித்துக் கொண்டாள்.

அவளுக்கு இதெல்லாம் ஒரு பொருட்டா? வெள்ளமாய்ப் பெருகி வந்த வாழ்வின் சுழிப்பிலும், பின் திடீரென வரண்ட பாலையாய் மாறிப்போன வாழ்க்கை நெருப்பிலும் பொறுமை யாய் நடந்து பழகியவளை, இந்த வெயிலும் மழையும் என்ன செய்யும்? என்ன செய்தால்தான் என்ன?

தகிக்கின்ற புழுதியில் பாதங்கள் அழுந்தி அழுந்திப் புதைய, அசைந்து அசைந்து நடந்து கொண்டிருந்தாள் பாட்டி.

வழியில் சாலையோரத்தில்-நான்கைந்து மனிதர்கள் நின்று சுகம் காண வாகாய் முளைத்த பெருங்குடைபோல், நிழல் பரப்பிக் கொண்டிருந்தது ஒரு சிறிய வேப்பமரம்.

அந்த நிழலில் ஒற்றையாய்ச் சற்றே நின்றாள் பாட்டி.

எரிந்து தகிக்கும் அவ் வெம்மையின் நடுவே சுகம்தரப் படர்ந்த அந்த நிழல் போலும், யந்திரங்களைத் தவிர எதையுமே நம்பாத இவ்விருபதாம் நூற்றாண்டில்... சென்ற நூற்றாண்டின் சின்னமாய், தன் சொந்தக் கால்களையே நம்பி நிற்கும் -காண்பதற்கரிதான அந்தக் கிழவியின் பிரசன்னம் போன்றும் மெல்லென வீசிய குளிர்காற்றில் வேப்பங் குழைகள் சிலிர்த்தன.

''என்னப்பனே மகாதேவா!'' என்று கடவுளுக்கு நன்றி தெரிவித்துக்கொண்டு, அந்தக் குளுமையை அனுபவித்தாள் பாட்டி.

பாட்டியின் முக்காடிட்ட வட்டமான முகத்தில் ஒரு குழந்தைக் களை குடிகொண்டிருந்தது. இந்த வயதிலும் அவள் சிரிக்கும்போது, வரிசைப் பற்கள் வடிவாய் அமைந்திருந்தது ஓர் ஆச்சரியமே! அவள் மோவாயின் புறத்தில் ஒரு மிளகை விடவும் சற்றுப்பருத்த அழகிய கறுப்பு மச்சம்; அதன்மீது மட்டும் கருகருவென முடி... இவ்வளவையும் ஒருசேரப் பார்த்தவர்கள், இவள் இளவயதில் எப்படி இருந்திருப்பாள் என்று எண்ணாமல் இருக்க முடியாது.

பாட்டியின் பொன்னிறமான மேனியில், அதிக நிறபேதம் காட்டாத நார்ப்பட்டுப் புடவை காற்றில் படபடத்தது;

புடவையிலிட்ட முக்காட்டின் விளிம்பெல்லாம் குத்துக் குத்தாய் லேசாகத் தலைகாட்டும்-மழித்து நாளாகிவிட்டதால் வளர்ந் திருக்கும்-வெள்ளி முடி. கழுத்தில் ஸ்படிக மாலை. நெற்றியில் வியர்வையால் கலைந்த விபூதிப் பூச்சு. புடவைத் தலைப்பால் முகத்தையும், கைகளையும், மார்புக் குவட்டின் மடிப்புகளையும் அழுந்தத் துடைத்து விட்டுக் கொண்டாள். அப்போது வலது விலாப்புறத்தில் இருந்த சிறிய பவழம் போன்ற மச்சம் வெளித் தெரிந்தது.

மீண்டும் நிழலிலிருந்து வெயிலுக்கு வந்து புழுதி மண்ணிலிருந்து, பழுக்கக் காய்ந்த கெடிலநதிப் பாலத்தின் கான்கிரீட் தள வரிசையில் பாதங்களை அமைதியாகப் படிய வைத்து, அசைந்து அசைந்து அவள் வரும்போது...

பாலத்தின் மீது கிராதியின் ஓரமாக, பாட்டியம்மாள் மீது பட்டுவிடக் கூடாதே என்ற பய உணர்வோடு ஒதுங்கி நின்று, கையிலுள்ள சிறு தகரப் பெட்டியுடன் கும்பிட்டான் ஒரு பழைய, பழகிய-நாவிதன்.

''பாட்டியம்மா... எங்கே, நெய்வேலியிலிருந்தா?'' என்று அன்புடன் விசாரித்தான்.

''யாரு வேலாயுதமா? ஆமா!... உன் பெண்டாட்டி குளிகுளிச்சுட்டாளா?'' என்று ஆத்மார்த்தமாய் விசாரித்தாள் கிழவி.

''ஆச்சுங்க...ஆம்பளைப் பையன்தான்.''

''நல்லாயிருக்கட்டும்..பகவான் செயல்...! இது மூணாவது பையனா?''

''ஆமாமுங்க'' என்று பூரித்துச் சிரித்தான் வேலாயுதம்.

''நீ அதிர்ஷ்டக்காரன்... எந்தப் பாடாவது பட்டுப் படிக்க வச்சுடு, கேட்டியா?'' என்றதும் வேலாயுதம் குடுமியைச் சொறிந்தவாறு சிரித்தான்.

''அட அசடே, என்ன சிரிக்கிறே? காலம் வெகுவாய் மாறிண்டு வரதுடா; உன் அப்பன் காலமும் உன் காலமும் தான் இப்படிப் பொட்டி தூக்கியே போயிடுத்து... இனிமே இதொண்ணும் நடக்காது... புருஷாள் எல்லாம் ஷாப்புக்குப் போறா... பொம்மண்டாட்டிகள்லேயும் என்னை மாதிரி இனிமே கெடையாதுங்கறதுதான் இப்பவே தெரியறதே... ம்... எல்லாம் சரிதான்; காலம் மாறும்போது மனுஷாளும் மாறணும்... என்ன,

நான் சொல்றது?'' என்று கூறி ஏதோ ஹாஸ்யம் பேசிவிட்ட மாதிரி பாட்டி சிரித்தாள். பதிலுக்கு அவனும் சிரித்தான்.

''இந்தா, வெயிலுக்கு ரெண்டைக் கடிச்சிண்டு போ'' என்று இடுப்பிலிருந்த பையில் பிதுங்கி நின்ற இரண்டு வெள்ளரிப் பிஞ்சுகளை எடுத்து அவனது ஏந்திய கைகளில் போட்டாள். ''பஸ்லே வரச்சே அணாவுக்கு நாலுன்னு வித்தான்... கொழந்தை களுக்கு ஆகுமேன்னு ஒரு நாலணாவுக்கு வாங்கினேன்'' என்று அவள் சொன்னதும், வேலாயுதம் ஒரு கும்பிடு போட்டுவிட்டுத் தன்னை அவள் கடக்கும்வரை நின்று பின்னர் தன் வழியே நடந்தான்.

சிதம்பரத்தில் பிறந்து வளர்ந்த கௌரியம்மாள், தனது பத்து வயதில் இந்தக் கடலூரில் நன்கு செயலில் இருந்த ஒரு குடும்பத்தில் வாழ்க்கைப்பட்டாள். பதினாறு வயதில் கையி லொரு குழந்தையுடன் கைம்மைக் கோலம் பூண்ட பின், இத்தனை காலமாய்த் தன் மகனையும், தன் புருஷன் பங்கில் கிடைத்த வீட்டையும் விட்டு எந்த ஊருக்கும் சென்றதில்லை.

எனினும் தன் மகன் வயிற்றில் பிறந்த மூத்தமகள் கீதா மணக்கோலம் பூண்டு பத்தே மாதங்களில், தரித்திருந்த சுமங்கலி வேடத்தை, நாடகப் பூச்சைக் கலைப்பதுபோல் கலைத்துவிட்டுக் குடும்பத்தை அழுத்தும் பெருஞ் சோகமாய்க் கதறிக்கொண்டு தன் மடியில் வந்து வீழ்ந்து குமுறியழுத நாள்முதல், தனது வாழ்க்கை யில் நிகழ்ந்த கடைசி சோகமாய் அவளைத் தாங்கிக் கொண்டாள் கௌரிப் பாட்டி. தன் அரவணைப்பில், தன் அன்பில், தனது கண்ணீரில், தனது ஒட்டுதலில் அவளை இருத்திக் கொள்வதையே தன் கடமையாக ஏற்றுக்கொண்டாள். அதுவரை கீதாவின் மீது, மகன் பெற்ற குழந்தை என்ற பாசம் மட்டுமே கொண்டிருந்த பாட்டி-கணவன் இறந்தநாள் முதல் தன் உயிரையே மகன் மீது வைத்திருந்த அந்தத் தாய்-அதை மாற்றிக்கொண்டது கீதாவுக்கு வெறும் ஆறுதல் தரும் பொருட்டன்று.

கௌரி பாட்டி தனது இறந்தகாலத்தின் நிகழ்காலப் பிரதிநிதி யெனத் தன்னையே அவளில் கண்டாள்.

பாட்டியின் மகன் கணேசய்யர் தந்தையின் மரணத்தை, அதனால் விளைந்த அத்யந்த சோகத்தை உணராதவர். அவரது மனைவி பார்வதி அடிக்கடி ரகசியமாகக் கடிந்து கொள்வதற்கு ஏற்ப, அவர் ஒரு 'அம்மா பிள்ளை' தான்.

விதவையாகிவிட்ட கீதாவைப்பற்றிப் பலவாறு குழம்பிக் குழம்பிப் பின்னொரு நாள் ஹைஸ்கூல் படிப்போடு நின்றிருந்த அவளை, உபாத்திமைப் பயிற்சிக்கு அனுப்ப யோசித்து, தயங்கித் தயங்கித் தன் தாயிடம் அபிப்பிராயம் கேட்டபோது, அவரது முடிவை வெகுவாகப் பாராட்டி அவள் ஏற்றுக் கொண்டதும், கௌரிப் பாட்டியை அவரால் அளக்கவே முடியவில்லை.

பாட்டியம்மாள், மாறிய காலத்தில் பிறந்த கீதாவின் பாக்கியத்தை எண்ணி மனத்துள் பூரித்தாள்...

பயிற்சி முடிந்து, பல காலம் உள்ளூரிலே பணியாற்றி வந்த கீதாவுக்குப் போன வருஷம்-புதிதாகப் பிறந்து வேகமாக வளர்ந்து வரும் தொழில் நகரமாகிய-நெய்வேலிக்கு உத்தியோக மாற்றல் வந்தபோதும் கணேசய்யர் குழம்பினார்.

''அதற்கென்ன? நான் போகிறேன் துணைக்கு...'' என்று பாட்டியம்மாள் இந்தத் தள்ளாத காலத்தில் மகனையும் குடும்பத்தையும் துறந்து தனிமைப்பட, தானே வலிய முன் வந்ததற்குக் காரணம், எங்கே முப்பது வயதைக்கூட எட்டாத கீதா வைதவ்ய இருட் கிடங்கில் அடைபட்டுப் போவாளோ என்ற அச்சம்தான்.

இந்த ஒரு வருஷ காலத்தில், நீண்ட விடுமுறைகளின் போது இருவரும் தங்கிச் செல்வது தவிர, சனி-ஞாயிறுகளில் நினைத்த போது புறப்பட்டு வந்துவிடுவாள் பாட்டி. அதற்கு முக்கியமான காரணங்களில் ஒன்று, அவளது வாடிக்கையான நாவிதன் வேலாயுதத்தையும், அதற்குமுன் அவன் அப்பனையும் தவிர, வேறு எவரிடமும் பாட்டியம்மாள் தலைமழித்துக் கொள்ளப் பழக்கப்படாததுமாகும்.

இப்போது வழியில் எதிர்ப்பட்ட வேலாயுதம், நாளைக் காலை அவள் வீட்டில் வந்து நிற்பான் என்று பாட்டிக்குத் தெரியும். வர வேண்டும் என்பது அவனுக்கும் தெரியும். அது வாடிக்கை.

* * *

ஒரு மைலுக்குக் குறைவான அந்த தூரத்தை, அரை மணி நேரமாய் நடந்து அவள் வீட்டருகே வந்தபோது, கணேசய்யர் முகத்தில் தினசரிப் பத்திரிகையைப் போட்டுக் கொண்டு முன் கூடத்து ஈஸிச்சேரில் சாய்ந்து உறங்கிக் கொண்டிருந்தார். பக்கத்தில் திறந்துவைத்த தகர டின்னும், முறத்தில் கொட்டிய

உளுத்தம் பருப்புமாய், மூக்குத்தண்டில் கண்ணாடியை இறக்கி விட்டுக் கொண்டு கல் பொறுக்கிக் கொண்டிருந்தாள் மருமகள் பார்வதி அம்மாள். கம்பி அழி வைத்து அடைத்த முன்புறக் குறட்டின் ஒரு மூலையில், வெயிலுக்கு மறைவாய்த் தொங்கிய தட்டியோரமாய்ச் செப்புகள் இறைந்து கிடக்க, வாய்க்குள் ஏதேதோ பொருளற்ற சம்பாஷணைகளைத் தான்மட்டும் ராகமிழுத்து முனகியவாறு, குடும்ப விளையாட்டு நடத்திக் கொண்டிருந்தாள் கடைசிப் பேத்தியான ஆறு வயது ஜானா.

பாட்டி வந்து நின்றதை யாருமே கவனிக்காதபோது, கம்பிக் கதவின் நாதாங்கியை லேசாக ஓசைப்படுத்த வேண்டியிருந்தது. அந்தச் சிறு ஒலியில் விளையாட்டு சுவாரஸ்யத்தோடு திரும்பிப் பார்த்த ஜானா, அன்பில் விளைந்த ஆர்வத்தோடு ''பாட்டி'' என்ற முனகலுடன் விழிகளை அகலத் திறந்து முகம் விகஸித்தாள்.

''கதவெத் தெறடி'' என்று பாட்டி சொல்வது காதில் விழுமுன், ''அம்மா அம்மா...பாட்டி வந்துட்டாம்மா, பாட்டி வந்துட்டா!...'' என்று கூவியவாறு உள்ளே ஓடினாள் ஜானா.

கதவைத் திறக்காமல், தன் வரவை அறிவித்தவாறு உள்ளே ஓடும் குழந்தையைக் கண்டு பாட்டி சிரித்தாள்.

கணேசய்யர் முகத்தின்மேல் கிடந்த பத்திரிகையை இழுத்துக் கண் திறந்து பார்த்தார். குழந்தையின் உற்சாகக் கூப்பாட்டால் திடீரென்று எழுந்து சிவந்த விழிகள், மிரண்டு மிரண்டு வெறிக்க ஒரு விநாடி ஒன்றும் புரியாமல் விழித்தார் அவர். அதற்குள் ''ஏன்டி சனியனே இப்படி அலறிண்டு ஓடிவரே?'' என்று குழந்தையை வைதுவிட்டு ''வாங்கோ... வெயில்லே நடந்தா வந்தேள். ஒரு வண்டி வெச்சுக்கப் படாதோ?'' என்று அங்கலாய்த்தவாறே மரியாதையோடு எழுந்தோடி வந்து கதவைத் திறந்தாள் பார்வதி.

''இதோ இருக்கிற இடத்துக்கு என்ன வண்டியும் வாகனமும் வேண்டிக் கெடக்கு? அவனானா பத்தணா குடு, எட்டணா குடும்பான்...'' என்று சலித்துக்கொண்டே படியேறி உள்ளே வந்த தாயைக் கண்டதும் ''நல்ல வெயில்லே வந்திருக்கியே அம்மா, பார்வதி!...அம்மாவுக்கு மோர் கொண்டு வந்து கொடு'' என்று உபசரித்தவாறே ஈஸிசேரிலிருந்து எழுந்தார் கணேசய்யர்.

''பாவம், அசந்து தூங்கிண்டிருந்தே...இன்னும் செத்தே படுத்திறேன்...'' என்று அவரைக் கை''மர்த்தியவாறே, ஈஸிசேரின் அருகே கிடந்த ஸ்டூல்மீது பையை வைத்துவிட்டு

முற்றத்தில் இறங்கித் தொட்டித் தண்ணீரை அள்ளிக் கை கால் முகம் அலம்பி தலையிலும் ஒரு கை வாரித் தெளித்துக் கொண்டாள் பாட்டி. பிறகு முந்தானையால் முகத்தைத் துடைத்துக்கொண்டு, கூடத்து ஸ்டாண்டிலிருந்த சம்புடத்தை எடுத்து ''என்னப்பனே... மகாதேவா'' என்று திருநீற்றை அணிந்துகொண்டு திரும்பி வரும் வரை, கணேசய்யர் ஈஸிசேரின் அருகே நின்று கொண்டிருந்தார்.

அந்த ஈஸிசேர் பாட்டிக்கு மட்டுமே உரிய சிம்மாசனம். அவள் வீட்டிலில்லாத போதுதான் மற்ற யாரும் அதில் உட்காருவது வழக்கம். அவள் ஈஸிசேரில் வந்து அமர்ந்தபின் பக்கத்தில் ஒரு நாற்காலியை இழுத்துப்போட்டு உட்கார்ந்து கொண்டு விசிறினார் கணேசய்யர். அதற்காவே காத்துக் கொண்டிருந்தவள் போல் பாட்டி உட்கார்ந்ததும், அவள் மடியில் வந்து ஏறினாள் ஜானா.

''பாட்டி வெயில்லே வந்திருக்கா...சித்தே நகந்துக்கோ... வந்ததும் மேலே ஏறிண்டு...'' என்று விசிறிக் கொண்டிருந்த விசிறியால் ஜானாவைத் தட்டினார் கணேசய்யர்.

''இருக்கட்டும்டா...கொழந்தை! நீ உக்காந்துக்கோடி'' என்று குழந்தையை மடிமீது இழுத்து இருத்திக் கொண்டாள் பாட்டி.

''இப்ப என்ன பண்ணுவியாம்'' என்று நாக்கைக் கடித்து விழித்துத் தந்தைக்கு அழகு காட்டினாள் ஜானா.

ஜானாவை மடியில் வைத்துக்கொண்டே, பக்கத்தில் ஸ்டூலின் மேலிருந்த பையை எடுத்து, அதனுள்ளிருந்த வெள்ளரிப் பிஞ்சுகளை வரிசையாகத் தரையில் வைத்து ஜானாவின் கையில் ஒன்றைத் தந்தாள். முறுக்கிச் சுருட்டி வைத்திருந்த மாற்றுப் புடவையைக் கொடியில் போடுவதற்காகப் பக்கத்தில் சற்றுத் தள்ளி வைத்தாள். பிறகு பையைத் தலை கீழாகப் பிடித்து அதனுள்ளிருந்த மூன்று படி பச்சை வேர்க் கடலையைக் கொட்டியபோது, அதனூடே ஒரு கவர் விழுந்தது.

''ஆமா, மீனாவும், அம்பியும் எங்கே? காணோம்'' என்று சுற்றும் முற்றும் பார்த்தவாறு ''இதெ உங்கிட்டே குடுக்கச் சொன்னா கீதா'' என்று கவரை நீட்டினாள் பாட்டி.

இருபது வயது நிறைந்த பெண்ணை அம்பியின் துணையோடு மாட்டினி ஷோ பார்க்க என்னதான் பக்கத்திலிருந்தாலும் எப்படி சினிமாவுக்கு அனுப்பலாம் என்று தாய் கோபித்துக்

கொள்வாளோ என்ற அச்சத்தோடு கவரை வாங்கியவாறே, ''ஏதோ அவள் படிச்ச நல்ல நாவலாம். படமா வந்திருக்குன்னு காலையிலேருந்து உசிரை வாங்கித்து ரெண்டு சனியன்களும். மாட்டினி ஷோதானே... போகட்டும்னு அனுப்பி வெச்சேன்'' என்றார் கணேசய்யர்.

''ஓ! தொடர் கதையா வந்துதே... அந்தக் கதைதானா அது?... பேரைப் பார்த்தேன்...'' என்று ஒரு பத்திரிகையின் பெயர், ஓர் எழுத்தாளரின் பெயர் முதலியவற்றைக் குறிப்பாகக் கேட்டாள் பாட்டி. ''இதுக்காகப்போய் ஏன் கொழந்தைகளைச் சனியன்னு திட்டறே?... நோக்கும் எனக்கும் சினிமான்னா என்னன்னே தெரியாது... இந்தக் காலத்துப் பிள்ளைகளுக்கு சினிமாவைத் தவிர வேற ஒண்ணும் தெரியாது. நம்ம கொழந்தைகள் எவ்வளவோ பரவாயில்லைன்னு நெனச்சிக்கோ...'' என்று மகனுக்குப் புத்தி சொல்லிவிட்டு, ''கவர்லே என்ன சொல்லு-அவளைக் கேட்டப்போ, 'அப்பா சொல்லுவா'ன்னு பூடகமாக் குடுத்து அனுப்பிச்சாளே'' என விளக்கினாள் பாட்டி.

கண்ணாடியை எடுத்து மாட்டிக் கொண்டு கவரை உடைத்து, அதனுள்ளிருந்த ஒரே காகிதத்தில் சுருக்கமாக எழுதியிருந்த வாசகங்களைப் படிக்க ஆரம்பித்ததும்- கணேசய்யரின் கைகள் நடுங்கின. முகமெல்லாம் 'குப்'பென வியர்த்து உதடுகள் துடித்தன. படித்து முடித்ததும் தலை நிமிர்ந்து எதிர்ச் சுவரில் தொங்கிய கீதாவின் மணக்கோல போட்டோவை வெறித்துப் பார்த்தார்...

தாயினருகே அமர்ந்து இனிமையான சூழ்நிலையில் மகிழ்ச்சியுடன் இருந்த கணேசய்யரின் முகம், திடீரென இருளடைந்தது! நாற்காலியின் கைப்பிடியை இறுகப்பற்றிக் கொண்டு, தாயின் முகத்தை வெறித்துப் பார்த்தார். தன் கையிலிருந்த கடிதம் கீழே நழுவியதைக்கூட அவர் கவனிக்கவில்லை.

''என்ன விபரீதம்!'' என்று துணுக்குற்ற பாட்டியம்மாள், தரையில் விழுந்த அந்தக் கடிதத்தை வெளிச்சத்தில் பிடித்துக் கொண்டு படிக்க ஆரம்பித்தாள்; அவளால் கண்ணாடி இல்லாமலே படிக்க முடியும்.

''என் அன்பிற்குரிய அப்பா, அம்மா, பாட்டி ஆகியோருக்கு...

இந்தக் கடிதத்தை எழுதுகையில், ஆறு மாதங்கள் தீர்க்கமாய் யோசித்துத். தீர்மானமான ஒரு முடிவுக்கு வந்தபின் தெளிந்த மனத்தோடுதான் எழுதுகிறேன். இந்தக் கடிதத்திற்குப் பிறகு உங்களுக்கும் எனக்கும் கடிதப் போக்குவரத்தோ, முகலோ

பனமோ கூட அற்றுப் போகலாம் என்பதும் தெரிந்தே எழுதுகிறேன்.

என்னோடு பணி புரியும் ஹிந்தி பண்டிட் திரு. ராமச்சந்திரன் என்பவரை வருகின்ற ஞாயிறன்று நான் பதிவுத் திருமணம் செய்துகொள்ள நிச்சயித்து விட்டேன். நான் விதவை என்பது அவருக்குத் தெரிந்ததுதான். ஆறுமாத காலமாய் நான் எனது உணர்ச்சிகளோடு-இது பாபகரமான காரியம் என்ற ஓர் அர்த்தமற்ற உணர்ச்சியோடு-போராடித்தான் இம் முடிவுக்கு வந்தேன். உணர்வு பூர்வமான வைதவ்ய விரதத்துக்கு ஆட்பட முடியாமல் வேஷங்கட்டித் திரிந்து, பிறகு அவப் பெயருக்கு ஆளாகிக் குடும்பத்தையும் அவமானப் படுத்தாமல் இருப்பதே சிறந்த ஒழுக்கம் என்று உணர்ந்திருக்கிறேன். இந்த முப்பது வயதில்-இந்த அளவு சோதனைகளையே தாங்காமல் - இன்னும் ஐந்தாண்டுகளுக்குப் பின் இதே முடிவுக்கு வர நேரிடுமோ என்ற அச்சமும் பிறந்தே-இப்போதே செய்தல் சரி என்ற முடிவுக்கு வந்து விட்டேன்...

என் காரியம் என் வரைக்கும் சரியானதே!

நான் தவறு செய்வதாகவோ, இதற்காக வருந்த வேண்டு மென்றோ கூட எனக்குத் தோன்றவில்லை. எனினும் உங்கள் உறவை, அன்பை இழந்து விடுகிறேனே என்ற வருத்தம் சில சமயங்களில் அதிகம் வாட்டுகின்றது... இருப்பினும் ஒரு புதிய வாழ்க்கையை, புதிய வெளிச்சத்தைப் பெற்று, ஒரு புது யுகப் பிரஜையாகச் சஞ்சரிக்கப் போகிறேன் என்ற லட்சிய நிறைவேற்றத்தில் நான் ஆறுதலும், மட்டற்ற ஆனந்தமும் கொள்கிறேன்.

இந்தக் காலத்தில் யார் மனம் எப்படி மாறும் என்று சொல்ல முடியாது. ஒரு வேளை நீங்கள் என் முடிவை ஆதரித்தால்... இன்னும் ஒரு வாரம் இருக்கிறது... உங்களை உங்கள் அன்பான வாழ்த்தை எதிர்பார்க்கிறேன். இல்லையெனில் உங்களைப் பொறுத்தவரை 'கீதா செத்து விட்டாள்' என்று தலை முழுகி விடுங்கள்.

ஆமாம், ரொம்பச் சுயநலத்தோடு செய்த முடிவுதான். எனக்காகப் பாட்டியைத் தவிர வேறு யார்தான் தங்கள் நலனைத் துறந்து 'தியாகம்' செய்துவிட்டார்கள்? ஏன் செய்ய வேண்டும்?

உங்கள் மீது என்றும்
மாறாத அன்பு கொண்டுள்ள,

கீதா.

''என்னடா... இப்படி ஆயிடுத்தே?'' என்பதைத் தவிர, வேறு ஒன்றும் சொல்லவோ, செய்யவோ சக்தியிழந்தவளாய் ஏக்கம் பிடித்து வெறித்து விழித்தாள் பாட்டி.

''அவ செத்துட்டா... தலையெ முழுகிட வேண்டியதுதான்'' என்று நிர்த்தாட்சண்யமான குரலில் உறுதியாகச் சொன்னார் கணேசய்யர்.

பாட்டி திகைத்தாள்!

தாயின் யோசனைக்கோ, பதிலுக்கோ, கட்டளைக்கோ, உத்தரவுக்கோ காத்திராமல், அந்த 'அம்மாப் பிள்ளை' முதன் முதலில் தானே ஒரு தீர்மானத்துக்கு வந்தது, இதுதான் முதல் தடவை.

''அப்படியாடா சொல்றே?'' என்று கண்களிரண்டும் நீர்க் குளமாக, வயோதிக நெஞ்சு பாசத்தால் துடிக்க, நெஞ்சில் கை வைத்துக் கேட்டாள் பாட்டி.

''வேறெ எப்படியம்மா சொல்லச் சொல்றே?... நீ பிறந்த வம்சத்திலே, இந்தக் குடும்பத்திலே ஐயோ...!'' என்று இந்த அவலத்தைக் கற்பனை செய்ய முடியாமல் பதறினார் கணேசய்யர்.

'நான் பிறந்த யுகமே வேறேடா' என்ற வார்த்தை பாட்டிக்கு வாயில் வந்து நின்றது. அப்பொழுதுதான் பாட்டிக்கு ஓர் அரிய உண்மை இவ்வளவு காலத்திற்குப்பின் புரிந்தது

'என் மகன் எனது சொல்லுக்கும் எனது உத்தரவுக்கும் காத்திருந்தது வெறும் தாயன்பால் மட்டுமல்ல; நான் ஒரு யுகத்தின் பிரதிநிதி; அது ஆசாரமான யுகம்; நான் பிறந்தது சாஸ்திரத்துக்கு அஞ்சி நடந்த குடும்பத்தில்; அதுபோல் தன் குடும்பமும் நடக்க-நடத்தி வைக்கத் தன்னால் ஆகாவிடினும் என்னால் ஆகும் என்ற நம்பிக்கையில்-அந்த யுகத்தை அந்த ஆசார ஜீவிதத்தைக் கௌரவிப்பதன் பொருட்டே என் சொல்லை, என் வார்த்தையை அவன் எதிர்பார்த்திருந்தான்!' என்று தன்னைப் பற்றியும், தன் மகனின் மூர்க்கமான தீர்மானம் பற்றியும் தனித்துப்போன அன்பிற்குரிய கீதாவைப் பற்றியும் எண்ணி மௌனமாய் வாயடைத்து உட்கார்ந்திருந்தாள் பாட்டி.

அப்போது அங்கு வந்து, அவர்களை விபரீதச் சூழ்நிலைக்கு ஆட்படுத்தியிருக்கும் அந்தக் கடிதத்தை எடுத்துப் படித்த பார்வதி ''அடி, பாவிப் பெண்ணே... என் தலையிலே தீயை வெச்சுட்டியேடி!'' என்று தலையிலடித்துக் கொண்டு அழுதாள்.

பாட்டி தன் இயல்புக்கேற்ற நிதான புத்தியுடன் அந்தக் கடிதத்தை மீண்டும் கையிலெடுத்து, அந்தக் கடைசி வரிகளைப் படித்தாள்...

'ரொம்பச் சுய நலத்தோடு செய்த முடிவுதான். எனக்காகப் பாட்டியைத் தவிர, வேறு யார்தான் தங்கள் நலனைத் துறந்து, 'தியாகம்' செய்து விட்டார்கள்?' -பாட்டிக்குச் 'சுருக்' கென்றது. உதட்டைக் கடித்துக் கொண்டாள்.

இந்த வார்த்தைகளின் அர்த்தம் மற்றவர்களுக்குப் புரியாது. பாட்டிக்குப் புரியும்.

கீதா பதினெட்டு வயதில், நெற்றியிலிடும் திலகத்தை மறந்ததுபோல், கூந்தலில் சூடும் பூவைத் துறந்ததுபோல் 'அது அவள் விதி'யென்று சொல்லி அவள் சோகத்தையே மறந்துவிடவில்லையா, அவளைப் பெற்ற தாயும் தந்தையும்...? கீதா இப்படியாகி வந்த பிறகு தானே பார்வதி அம்பியையும் ஜானாவையும் பெற்றெடுத்தாள்...

அதற்கென்ன? அதுதான் வாழ்கின்றவர்களின் வாழ்க்கை இயல்பு.

வாழாத கீதாவின் உள்ளில் வளர்ந்து, சிதைந்து, மக்கி, மண்ணாகிப் பூச்சி அரிப்பதுபோல் அரித்து அரித்துப் புற்றாய்க் குவிந்திருக்கும் உணர்ச்சிகளை, நினைவுகளை, ஆசைகளை, கனவுகளை அவர்கள் அறிவார்களா?

ஆனால்...

கீதாவைப் போல்-அவளைவிடவும் இள வயதில் அரை நூற்றாண்டுக்கு முன் நிலவிய ஹிந்து சமூகத்தின் வைதவ்யக் கொடுந்தீயில் வடுபட்டு வாழ்விழந்து, அந்த நினைவுகளை எல்லாம் கொண்டிருந்த, அந்தக் கனவுகளையெல்லாம் கண்டிருந்த, அந்த ஆசைகளையெல்லாம் கொன்றிருந்த கௌரிப் பாட்டி, அவற்றையெல்லாம் கீதாவிடம் காணாமலா, கண்டுணராமலா இருந்திருப்பாள்?

அதனால்தான் கணேசய்யரைப் போலவோ, பார்வதி அம்மாளைப் போலவோ கீதா இப்படி நடந்து கொள்ளப் போவதை அறிந்து... அவளை வெறுத்து உதறவோ, தூஷித்துச் சபிக்கவோ முடியாமல், 'ஐயோ! என்ன இப்படி ஆய் விட்டதே!... என்ன இப்படியாய் விட்டதே' என்று கையையும் மனசையும் நெரித்துக் கொண்டு தவியாய்த் தவிக்கிறாள்.



பொழுது சாய்ந்து விளக்கு வைக்கும் நேரத்தில் மாட்டினி ஷோவுக்குப் போயிருந்த மீனாவும் அம்பியும் வீடு திரும்பினார்கள். வாசற்படியில் கால் எடுத்து வைத்த அம்பி, கூடத்து ஈஸிசேரில் சாய்ந்து படுத்து, ஆழ்ந்த யோசனையில் அமிழ்ந்திருக்கும் பாட்டியைக் கண்டதும் சட்டென்று நின்று திரும்பிப் பின்னால் வரும் மீனாவிடம்,

''பாட்டிடீ...'' என்று ரகசியமாக எச்சரித்தான்.

''எங்கே? உள்ளே இருக்காளா, கூடத்தில் இருக்காளா?'' என்று பின் வாங்கி நின்றாள் மீனா.

''சிம்மாசனத்தில்தான் சாஞ்சிண்டு தூங்கறா...'' என்றான் அம்பி.

மீனா தோள் வழியே 'ஸ்டைலாக' கொசுவித் தொங்க விட்டிருந்த தாவணியை ஒழுங்காய்ப் பிரித்து, இழுத்து இடுப்பில் செருகிக் கொண்டு, மேலாடை ஒழுங்காக இருக்கிறதா என்று ஒருமுறை கவனித்தபின் தலையைக் குனிந்து சாதுவாய் உள்ளே நுழைந்தாள்.

உள்ளே வந்த பின்தான் பாட்டி தூங்கவில்லை என்று தெரிந்தது. அப்பா ஒரு பக்கம் நாற்காலியிலும், அம்மா ஒரு பக்கம் முகத்தில் முந்தானையைப் போட்டுக்கொண்டு விம்மியவாறு, ஒரு மூலையிலும் விழுந்து கிடப்பது என்ன விபரீதம் என்று புரியாமல் இருவரும் திகைத்து நின்றனர்.

அப்போது ஜானா சிரித்துக்கொண்டே அம்பியிடம் ஓடி வந்தாள். ''பாட்டி வெள்ளரிப்பிஞ்சு வாங்கிண்டு வந்தாளே'' என்ற ஜானாவின் குரல் கேட்டு பாட்டி திரும்பிப் பார்த்தாள் மீனாவை.

''எப்ப வந்தேள் பாட்டி?'' என்ற கேட்டுவிட்டு, 'என்ன விஷயம்? இதெல்லாம் என்ன?' என்று சைகையால் கேட்டாள் மீனா.

பாட்டியின் கண்கள் குளமாயின.

மீனாவைப் பார்க்கும்போதுதான் அவளுக்கு இன்னொரு விஷயமும்-கணேசய்யர் கீதாவைத் தலை முழுகச் சொல்வதன் காரணம், பார்வதியம்மாள் கீதாவைச் சபிப்பதன் நியாயம், ஆவேசம் இரண்டும் - புரிந்தது பாட்டிக்கு.

அங்கே கிடந்த அந்தக் கடிதத்தை மீனா எடுத்துப் படித்தாள்.

'அதை நீ படிக்க வேண்டாம்' என்று தடுக்க நினைத்தாள் பாட்டி. பிறகு ஏனோ 'படிக்கட்டுமே' என்று எண்ணி மீனாவின் முகத்தையே உற்றுக் கவனித்தாள்.

மீனாவின் முகம் அருவருப்பால் சுளித்தது.

''அடி, நீ நாசமாப் போக'' என்று அங்கலாய்த்தவாறே தொடர்ந்து கடிதத்தைப் படித்தாள். அவள் தோள் வழியே எக்கி நின்று கடிதத்தைப் படித்த அம்பிகூட, விளக்கெண்ணெய் குடிப்பதுபோல் முகத்தை மாற்றிக் கொண்டான்.

வீடே சூன்யப்பட்டது. ஊரெல்லாம் பிளேக் நோய் பரவிக் கிடக்கும்போது வீட்டில் ஒரு எலி செத்து விழக் கண்டவர்கள் போல ஒவ்வொருவரும் மிகுந்த சங்கடத்தோடு இன்னொருவர் முகத்தைப் பார்த்தனர்.

இரவு முழுதும் கௌரிப் பாட்டி தூங்கவில்லை. சாப்பிட வில்லை; கூடத்து ஈஸிசேரைவிட்டு எழுந்திருக்கவும் இல்லை.

மகனைப் பார்த்தும், மருமகளைப் பார்த்தும், மற்றப் பேரக் குழந்தைகளைப் பார்த்தும், கீதாவை நினைத்தும் பெருமூச் செறிந்து கொண்டிருந்தாள்.

'வழக்கத்துக்கு விரோதமாய் என்னை வழியனுப்ப பஸ் ஸ்டாண்டுக்கு வந்து, பஸ் புறப்படும்போது முந்தானையால் கண்களைக் கசக்கிக் கொண்டாயேடி, கீதா? இப்போதல்லவா தெரிகிறது... பாட்டியை நிரந்தரமாய் பிரியறமேன்னுட்டு, பாவம் கொழந்தே கண்கலங்கி நின்னிருக்கேன்னு... இப்பன்னா புரியறது... கண்ணிலே தூசு விழுந்திருக்கும்னு நினைச்சேனே பாவி'

⁂ ⁂ ⁂

'என்னடி, இப்படி பண்ணிட்டியே!' என்று அடிக்கடி தன்னுள் குமுறிக் குமுறிக் கேட்டுக்கொண்டாள் பாட்டி.

விடிகின்ற நேரத்துக்குச் சற்றுமுன்பு தன்னையறியாமல் கண்ணயர்ந்தாள். கண் மூடிக் கண் விழித்தபோது, மாயம் போல் விடிவு கண்டிருந்தது.

தெரு வாசற்படியின் கம்பிக் கதவோரமாகக் கைப்பெட்டி யுடன் வந்து காத்திருந்தான் வேலாயுதம்.

கண் விழித்த பாட்டி - நடந்ததெல்லாம் கனவாகிவிடக் கூடாதா என்று நினைத்து முடிக்கு முன் 'இது உண்மை' என்பதுபோல் அந்தக் கடிதம் ஸ்டூலின் மீது கிடந்தது.

அந்தக் கடிதத்தை எடுத்து மீண்டும் படித்தாள் பாட்டி. அப்போது அறைக்குள்ளிருந்து வந்த கணேசய்யர், இரவெல்லாம் இதே நினைவாய் கிடந்து மருகும் தாயைக் கண்டு தேற்ற எண்ணி,

''அம்மா! வேலாயுதம் வந்திருக்கான்... அவள் செத்துட்டானு நெனைச்சித் தலையை செரைச்சி தண்ணிலே போயி முழுகு...'' என்றார்.

''வாயை மூடுடா...'' என்று குமுறி எழுந்தாள் பாட்டி. ''காலங்கார்த்தாலே அச்சான்யம் பிடிச்ச மாதிரி என்ன பேச்சு!... இப்ப என்ன நடந்துட்டுதுன்னு அவளைச் சாகச் சொல்றே?...'' என்று கேட்டுவிட்டு, தாங்க முடியாத சோகத்துடன் முகமெல்லாம் சிவந்து குழம்பக் குமுறியழுதாள் பாட்டி. பிறகு சிவந்த கண்களைத் திறந்து ஆத்திரத்துடன் கேட்டாள்.

''என்னடா தப்புப் பண்ணிட்டா அவ?... என்ன தப்புப் பண்ணிட்டா, சொல்லு'' என்று தன் தாய் கேட்பதைக் கண்டு, கணேசய்யருக்கு ஒரு விநாடி ஒன்றுமே புரியவில்லை.

''என்ன தப்பா?... என்னம்மா பேசறே நீ? உனக்குப் பைத்தியம் புடிச்சிடுத்தா?'' என்று கத்தினார் கணேசய்யர்.

அடுத்த விநாடி தன் சுபாவப்படி நிதானமாக மகனின் முகத்தைப் பார்த்தவாறு, அமைதியாக யோசித்தாள் பாட்டி. தன் மகன் தன்னிடம் இப்படிப் பேசுவது இதுவே முதல் தடவை.

பாட்டி மெல்லிய குரலில் நிதானமாய்ச் சொன்னாள்: ''ஆமாம்டா... எனக்குப் பைத்தியந்தான்... இப்பப் பிடிக்கலைடா... இது பழைய பைத்தியம்! தீர முடியாத பைத்தியம்... ஆனால் என்னோட பைத்தியம்... என்னோட போகட்டும். அந்தப் பைத்தியம் அவளுக்குப் 'பளீர்'னு தெளிஞ்சிருக்குன்னா அதுக்கு யார் என்ன பண்றது?... அவதான் சொல்லிட்டாளே என் காரியம் என் வரைக்கும் சரி, வேஷம் போட்டு ஆடி, அவப் பேரு வாங்காம விதரணையா செஞ்சிருக்கேன்னு...''

''அதனாலே சரியாயிடுமா அவ காரியம்?'' என்று வெட்டிப் பேசினார் கணேசய்யர்.

''அவ காரியம் அவ வரைக்கும் சரிங்கறாளே அவதான்... அதுக்கென்ன சொல்றே?'' என்று உள்ளங்கையில் குத்திக் கொண்டாள் பாட்டி.

''சாஸ்திரம் கெட்ட மூதேவி. ஆசாரமான குடும்பத்துப் பேரைக்கெடுத்த சனி செத்துத் தொலைஞ்சிட்டானு தலையை முழுகித் தொலைன்னு சொல்றேன்'' என்று பல்லைக் கடித்துக் கொண்டு கத்தினார் கணேசய்யர். பாட்டியம்மாள் ஒரு விநாடி

தன்னையும், தன் எதிரே நிற்கும் மகனையும் வேறு யாரோ போல் விலகி நின்று பார்த்துவிட்டு, ஒரு கைத்த சிரிப்புடன் கூறினாள்:

''நம்ப சாஸ்திரம்... ஆசாரம்! அப்படின்னா நீ என்ன பண்ணியிருக்கணும் தெரியுமா? என்னை என்ன பண்ணித்து தெரியுமா அந்த சாஸ்திரம்?... அப்போ நீ பால் குடிக்கிற கொழந்தைடா... எனக்குப் பதினைஞ்சு வயசுடா! என் கொழந்தை, என் மொகத்தெப் பார்த்துப் பேயைப் பார்த்ததுபோல் அலறித்தேடா...! பெத்த தாய்கிட்டே பால் குடிக்க முடியாம, குழந்தை கத்துவே. கிட்டே வந்தா மொட்டையடிச்ச என்னைப் பார்த்து பயத்துலே அலறுவே... அப்படி என்னை, என் விதிக்கு மூலையிலே உட்காத்தி வெச்சாளே! அந்தக் கோரத்தை நீ ஏண்டா பண்ணலே கீதாவுக்கு?... ஏன் பண்ணலே சொல்லு?'' என்று கண்களில் கண்ணீர் வழியக் கேட்கும்போது, கணேசய்யரும் கண்களைப் பிழிந்து விட்டுக் கொண்டார்! அவள் தொடர்ந்து பேசினாள்.

''ஏன்டாப்பா உன் சாஸ்திரம் அவளைக் கலர் புடவை கட்டிக்கச் சொல்லித்தோ? தலையைப் பின்னிச் சுத்திண்டு, பள்ளிக்கூடம் போய்வரச் சொல்லித்தோ? தன் வயித்துக்குத் தா[illegible]ன சம்பாதிச்சுச் சாப்பிடச் சொல்லித்தோ? இதுக்கெல்லாம் நீ உத்[illegible] கேட்டப்போ நான் சரின்னேன், ஏன்?... காலம் மாறிண்டு வரது; மனுஷாளும் மாறணும்தான்! நான் பொறந்த குடும்பத்திலேன்னு சொல்றயே... எனக்கு நீ இருந்தே! வீடும் நெலமும் இருந்தது. அந்தக் காலமும் அப்படி இருந்தது. கீதா பண்ணின காரியத்தை மனசாலேகூட நெனைக்க முடியாத யுகம் அது. அப்போ அது சாத்தியமாகவும் இருந்தது. இப்போ முடியலியேடா... எனக்கு உன் நிலைமையும் புரியறது. நீ பிள்ளையும் குட்டியுமா வாழறவன்... அதுகளுக்கு நாளைக்கு நல்ல காரியங்கள் நடக்கணும்... எனக்குப் புரியறது-அவளும் புரிஞ்சுதானே எழுதி இருக்கா... உன் சாஸ்திரம் அவளை வாழ வைக்குமாடா? அவளுக்கு அது வேண்டாம்னுட்டா. ஆனா, டேய் கணேசா..... என்னே மன்னிச்சுக்கோடா... எனக்கு அவ வேணும்! அவதான்டா வேணும். எனக்கும் இனிமே என்ன வேண்டிக் இருக்கு! என் சாஸ்திரம் என்னோடேயே இருந்து, இந்தக் கட்டையோடே எரியும். அதனாலே நீங்க நன்னா இருங்கோ-நான் போறேன். கீதாவோடேயே போயிடறேன்... அதுதான் நல்லது. அதுக்காக நீ உள்ளூறத் திருப்திப் படலாம்-யோசிச்சுப் பாரு. இல்லேன்னா அவளோட சேத்து எனக்கும் ஒரு முழுக்குப்

போட்டுடு! நான் வரேன்'' என்று கூறியவாறே மாற்றுப் புடவையைச் சுருட்டிக் காக்கிப் பைக்குள் திணித்தவாறு எழுந்தாள் பாட்டியம்மாள்.

''அம்மா! ஆ...'' என்று கைகளைக் கூப்பிக்கொண்டு சப்தமில்லாமல் தாரை தாரையாய்க் கண்ணீர் வடித்தார் கணேசய்யர்.

''அசடே... எதுக்கு அழறே? நானும் ரொம்ப யோசிச்சுத்தான் அப்படி முடிவு பண்ணினேன்... என்ன பண்ணினாலும் அவ நம்ம கொழந்தைடா'' என்று மெதுவாய்ச் சொல்லிவிட்டு உட்புறம் திரும்பிப் பார்த்தாள். ''பார்வதி! நீ வீட்டைச் சமத்தாப் பார்த்துக்கோ...'' என்று எல்லோரிடமும் விடை பெற்றுக் கொண்டு புறப்பட்டாள் பாட்டி.

''எனக்கு உடனே போயி கீதாவைப் பார்க்கணும்'' என்று தானே சொல்லிக் கொண்டு திரும்பும்போது, வாசற்படியில் நின்றிருந்த வேலாயுதத்தைக் கண்டாள் பாட்டி.

''நீ போடாப்பா... நான் அவசரமாப் போறேன் நெய்வேலிக்கு'' என்று அவனிடம் நாலணாவைத் தந்து அனுப்பினாள்.

'இனிமேல் இவனுக்கு இங்கு வேலை இல்லை-அதற்கென்ன? உலகத்தில் என்னென்னமோ மாறுகிறது! நான் ஒரு நாவிதனைக் கூட மாற்றிக் கொள்ளக் கூடாதா?' என்று எண்ணிச் சிரித்துக்கொண்டாள். இடுப்பில் பையை வைத்துக் கொண்டு வாசற்படியிலிறங்கிய பாட்டி, ஒருமுறை திரும்பி நின்று, ''நான் போயிட்டு வரேன்'' என்று மீண்டும் விடை பெற்றுக் கொண்டாள்.

அதோ, காலை இளவெயிலில், சூடில்லாத புழுதி மண்ணில் பாதங்கள் அழுந்தி அழுந்திப் பதிய, ஒரு பக்கம் சாய்ந்து சாய்ந்து நடந்துகொண்டிருக்கும் பாட்டியின் தோற்றம்...

வேகமாய் ஆவேசமுற்று வருகின்ற புதிய யுகத்தை, அமைதியாய் அசைந்து நகரும் ஒரு பழைய யுகத்தின் பிரதிநிதி எதிர் கொண்டழைத்துத் தழுவிக்கொள்ளப் பயணப்படுவது என்றால்?...

ஓ! அதற்கு ஒரு பக்குவம் தேவை! 

# இவன்

ஜெயந்தன்

இவனுள் பற்றி எரிந்த நெருப்பை 'அலைபாயுதே கண்ணா'வால் கூடத் தணிக்க முடியவில்லை.

இவ்வளவிற்கும் அது இவனது இதயம் நிறைந்த - இதயம் நிறைத்த பாடல். இதன் பொருள், இவனுக்கு கர்நாடக இசையில் பெரிய பாண்டித்தியம் என்பதல்ல. அதுவும் நாகஸ்வரத்தில் கடைசித்தரம் என்றே சொல்லலாம். ஆனால் இந்தப் பாடலை எந்த இசைக் கருவியில் கேட்டாலும், இனம் கண்டு சொக்கிப் போவான்.

அதில் எடுத்துக்கொண்ட பாவம் மிகமிக வெற்றிகரமாகச் சொல்லப்பட்டிருந்தது. மிக எளிய வார்த்தைகள். ஆனால் அவை அமர்த்திவைக்கப்பட்ட ஸ்தானங்களால், இதைச் சொல்வதற் காகவே புதிதாக வார்க்கப்பட்டனபோல் காரியமாற்றின. தங்கள் ஆகிருதிகளால் அவை இசையை உரசி அதன் இடுப்பை நெளிக்கச் செய்யவில்லை. இசையோ அற்புதமான இசை. ஆனால் அதுவோ தனது பீடத்தை விசாலிக்கிற காரியத்தில் வார்த்தைகளின் பல்லைத்தட்டி கைகால்களை உடைக்கவில்லை.

இவையெல்லாம் அந்தப் பாடலின்மீது இவனுக்கெழுந்த மரியாதையின் காரணங்கள்.

'தெளிந்த நிலவு பட்டப் பகல்போல் எரியுதே' - இந்த எளிய சாதாரணப் படிமமே, அந்த இசையோடு கூடிக்கொண்டு இவனைக் கிறங்க அடித்தது இவனும் அந்த நிலவில் குளிர்ந்தான்.

ஆனந்த மோகன வேணுகானம் தென்றல் காற்றில் வரும் போது ராதை சொல்கிறாள்.

**'திக்கை நோக்கி என் இரு புருவம் நெறியுதே**
**கண்கள் சொருகி ஒருவிதமாய் வருகுதே'**

கண்கள் சொருகி ஒரு விதமாய், இசையோடு கலவிக் கொண்டு தன் சுயம் க்ஷீணிக்கிற முகத்தைக் கற்பனை செய்து பார்க்கிறபோது, இவனும்தான், தானும் ஏதோ மகத்தானதொரு சம்பவத்தோடு கலவி கொண்டு தன் சுயம் க்ஷீணிக்கிற அனுபவம் கொள்கிறான்.

**'கனித்த மனத்தில் இருத்தி புதைத்து எனக்கு**
**அளித்து மகிழ்த்தவா - ஒரு**
**தனித்தவனத்தில் அணைத்து எனக்கு**
**உணர்ச்சி கொடுத்து முகிழ்த்த வா'**

ஒருதடவை இவன் இதை சிலாகித்தபோது நண்பன் ஒருவன் கேட்டான், ''ஒரு பெண் இப்படி வாய்விட்டுக் கேட்பாளோ?''

இவன் சொன்னான், ''கேட்கமாட்டாள்தான். ஆனால் கேட்கட்டும். பாடிக் கேட்கட்டும். இந்தப் பாடலைப் பாடிக் கேட்கட்டும்.''

இவையெல்லாம் தவிர்த்து, இந்தப் பாடல் நெஞ்சோடு ஒட்டிப்போனதற்கு இன்னொரு காரணமும் இருந்தது. சொந்தக் காரணம்.

இது அவள் - கனகவல்லி பாடியது. இதையவள் பாட நேர்ந்த சந்தர்ப்பத்தில்தான் அவளை முதன்முதலாகப் பார்த்தான் இவன். ஏன், முதன்முதலாக இந்த இசைக் கவிதையை அவள் பாடித்தான் கேட்டான்.



அந்த நடுத்தரப் பள்ளியின் தலைமையாசிரியர் இவனது தோழன். 'இன்று எங்கள் பள்ளி ஆண்டு விழாவுக்கான பாட்டுப் போட்டி. நீ வாயேன்' என்று அழைத்ததற்காக மாலை அங்கு போயிருந்தான்.

மாணவர்கள் பங்கெடுத்த இசைப் போட்டிக்கான நடுவர் பதவிகளில் ஒன்றுகூட இவனுக்குக் கிடைத்தது.

மாணவர்கள் ஏதேதோ பாடினார்கள். அது முடிந்து, முடிவுக்காக மார்க்குகள் தொகுக்கப்பட்ட இடை நேரத்தில் யாரோ ஒருவர், ''டீச்சர், நீங்க ஒரு பாட்டுப் பாடுங்களேன்'' என்று சொல்வது கேட்டது.

அது கனகவல்லியைத்தான்.

இவன் அப்போதுதான் அவளைப் பார்த்தான். விழாவிற்கு வந்திருந்த பெண்களோடும், சக ஆசிரியைகளோடும் கலந்து போயிருந்த அவள் இப்போதுதான் தனியாகத் தெரிந்தாள்.

''ஐயோ, நானா?'' என்று பின் வாங்கிக்கொண்டிருந்தாள் அவள். ''நல்லா பாடுவாங்களா?'' என்று தலைமையாசிரியர் கேட்டார்.

''பிரமாதமா பாடுறாங்க சார். நான் தினம் அவங்க வீட்டு வழியாதான் வர்றேன்'' என்றார் ஆரம்பித்தவர்.

''அப்பிடியெல்லாம் ஒண்ணும் இல்லிங்க சார்.''

''இல்ல சார், நீங்க கேட்டுப் பாருங்க.''

மற்றவர்கள் சிலரும் ''பாடுங்க, பாடுங்க டீச்சர்'' என்றனர்.

அவள், பாடலாமா என்று நினைத்தாள் போலும். முகத்தில் ஒரு நாணமும் இளஞ்சிரிப்பும் வந்தன. இவன் அசந்துபோய் விட்டான். இப்படியொரு ஒப்பனையா? நாணமும் சிரிப்புமே ஒரு ஒப்பனையா? ஒரு சாதாரண அழகுக்கு அவைகளால் இப்படியொரு தேவதை முகம் கொடுக்க முடியுமா?

அவள் ஒரு வழியாகத் துணிந்து மேடைக்கு வந்து பாட ஆரம்பித்தாள்.

மற்றவர்களுக்கு எப்படியோ - இவனுக்கு அங்கே மேடையில் - இசை, கவிதை, அவள் - மூன்றும் ஆவி கலந்த உறவில், பொங்கித் தளும்பிக் கொண்டிருப்பதாகவே பட்டது. இவனும் நிரம்பி வழிந்தான்.

※ ※ ※

இவனது இளமைக் குறும்புகளில் ஒரு வைராக்கியமும் உண்டு. எந்தப் பெண்ணும் இவன் பார்த்ததற்குப் பிரதியாக மறுமுறையும் இவனைப் பார்க்காவிட்டால், இவன் மீண்டும் அவளைப் பார்க்க மாட்டான். தன் அழகுக்கு பங்கம் செய்ய எந்தப் பேரழகிக்கும் உரிமையில்லை.

ஆனால் அந்த வைராக்கியம் அன்றோடு போனது.

மறுநாளே, நேற்று அவளைப் பாடச்சொன்ன ஆசிரியருக்கு மட்டுமல்ல, தனக்கும் அவள் இருக்கும் தெருவோடுதான் வழி என்பதைத் தெரிந்துகொண்டு, வீட்டைத் தெரிந்துகொண்டு, போகும்போது வரும்போதெல்லாம் திரும்பத் திரும்ப வெறித்தான்.

சில சமயம் அவள் தென்பட்டாள். இவனைப் பார்க்கவும் செய்தாள். ஆனால் அந்தப் பார்வை எதிரே வருகிற சைக்கிளையோ, எருமையையோ பார்க்கிற மட்டத்தில்தான் இருந்தது. ஆனால் இவனுக்கு ஏனோ சுரணையே வரவில்லை. தன் அழகின் கௌரவம் குறித்த பழைய நினைப்பே இல்லாமல் திரும்பத் திரும்பப் பார்த்தான்.

ஒருவேளை இவன் உள் மனது, 'இவளுக்கு உன்னை அலட்சியும் செய்யும் அந்தஸ்து இருக்கிறது. அது நியாயமானது' என்று சொல்லியிருக்கலாம்.

அடிக்கடி அவள் பள்ளிக்குப் போனான் - நண்பனைப் பார்க்கும் சாக்கில்.

மலர்களை வீசுவதுபோல் பார்வைகளை வீசினான்.

ஆனால் எதிரொலி எப்போதும் சைக்கிளை, எருமையைப் பார்ப்பது போலத்தான் இருந்தது.

இப்படி ஒரு வருஷம் போனது.

அப்புறம் அவளுக்குக் கல்யாணமென்றார்கள்.

மாறுதல் என்றார்கள்.

வேறு ஊர் என்றார்கள்.

இவனது பார்வையிலிருந்து மறைந்தே போனாள்.

கடைசிவரை இவன் தூவிய மலர்களை அவள் அறியவே இல்லை. இது அநேக இடங்களில் பொது நிகழ்வுதான். தூவப்படும் மலர்களையும் தூவும் இதயங்களையும் காண முடியாத குருடர்களாகவே பலர் போய்ச் சேர்ந்துவிடுகின்றனர். பட்ட நஷ்டம் அவர்கள் பிரக்ஞைக்கே வராமல் போய் விடுகிறது. இப்படி எத்தனையோ ஆயிரம். இல்லை லட்சம்.

அவள் பட்ட நஷ்டத்திற்காக இவன்தான் அழுதான்.

ஆனால் தான் நஷ்டப்பட்டு விடாமல் அவளை, அவள் பாடிய இசைக் கவிதையை, பசுமை காயாமலே நெஞ்சில் வைத்திருந்தான்.

எங்காவது 'அலைபாயுதே கண்ணா' கேட்டால், ஏதோ வழி தடுமாறியவன் போலத் திடுக்கிட்டு, அந்த நாணமும் புன் சிரிப்பும் பூத்த முகத்தை நினைவுக்குக் கொணர்வான்.

அப்படிப்பட்ட அந்தப் பாடல் கூட, இன்று இவனைச் சமனப்படுத்தவில்லை. முடியவில்லை.

* * *

நாகஸ்வரம், மேளம், பட்டுப் புடவைகளின் சரசரப்பு, நாகரீக புடவைகளின் அமுத்தலான எதிர் சவால்கள், சிரிப்பு, மணமேடை அலங்காரம், தோரணம், பூ, சந்தனம், வரவேற்புக் குரல்கள்....

- எல்லாமே உடன்கட்டை ஏற்றும் ஒரு காரியத்தின் அங்கங்களாகவே இவனுக்குப்பட்டன. அந்த நாட்களில் 'சதி' களிலும்தான் தாரை தப்பட்டைகளும் சாம்பிராணி மணமும் இருந்திருக்கின்றன. 'இங்கே ஒரு கொலை நடக்கப் போகிறது' என்று உள்ளே மனம் காட்டுக் கத்தலாய்க் கத்தியது.

கொலை, பதினாறு வயதுகூட நிரம்பாத ஓர் இளம் பெண் வாழ்க்கையின் நெஞ்சில் கத்தி பாயப்போகிறது. மாங்கல்யம் என்ற பெயரால், அவள் கழுத்தில் தூக்கு மாட்டப் போகிறான் ஒரு நோயாளிப் போக்கிரி.

இவனது கண்ணில் படுகிறான் அந்த நோயாளிப் போக்கிரி, அவன் யாரிடமோ பல்லைக் காட்டிச் சிரிக்கிறான்.

அவனிடம் இன்னும் வீழ்ச்சியுறாமல் இருப்பது அந்தப் பல் ஒன்றுதான். அதுவும்கூட சிகரெட் புகையாலும் வெற்றிலைக் காவியாலும் கறுத்துக் கிடக்கிறது. என்னிடம் இருக்கிற பவிசே இதுதான் என்று காட்டுகிறான் போலிருக்கிறது.

விழிகள் அதன் குழியடியில் போய்க் கிடக்கின்றன. கன்ன எலும்புகள் மறைப்பது எதுவுமற்று முன்னால் வந்து விகாரமாய்த் துருத்திக்கொண்டு நிற்கின்றன. தாடை எலும்புகளின்மேல், தோல்மட்டும் இருக்கிறது. அகலம் அறவே இல்லாததால் கழுத்து ரொம்ப நீண்டு நாரையைப் போல் அங்குமிங்கும் திரும்புகிறது.

பட்டு வேஷ்டியும், முழுக்கைச் சட்டையும் போட்டிருக்கி றான். முழுக்கைச் சட்டை, கை என்னும் குச்சியின் மானத்தை மறைப்பதற்கு. மொத்தமாகத் தூக்கிப் போட்டாலும் இந்த நாற்பத்தைந்து வயது மனிதன், நாற்பது கிலோவுக்கு மேல் தேற மாட்டான். இவனுக்கு இரண்டாம் தாரம் இல்லாமல் சரிப்பட வில்லை.

அப்படியாகிலும், ஐயோ பாவம், இயற்கை இவனை இப்படி வஞ்சித்து விட்டது என்று சொல்லி அனுதாபப்படவாவது ஏதாவது இருக்கிறதா?

எல்லாம் இவனே சம்பாதித்தது. கேட்டுக் கேட்டு வாங்கி சம்பாதித்து. மமதையால், அகங்காரத்தால், என்னை ஒருவனும் கேட்கத் தேவையில்லை என்ற ஆணவத்தால் சம்பாதித்தது.

ஒரு நிகழ்ச்சி. அப்போது இவனும் கூட இருந்தான். தகப்பனாரின் மறைவுக்குப்பின் பாகப்பிரிவினை நடக்கிறது.

ஊர்ப் பெரியவர்கள் பத்துப்பேர் வந்து வீட்டு முற்றத்தில் உட்கார்ந்திருக்கிறார்கள்.

காரியம் ஒன்றும் பெரிதில்லை. சொத்துக்களை இரண்டாகப் பிரிக்க வேண்டும். அவ்வளவுதான். இவனுக்கு ஒரு பங்கு. சிறிய தாயாருக்கு ஒரு பங்கு.

சிறிய தாயாருக்கு நான்கு குழந்தைகள். சின்னஞ்சிறுசுகள். மூத்தவனுக்கே பத்து, பதினோரு வயதுதான். இவனது அம்மா இறந்ததும் நீண்ட நாள் பேசாமல் இருந்துவிட்டு, அப்புறம் ஒரு கட்டத்தில் எதனாலோ ஆசை வந்து இரண்டாவது கல்யாணம் செய்து கொண்டிருந்தார் இவன் அப்பா.

எல்லாமே சரியாகப் பிரிக்கப்பட்டன. கடைசியாக ஏதோ ஓர் இனம். அதை முழுமையாகத் தனக்கே தந்துவிட்டால் என்ன என்று கேட்டாள் சிறிய தாயார்.

பஞ்சாயத்தாரும் 'போகட்டும்' என்றுதான் நினைத்தார்கள். இவன் ஆண் பிள்ளை. சம்பாதிக்கக்கூடியவன். அவள் தலையில்லாத முண்டம். நாலு பிள்ளைகள் வேறு வைத்துக் கொண்டிருக்கிறாள்.

இவ்வளவிற்கும் அந்த இனத்தின் மூலம் இவனுக்கு அது இழப்பு என்றால், மிஞ்சிப் போனால் ஓர் இரண்டாயிரம் அல்லது மூவாயிரத்திற்குமேல் இருக்கப் போவதில்லை.

ஆனால் இவன் அதை சுத்தமாக மறுத்துவிட்டான். ''அதெல்லாம் பேசாதிங்க. கணக்குனா கணக்குதான். சட்டப்படி வெட்டி விடுங்க'' என்று சொல்லி விட்டான்.

இடையில் சிகரெட் புகைக்க வெளியே வந்தவனிடம் நெருங்கியவர் யாரோ, ''ஏம்பா, ஒன் சின்னம்மாவுக்கு அதக் கொடுத்தாதான் என்னா? எவ்வளவோ செலவழிக்கிறே. அந்த ரெண்டாயிரத்த வச்சு மட்டும் என்னா செஞ்சுடப்போற?'' என்று சொன்னதற்கு, இவன் சத்தமாக, உள்ளே இருக்கும் மற்றவர் களுக்குக் கேட்டாலும் பரவாயில்லை என்கிற தோரணையில் சொல்கிறான்.

''என்னமோ செய்றேன். அது என் இஷ்டம். வெள்ளச்சிக்குக் கூடக் குடுப்பேன். இல்ல, ஆறு மாச சிகரெட்டுக்கு வச்சுக்குவேன்.''

'வெள்ளச்சி' அங்கு கொஞ்சம் தாழ்த்தப்பட்ட குடியில் பிறந்து, சீரழிக்கப்பட்டு சீரழிந்து ஊரின் அந்தப் பகுதியில் மட்டரகமான பிரபல்யத்தில் இருந்தவள்.

ஆறுமாத சிகரெட்டிற்கு என்று சொன்னது கொஞ்சம் டாம்பீகப் பேச்சு. ஆறுமாத சாராயத்திற்கு என்று சொல்லி யிருந்தால் சரியான புள்ளிவிபரமாக இருந்திருக்கும்.

'வெள்ளச்சிகள்' உறவுக்கு இந்தக் கால அளவையை இரண்டு மூன்றால் வகுத்துக் கொள்ளலாம்.

இன்று இவனது முழுக்கைச் சட்டையின் மூலகாரணம் இந்த இரண்டும் தந்த தாதுபுஷ்டிதான்.

சூதாட்டமும் உண்டு. எது கூடாதோ அதிலெல்லாம் பூரணன்.

எல்லாமாகச் சேர்ந்து இருந்த சொத்தில் முக்காலையும், முதல் மனைவியையும் தின்றுவிட்டன.

இருக்கிற கால் சொத்தும் சூத்தை உடம்பும் இனி எத்தனை நாளோ! அதைப் பராமரிக்கப் புதிய மனைவியைக் கொண்டு வந்திருக்கிறான். அதற்கு முதல் மனைவியின் தங்கையையே தாரை வார்க்கிறார்கள் அவளது தாய் தகப்பன், அண்ணன்மார், அக்காள்மார், சுற்றம் சூழல் எல்லாம். யாருக்கும் நெஞ்சில் ஈரமில்லை. வெட்கமில்லை.

❊ ❊ ❊

ஒருவர் கைக்கடிகாரத்தைப் பார்த்துவிட்டு ''என்னா ஆரம்பிச்சுட வேண்டியதுதானே? எங்க ஐயரு?'' என்று கேட்டார்.

''வந்துடுவாரு'' என்று பதில் வந்தது.

''யாரு?''

''கிருஷ்ணமூர்த்தி ஐயர்.''

''ஐயோ, அவரு பெரிய இழுவையாச்சே!''

''வந்துடுவாரு வந்துடுவாரு''

''ஒங்களுக்கு வேற யாரும் கெடைக்கலியா?''

''இருக்காங்கதான். ஆனா நம்ம குடும்பத்துக்கு எப்பவும் இவர்தான் ராசி'' என்கிறார் பெண்ணின் தகப்பனார்.

இவனுக்கு மீண்டும் மண்டுகிறது. இந்த மனுஷனை என்ன செய்தால் தகும் என்று வருகிறது. மூட ஜனங்கள். ஒன்றைப் பிடித்துக்கொண்டால், அப்புறம் சாகும் வரைக்கும் மறுபரிசீல னையே கிடையாது. இந்த ராசிக்காரர் செய்து வைத்ததுதானே

முதல் மகளின் கல்யாணம். அந்த மகள் வாழ்ந்த வாழ்க்கையும் செத்த அவலமும் தெரியாதா? அப்புறமென்ன ராசி.

அதுசரி, இந்தப் புரோகிதர்கள் எதற்காக ஆதியில் உற்பத்தியானார்கள்? தொலைகிறது, எதற்காக வேண்டு மானாலும் வந்திருக்கட்டும். அப்படியே மெல்ல மெல்லப் பரிணாமப்பட்டு மனப்பொருத்தம், உடல் பொருத்தம் கணிக்கத் தெரிந்தவர்களாகவும் ஆகியிருக்கக்கூடாதா? அப்படி வளர்ந்து வந்திருந்தால், இவனது ஜாதகக் குறிப்பின் குறுக்கே இரண்டு கோடுபோட்டு, இவன் இனி ஒரு பெண்ணின் முகத்தை ஏறிட்டுப் பார்க்கக்கூட யோக்கியதை அற்றவன் என்று எழுதி வீசி இருப்பார்களே!

இப்போது இது என்ன தொழில், என்ன சாஸ்திரம் என்று நடந்து கொண்டிருக்கிறது? இவர்களில் யாரோ ஒருவர் 'பொருத்தம்' என்று சொல்லித்தானே இந்தக் கல்யாணம் நடக்கிறது.

இது ஒரு திருமணமா? இவனோடு ஓர் இளம் பெண் கூடிக் குடும்பம் நடத்தவோ! உறவு கொண்டு மலரவோ! அடச்சே! இவர்கள் இல்வாழ்க்கையை என்னவென்றுதான் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள்?

புரோகிதரும் வந்துவிட்டார்.

❊ ❊ ❊

வந்த புரோகிதர் அனுபவத்தின் காரணமாக, தன்னை மற்றவர்கள் காலதாமதத்திற்காக விசாரித்துவிடும் முன்னர், தானே முந்திக்கொண்டு ''என்னா, எல்லாம் ரெடிதானே. அப்புறம் ஆரம்பித்த பின்னாலே, அது மறந்து போயிடுத்து இது மறந்து போயிடுத்துன்னு ஓடிக்கொண்டிருக்காதேள்'' என்றார்.

''எல்லாம் ரெடிதான் சாமி.''

''மாப்பிள்ளை எங்கே?''

''தோ இருக்காரு.''

''நமஸ்காரம் சாமி.''

''பேஷ் பேஷ். மூத்தா சீத்தா, லெக்ஷ்மி மாதிரி இருந்து போய்ச் சேந்துட்டா. இவளும் அப்படித்தான் இருப்பா. அவ தங்கைதான். அவளை வச்சுண்ட மாதிரியே இவளையும் வச்சுக்க.''

மாப்பிள்ளைக்காரன் பல்லை இளித்தான்.

இவன் பல்லைக் கடித்தான். எதற்காக இவர் போய் அவனது சொரிபிடித்த முதுகைச் சொரிகிறார்? ஒருவனைப் பற்றி ஒன்றும் தெரியாமலே எதற்காக இப்படி அசட்டுத்தனமான பாராட்டுகள்?

''துளசி!''

திரும்பிப் பார்த்தபோது சுந்தரம் இவனைக் கையழைத்தான்.

போனதும் மெதுவான குரலில் சொன்னான், ''வாயேன், கடை வீதி வரையில் போயி, ஒரு காப்பி குடிச்சுட்டு வருவோம்.''

அதுவும் சரிதானென்றுபட்டது. போனால் கொஞ்சம் இறுக்கம் தளர்ந்த மாதிரி இருக்கும். இங்கே இருக்க இருக்க எரிச்சல்தான் அதிகமாகப் போகிறது.

இவர்கள் வாசலுக்கு வந்தபோது, சுப்புராம் மாமா சைக்கிள் ரிக்ஷாவில் வந்து இறங்கினார்.

போச்சு. வேதாளம் மீண்டும் முருங்கைமரம் ஏறிக்கொள்ளும் சாத்தியம். இந்த ஆள்மேல் கக்குவதற்கு இவனுக்கு ஓர் எரிமலையே இருந்தது. இந்தக் கழிசடை கல்யாண காரியத்திற்கு விதை தூவி, ஜாக்கிரதையாக உடனிருந்து நீரூற்றி, பாதுகாத்து, களை பறித்து பராமரித்துப் பூத்துக் குலுங்க வைத்தது இந்தப் பேயன்தான்.

இந்தப் பெருமாள் ராஜுவின் மனைவி செத்துக்கிடக்கிறாள். ஏழாவது பிரசவத்தில் போயிருக்கிறாள். டாக்டர்கள், இவள் உடம்புக்கு சத்தூட்டம் செய்ய வேண்டியது மிகமிக அவசியம் என்று எச்சரித்திருந்தும், இவன் ஒரு ஹார்லிக்ஸ் கூட வாங்கித்தர வில்லை என்று சொன்னார்கள். இவன்தான் பொழுது போனால் சாராயத்திற்குக் கடன் தர எவன் கிடைப்பான் என்று அலைந் திருக்கிறானே. இன்னும் பாடைகூட கட்டி முடிக்கவில்லை.

இந்த நிலையில் இந்த சுப்புராம் மாமா வாய் தடுமாறாமல் சொல்கிறார், ''பாவங்க, இவனப் பாக்கவே பரிதாபமா இருக்கு. இந்த நாலு பிள்ளைங்களையும் வச்சுக்கிட்டு, என்னா செய்யப் போறான். சீக்கிரம் ஒரு ஏற்பாடு செய்துடணும்.''

என்ன மனிதாபிமானம்? அந்தப் பிள்ளைகளை எங்காவது ஹாஸ்டலில் சேர்த்துவிட்டு, அப்பனை எங்காவது பசு பாதுகாப்பு கோசாலா மாட்டுக் கூடத்தில் கொண்டு போட்டுவிட வேண்டியதுதானே. இவர்களுக்கு தன் சதையை அரிந்து கொடுக்க ஒரு பெண்தானா கிடைத்தாள்? இவனுக்குத் திடீரென்று, எப்போதாவது தன் மேலேயே வந்து விடுகிற பயம் வந்தது.

இவனுக்கு சமீபமாக அடிக்கடி ஒரு சந்தேகம். தனது இந்தக் கோபங்களுக்குக் காரணம் தனக்குள்ளே இருக்கிற ஏதாவது நோயாக இருக்குமோ? இல்லாது போனால், இந்த உலகத்தின்மீது இந்த உலகத்திற்கே இல்லாத அக்கறை தனக்கு மட்டும் ஏன் வருகிறது?

இதோ இந்தக் கல்யாணத்தை ஊரே அங்கீகரித்துவிட்டது. பெண்ணின் பெற்றோரே அங்கீகரித்துவிட்டார்கள். பெண்ணே ஒப்புக்கொண்டுவிட்டாள். பிரஸ்காரன் அங்கீகரித்துத்தான் அழைப்பிதழ் அச்சிட்டிருக்கிறான். பந்தல்காரன் அங்கீகரித்து விட்டுத்தான் நாயனம் வாசிக்கப்படுகிறது. அங்கீகரித்துக் கொண்டு தான் இத்தனை பேரும் வந்திருக்கிறார்கள். தான் மட்டும் ஒரு மூலையில் நின்று கொண்டிருப்பதில் என்ன அர்த்தம் இருக்கிறது?



இப்படித்தான் எங்கும் நடக்கிறது. சாலையில் சாரிசாரியாக மக்கள் போய்க்கொண்டிருக்கிறார்கள். ஒரு தடியன் ஒரு முதியவனைக் கீழே தரையில் இழுத்துப்போட்டு தலையிலேயே மிதிக்கிறான். இவன் தடுக்கப்போக, அவன் ''போடா நீ யாருடா, எங்க அப்பன நான் என்னமும் செய்வேன்'' என்கிறான்.

அவன் யாராயிருந்தாலும், ஒரு முதியவன் இந்த விதம் கொடுமைக்குள்ளாக்கப்பட நியாயமில்லையென்று மீண்டும் தடுக்க, அவன் இவனைத் தாக்க, இவன் பதிலுக்குத் தாக்க இருவரும் நடுரோட்டில் கட்டிப் புரளுகிறார்கள். வேடிக்கை பார்க்க சேர்ந்துவிட்டது ஐநூறு பேர் கூட்டம். தெருச்சண்டை கண் குளிர்ச்சி. அது அழகாக வேடிக்கை மட்டுமே பார்க்கிறது.

ஒரு வழியாக சண்டை முடிந்ததும் கலைகிற கூட்டத்தில் ஒரு குரல்கூட கேட்கிறது, ''அதான், அவன் அப்பன அவன் அடிக்கிறான், கொல்றான், இவருக்கு என்னா வந்தது?''

அதுதானே, பெற்ற பிள்ளைக்கு இல்லாத கருணை, அந்த ஐநூறு பேருக்கு இல்லாத மனிதாபிமானம், தனது மூளையில் மட்டும் என்ன வெங்காயத்திற்காக படபடத்தது?

பஸ்ஸில் பெண்கள் பகுதியில் இருவர் இருக்கையில் ஒரு பெண்மணி மட்டும் இருக்கிறாள். வயது முப்பது இருக்கும். நின்றுகொண்டிருக்கும் ஆண்களில் இருபத்தைந்து வயதுள்ள வாலிபனும் ஒருவன். அவன் அருகில் இருப்பதால், இவள்

பெருந்தன்மையாக அவனைப் பார்த்து ''பரவாயில்லிங்க தம்பி, உக்காருங்க'' என்று தன் இருக்கையில் இடம் கொடுக்கிறாள்.

அந்தப் பன்றி, தான் உட்கார்ந்ததும் ''நீயும் உட்காருடா'' என்று தன் நண்பன் ஒருவனை அழைத்து, இருவர் சீட்டில் மூவராக உட்கார்ந்து அவளை நெருக்குகிறார்கள். அவள் நன்றாகத் திரும்பி இவனை ஒரு பார்வை பார்க்கிறாள். ஓ, இனி அவள் இந்த ஜென்மத்தில் ஒரு நாயைக்கூட, அது ஆண் நாயாக இருந்தால், இந்தவிதம் உபசரிக்கப் போவதில்லை.

இவன் பின்னால் நின்று இவ்வளவையும் பார்த்துக் கொண்டிருக்கிறான். இவனுக்கு முன்னே போய், அவர்கள் இருவர் பிடரியிலும் மிதி மிதியென்று மிதிக்க வேண்டும் போலிருக்கிறது. மிதிக்க முடியுமா? அவனும் அவன் தோழர்களுமாகச் சேர்ந்து இவனை மிதித்து விடுவார்கள். அந்த பஸ்ஸில் நூறுபேர் இருந்தார்கள். வேறு யார் கண்ணிலும் இந்தக் காட்சி பட்டதாகவே தெரியவில்லை. இதெல்லாம் இவன் கண்ணில் மட்டுமே ஏப்படிப் பட்டுத் தொலைக்கிறது.

இன்னொரு நாள், அதேமாதிரி பஸ்ஸில், புதிதாக ஏறிய ஒரு பெண் கைக் குழந்தையோடு நிற்கிறாளே என்று, உட்கார்ந்திருக்கும் தனது மகளிடம் இடம் கொடுக்கும்படி சொல்கிறாள் அம்மா. அந்தப் பெண்ணும் எழுந்துகொண்டு இடம் கொடுக்கிறாள். ஆனால் அந்தக் கைக்குழந்தைக்காரி அதற்கு எப்படி நன்றி காட்டுகிறாள்? இரண்டு ஸ்டாப்பிங் தாண்டி அவளது இருக்கையில் இருந்த மாது எழுந்தபோது, மீண்டும் உட்காரப்போன பழைய பெண்ணுக்கு சீட்டில் கை ஊன்றி மறித்துக்கொண்டு, தன்னோட வந்த ஒருத்தியை அழைக்கிறாள். அவளும் வந்து உட்காருகிறாள்.

அப்போது அந்தப் பெண்ணின் தாயார் கேட்கிறாள். ''ஏம்மா, நீ பிள்ளக்காரியாச்சேன்னுதானே, என் மகள எந்திரிச்சுகிட்டு எடம் கொடுக்கச் சொன்னேன். இப்ப நீ கையை மறிச்சுகிட்டு, ஒங்க ஆளக் கூப்புட்டுட்டியே!''

அதற்கு அந்தக் கழுதை குனிந்து கொண்டு தன் சாமார்த்தியத்திற்காகச் சிரிக்கிறாளே, ஒரு 'பெருமை'ச் சிரிப்பு! இவனுக்கு அவளிடம் போய், வலது இடதாக நாலு அறை இழுக்க வேண்டும் என்று கை துடிக்கிறது. முடியுமா? அப்புறம் எதற்கு இந்த ஆகாத அலிக் கோபம்?

'இது சீக்குதான். நோய்கூறுதான்' என்று உள்ளேயே சொல்லிக்கொண்டான் இவன். இது இருக்கும்வரை தான் எங்கும் சம்பாதிக்கப்போவது பகைதான். நடக்கப்போவது தன்னை எரித்துக் கொள்வது மட்டும்தான்.

* * *

''என்ன ஒரு மாதிரியா இருக்கே?'' என்று கேட்டான் சுந்தரம்.

''ஒண்ணுமில்லியே.''

சுர்தரத்திற்கும் இந்தக் கல்யாணத்தில் கொஞ்சம் வருத்தம் இருப்பது தெரிந்தது. அவனும் கொஞ்சம் கவனித்திருக்கிறான். அவன் சொன்னான்: ''பொண்ணு வீட்டுல யாருக்குமே மொகத்தில களை இல்லே.''

''போகுது போ'' என்றான் இவன்.

''ஏன் அப்பிடிச் சொல்றே?''

''அதுதான் எல்லாம் முடிவாயிடுச்சு. இன்னம் கொஞ்ச நேரத்தில தாலி கட்டப்போறான். அப்புறம் எதுக்கு வருத்தமாம்?''

''இவங்களுக்கும் மொதல்ல இஷ்டமில்லதான் போல இருக்கு. சின்ன அண்ணன் வேண்டவே வேண்டாம்னுகூட தடுத்துப் பாத்திருக்கான். ஒரு பொண்ணக் கொடுத்துட்டு பட்ட அவமானமும் கஷ்டமும் போதாதானுகூட கேட்டிருக்கான். ஆனா இவன்தான் மெரட்டி காரியத்த சாதிச்சிருக்கான்.''

''என்னான்னு மெரட்டுனானாம்?''

''இல்லேனா நானும் இந்த நாலு பிள்ளைங்களும் விஷம் குடிச்சுட்டு செத்துப் போயிடுவோம்னு சொன்னானாம்.''

''செத்துட்டுப் போறான்'' என்றான் இவன் பட்டென்று.

அவன் இருந்து இனி யாருக்கு என்ன செய்யப் போகிறான். இன்னும் நான்கு சீக்காளிப் பிள்ளைகளை வேண்டுமானால் ஜனிக்கவைக்கலாம். அவ்வளவுதான்.

பெருமாள்ராஜுவின் நான்கு பிள்ளைகளும், ஏதோ ஒரு வகையில் நரம்புக் கோளாறால் பாதிக்கப்பட்டிருந்தார்கள். அது அவன் வாங்கி வைத்திருந்த பெண் வியாதியின் விளைச்சல் என்பது இவன் எண்ணம்.

இவன் 'செத்துட்டுப் போறான்' என்று சொன்னதும் சுந்தரம் முகம் திருப்பி இவனைக் கொஞ்சம் வியப்போடு பார்த்துவிட்டு,

அப்புறம் புன்சிரிப்போடு ''ஒனக்கேன் இவ்வளவு கோபம் வருது?'' என்றான்.

அதுதானே, தனக்கேன் கோபம் வருகிறது?

இவன் பேசாமல் நடந்தான்.

கடையில் மேஜைமுன் உட்கார்ந்தபோது சுந்தரம் விசாரித்தான், ''வேலையெல்லாம் எப்படி இருக்கு?''

''ம்... என்னமோ இருக்கு?''

''ஆபீஸர் ஹார்ஷா இருக்கறதா சொன்னியே?''

''ரெண்டு மாசத்துக்கு முந்தி சொன்னேன் இல்லியா?''

''ஆமா!''

''இப்ப அந்த ஆளு இல்ல.''

''புது ஆபீஸர் எப்படியிருக்காரு?''

''ம்... என்னமோ இருக்காரு.''

காப்பி குடித்து முடிந்ததும் சுந்தரம் ''ஏதோ மிஸ்டேக் நடந்து போச்சுபோல இருக்கே'' என்றான்.

''என்னா?''

''இந்தக் கடையிலயும் காப்பி நல்லா இருக்கே.''

காப்பி நன்றாகத்தான் இருந்தது. இவன் புறப்பட்டபோது நினைத்தபடி கொஞ்சம் இறுக்கம் தளரவும் செய்திருந்தது.

இவர்கள் திரும்பி வந்து கொண்டிருந்தபோது எதிரே மாப்பிள்ளை, பிள்ளையார் கோயிலுக்கு வந்து கொண்டிருந்தான். இது ஒரு கட்டாய ஊர்வலம் இல்லையாதலால், கொஞ்சம் பேர்தான் அவன் பின்னால் வந்து கொண்டிருந்தார்கள். ஆனாலும் இவர்கள் எதிர்ப்பட்டு விட்டதால் தவிர்க்க முடியாமல் அதோடு சேர்ந்துகொள்ள வேண்டியதாகிவிட்டது.

பிள்ளையார் கோயிலில் சாதாரண மாப்பிள்ளைகளுக்கு இல்லாத ஒரு சிறப்புச் சடங்கு பெருமாள் ராஜுவுக்கு.

ஒரு சின்ன வாழைக்கன்றிற்கு அவன் தாலி கட்டி, பின் அதை வெட்டிவிட்டுப் புறப்படவேண்டும்.

நம்மவர்களுக்கு இரட்டைப் படை எண்கள் மீது ஒரு பயம். அது வளராது அல்லது விளங்காது. இப்போது இவன் இரண்டாம் கல்யாணம் செய்துகொள்வதால் இந்த இரட்டையின் காரணமாக விளங்காது போய்விடலாம் அல்லவா? இதனால் விதியின் கண்களில் மண்ணைத் தூவ ஒரு சிறு ஏற்பாடு:

இங்கே கோயிலில் ஒரு வாழைக் கன்றை மனைவி என்று சொல்லி தாலி கட்டி, பின் வெட்டிப் போட்டு விட்டால், வீட்டில் போய் கட்டப் போகிறவள் ஆட்டமேட்டிக்காக மூன்றாந்தாரம் ஆகி விடுகிறாள். எப்படி? நம்மவர்கள் மூளை பலத்தில் அப்படி - யாருக்கும் சளைத்தவர்கள் இல்லைதான்.

ஆனால் அந்தச் சடங்கின்போது பெருமாள்ராஜு வெளிப் படுத்திய உடல் பலம்தான் மீண்டும் இவனை உலுக்க ஆரம்பித்து விட்டது.

பெருமாள்ராஜு வாழைக் கன்றிற்குத் தாலி கட்டும்போதே அவன் கை லேசாக நடுங்குவதை இவனால் பார்க்க முடிந்தது.

பிறகு அதை வெட்டுவதற்காக இவன் அரிவாளுக்கு வலது கையை நீட்டியபோது அதைக் கொடுக்க வந்தவர் அதை மறுத்து இடது கையில் கொடுத்தார். இடது கையில்தான் வெட்ட வேண்டுமாம். இந்தச் சடங்கின் ஆரம்ப காலத்தில் எவனாவது அசலான மாப்பிள்ளை, இதை நான் வலது கையில் வேறு வெட்ட வேண்டுமாக்கும் என்று இடது கையில் வெட்டியிருக்கலாம்.

பெருமாள்ராஜு அரிவாளைக் கையில் பிடித்ததும் அந்தக் கை நடுங்குவது துலக்கமாகவே தெரிந்தது.

அவன் வெட்டினான். ஆனால் நான்கு அங்குல விட்டமே உள்ள அந்தக் கன்று துண்டாகி விழாமல், முக்காலாய் வெட்டுப் பட்டு மீதி சரிந்து தொங்கியது.

'அடப்பாவி' என்று சொல்ல வந்த, அரிவாள் கொடுத்த ஆசாமி ''அடப்...'' என்பதோடு நிறுத்திக் கொண்டு ''சரி சரி, பொறப்புடு திரும்பிப்பாக்காம போ'' என்றார்.

இவன் பழையபடி உள்ளுக்குள் கத்தினான். 'இந்த பலசாலி தான் புதிய உறவுக்குள் நுழைகிறான். இவன்தான் ஒரு பெண்ணு க்கு இன்னும் இருபத்தைந்து முப்பது வருஷங்களுக்குத் தாம்பத்திய சுகம் அளிக்கப் போகிறான். நித்தம் நித்தம் இவன் அவளை விரக்தியின் எல்லையில் வைத்துக் கொல்லப் போகிறான். அவ்வளவுதான்.'

ஆனால் இந்தப் பயங்கரமான பலவீனத்திற்காகக் கொஞ்சம் கூட வெட்கமோ நாணமோ இல்லாது பெருமாள்ராஜு தன் நெட்டைக் கழுத்தையும் மார்புக் கூட்டையும் உயர்த்திக்கொண்டு 'கம்பீரமாக' முன் நடக்கிறான்.

அவன் எப்போதுமே அப்படித் தான். பொய்க் கௌரவம், முறைப்பு, செயற்கை தலைதூக்கு, இங்கிதமே இல்லாத பெரிய சத்தம் - இவைதான் அவன்.

அன்று கருமாதி வீட்டிலே எப்படி நடந்து கொண்டான்?

கருமாதி என்பது என்ன? இறந்து போனவரைப் பற்றிய ஒரு நினைவு நாள். அதனால் சாதாரணமாக ஒரு துக்க நாள். அதனால் தான் பெண்கள்கூட முன் இரவில் 'வைத்து' அழுகிறார்கள். ஆனால் நடைமுறையில் அது ஒரு களிநாளாகப் போய்விட்டது. அன்று எல்லோரும் கூடவும், அசைவம் செய்யவும், சீட்டாடவும் என்றாகிவிட்டது.

பிறத்தியாரைப் பொறுத்து எப்படியோ போகிறார்கள். ஆனால் மனைவியை இழந்துவிட்ட இவனுமா அவள் இறந்த பதினாறாம் நாளில், அவர்களோடு சேர்ந்து சந்தோஷம் கொண்டாடுவான்! இறந்துபோனவளுக்கும் வந்திருந்தவர்களுக்கும் அவன் அளித்த ஒரே மரியாதை அன்று கொஞ்சம் மட்டாகப் போட்டிருந்ததுதான்.

இந்த மட்டான குடி, ஒரு கட்டம்வரை ஒரு குஷி போலும். வருகிறவர்களைக் கல்யாண வீட்டில் வரவேற்பதுபோல வரவேற்கிறான்.

'வா தம்பி.'

'வா மச்சான். வந்துட்டியா? எங்க உருமா கட்ற செலவுக்கு பயந்துகிட்டு, டேக்கா கொடுத்துடுறியோனு பாத்தேன்.'

'என்னா மாமா, வந்திருக்கறது, வெள்ளக் குதிரையிலயா, கறுப்புக் குதிரையிலயா?'

- இப்படி இப்படி.

நடுவில் சுப்புராம் மாமாவிடம் போய்ச் சொல்லுகிறான், ''இன்னிக்கி விஷயத்த பேசி முடிச்சுடுங்க. ரெண்டுல ஒண்ணு. நான் செஞ்சதுக்கெல்லாம் நன்றி இருந்தா குடுக்குறானுக. இல்லேனா போறானுக.''

இது கொழுந்தியாளையே மறுதாரம் கேட்கிற லட்சணம். மாமன் மாமி மைத்துனர்களுக்கு கொடுக்கிற மரியாதை 'றானுக'.

அன்று காலை ஒன்பது மணி அளவில் அன்றைக்கு 'ஆக்கிப் போடுகிற' ம்ாமன் மைத்துனர் வகையறாவுக்குள், வெட்டுவதற்கு ஆடு வாங்குவது பற்றிய பிரச்சனை வரும்போது, ஒருவர்

யோசனை சொன்னார். ''அட ஏங்க, இன்னம் போயி ஆட்டப் பாத்து, வெல பேசிக் கொண்ணாந்து வெட்டி அறுத்து நசநசன்னு பண்ணிக்கிட்டு. பேசாம அந்த ரூவாய்க்கி கடைக்கிப் போயி நீட்டா பத்து கிலோ மட்டன் வாங்கிக்கிட்டு வந்துடலாம்'' என்றார்.

இதைப்போய் ஒருவர் இவனிடம் சொல்லி, அப்படிச் செய்து விடலாமா என்று கேட்டதற்கு, இவர்கள் செலவுக்குப் பயந்து கொண்டு அல்லவா இப்படிச் செய்ய நினைக்கிறார்கள் என்று இவனாக எடுத்துக்கொண்டு கொடுக்கிறான் ஒரு அநாகரிகமான சத்தம் - ''ஆடு வெட்டறதுனா வெட்டச் சொல்லு. இல்ல வக்கு இல்லேனா சும்மா இருக்கச் சொல்லு. நான் என் செலவுல வெட்றேன்!''

* * *

பெருமாள்ராஜு போட்ட அநாகரிகமான சத்தம், எல்லார் காதுகளிலும்தான் விழுந்தது. அதுதானே அவனது நோக்கமும். ஆனால் ஒருவரும் பேசவில்லை. எல்லாரும் முகத்தைச் சுருக்கிக் கொண்டு பேசாமல் இருந்தார்கள்.

இது இவனுக்கு ஆச்சரியம். அவன் மற்றவர்களைக் கேவலப் படுத்த எப்போதடா சந்தர்ப்பம் வாய்க்குமென்று காத்திருந்து ஒவ்வொரு சிறு சந்தர்ப்பத்தையும் பிடித்துக் கொண்டு அதைச் செய்து விடும்போது மற்றவர்கள் யாரும் 'போடா' என்று ஏன் புறப்பட்டுப் போய்விடமாட்டேன் என்கிறார்கள்! என்ன தயக்கம்?

அது சரி, இவ்வளவு வாதைப்படுகிறதானே, 'இந்த லட்சணமான கல்யாணத்திற்கு வராமல் இல்லையே. அந்தக் கருமாதிக்கும் போகாமல் இல்லையே. இவனைக் கண்டதும் ஒரு புன்னகையாவது செய்யாமல் இருக்க முடியவில்லையே. உறவு முறை என்கிற கட்டும் சமயங்களில் இறுக்கத்தான் செய்கிறது. எல்லாக் கட்டுகளுமே கட்டுதானோ?

மீண்டும் கல்யாண வீடு. காப்பிக் கடை தந்த இதமெல்லாம் பிள்ளையார் கோயிலோடு போயிருக்க, பழையபடி அனல் காற்றிற்கு முகம் கொடுக்கிற தவிப்பு இவனுக்கு.

இடையில் ஒரு தனி ஆத்திரம், எல்லாரும் தன்னைப் போடாவென்று கைவிட்டுவிட்டதைப் போன்று! இப்போது எல்லார் முகத்திலுமே கல்யாண வீட்டுக் களை ஏறியிருந்தது. ஒரு

கோஷ்டிகான மகிழ்ச்சியில் கலந்துவிட்டார்கள். நாதஸ்வரக்காரர் சினிமாப் பாட்டிற்குப் போய்விட்டிருந்தார்.

ஹோமப்புகை மணவறைப் பந்தலை முழுக்க ஆக்கிரமித்து இருந்தது. மணமகனுக்கான சடங்குகள் நடந்து கொண்டிருந்தன.

இவன் பெண்ணின் தகப்பனார் முகத்தைப் பார்த்தான். அவரும்கூட சிரித்துக்கொண்டிருந்தார். அது சரி, இந்த விவகாரத் தைச் சிரித்து மழுப்பவேண்டிய முதன் ஆளே இவர்தான். இந்த விவகாரத்தின் மூலகர்த்தாவே இவர்தான் என்று கருதினாலும் சரிதான்.

இவர் வாழ்க்கைமேல் பிரியம் உள்ளவர். பிரியம் என்றால் கொள்ளைப் பிரியம். மண்ணின்மேல் வாய்த்திருக்கும் சகல சுகபோகங்களையும் அனுபவித்துவிட வேண்டும். அறுசுவை உணவு, மனைவி, காதலி, சாராயம், சினிமா, சிநேகிதர்கள் எல்லாம் முழுக்க முழுக்க வேண்டும். ஆனால் ஒரு முரண்பாடு. ஒரு மனிதன் இத்தனைக்கும் நேரம் ஒதுக்கும்போது இவைகளுக்குத் தேவையான பணம் சம்பாதிக்க நேரம் கிடைப்பதில்லை.

சாப்பிடு, குடி, பாடு - போதும் என்கிற எப்பிகூரியன் தத்துவத்தில், இவர் உமர்கயாமிற்குக்கூட சளைத்தவர் இல்லை தான். ஆனால் உமர்கயாமிற்கு வாழ்க்கைச் செலவு முழுவதையும் ஏற்றுக்கொள்ள, ஒரு மாகாணத்தையே ஆள்கிற நண்பன் கிடைத்தான். இவருக்க அப்படி ஒருவனும் கிடைக்காமல் போய்விட்டான். அதுதான் துயரமாகப் போய்விட்டது.

இவர் மிகக் குறைந்த நேரத்தில், மிக அதிகமாக சம்பாதிக்க இரண்டு வழிகளைத் தேர்ந்தெடுத்துக் கொண்டார். ஒன்று சீட்டாட்டம், இன்னொன்று குதிரை. சமீபத்தில் லாட்டரி சீட்டுகள். ஆனால் எல்லாமே இவருக்கு அதிருஷ்டம் கட்டை என்பதையே சொல்லிவிட்டன. முடிவு: வறுமை; பொல்லாத வறுமை. இந்தக் கஷ்டத்தில்தான் மருமகனான இந்த பெருமாள்ராஜுவிடம் சில சமயம் கைநீட்டி எதையாவது வாங்குவது. இதை வைத்துத்தான் அவன் 'நன்றி இருந்தா பொண்ணு குடுக்குறானுக இல்லாட்டிப் போறானுக' என்றது.

அப்புறம் இவன் பெண்ணின் தாயார் முகத்தைப் பார்க்கிறான். பாவம், இது ஒரு பாவப்பட்ட ஆத்மா. இந்தம்மா படாத கஷ்டமில்லை. காணாத ஏமாற்றமில்லை. வேறு வழி இருந்ததோ இல்லையோ, பொறுமையையே ஒரே பாதையாகக்

கொண்டு ஏதோ பிள்ளைகளைக் காப்பாற்றி வந்த உயிர். இப்போது முகம் நிர்ச்சலனமாக இருந்தது. ஏன் இந்த நிர்ச்சலனம். 'இதென்ன என் வாழ்க்கையின் முதல் சோகமா, இரண்டாவது சோகமா அழுது புலம்ப' என்று கேட்கிறதா அது? இல்லை; இருக்க முடியாது. தன் வாழ்க்கையில் எவ்வளவு வந்திருந்தால் தான் என்ன. அதற்காக ஒரு மகளின் துயரத்தை எப்படி அசட்டை செய்துவிட முடியும்? செரித்துக்கொள்ள முடியும் ஒரு தாயால்? இல்லை; இவள் உள்ளே குமுறிக் கொண்டிருக்க வேண்டும். ஒரு முகூர்த்த நேரத்தில் தான் ஏதாவது புலம்பி வைத்து விட வேண்டாமென்று அடக்கிக் கொண்டிருக்க வேண்டும்.

ஆனால் இந்தக் கல்யாண விஷயமாக இந்தம்மாவின் அபிப்பிராயத்தைப் பற்றியும் சொன்னார்கள். சின்ன மகன், கூடவே கூடாதென்று சொன்னதற்கு இவள் சொன்னாளாம், ''சரி, இவள இங்கக் குடுக்க வேணாம். ஆனா அப்புறம் எங்கக் குடுக்கப் போறிங்க? வேற எடத்துல கொடுக்கணும்னா கொறஞ்சது அஞ்சு பவுனாச்சும் வேணுமே. எந்த அண்ணன் தம்பி வச்சிருக்கிங்க, யாரோட பொஞ்சாதி கழட்டிக் குடுக்கப் போறா - இந்தா நாத்துனா நல்ல எடத்துக்குப் போய்ச் சேரட்டும்னு?''

இவன், அந்த நாத்தனாரின் அண்ணிமார் முகங்களைப் பார்க்கிறான். கழுத்தைப் பார்க்கிறான். அந்த 'ஐந்து பவுன்' நகைகள் அங்குதான் இருக்கின்றன. அது அவர்கள் வீட்டிலிருந்து கொண்டுவந்தது. எவளுக்கோ 'நல்லா இரு போ' என்று கொடுத்துவிட முடியுமா என்ன? நல்ல நியாயமாக இருக்கிறதே!

பெண்ணின் சின்ன அண்ணன் முகத்தைப் பார்க்கிறான். இவன் முகத்தில் மட்டும்தான் இன்னும் சகஜநிலை திரும்ப வில்லை. இன்னும் கோபம் ஆறவில்லையா அல்லது அம்மா வின் கேள்வியால் நொறுங்கிப் போன முகம் இன்னும் கூடவில்லையா?

இன்னொரு அக்காள் முகம் பார்க்கிறான். இவளது கணவர் தான் இவனது நெருங்கிய உறவு. இந்த இருவரிடம்தான் இவன் நேரடியாக விஷயத்தைச் சொல்லிப் பார்த்தது. இதை எப்படி இவர்களால் அங்கீகரிக்க முடிகிறது என்று கேட்டது. இவர் தனக்குள்ள செல்வாக்கை உபயோகித்து ஏன் தடுக்கக் கூடாது என்று கேட்டது.

அதற்கு இந்த அக்காள் வாயையே திறக்கவில்லை. அவளது கணவரோ மெல்ல ஒதுங்கினார். ''அவங்க வீட்லயே எல்லாரும்

ஒத்துக்கிட்டப்ப நாம என்னா செய்ய முடியும்? அது இல்லாம, நாம ஏதாச்சும் சொல்லி அவன் காதுக்குப் போனா அவன் பாட்டுக்கு ரோட்டுல நின்னு கத்துவான். இந்த ஆளுக்கு என்னா போச்சுனு கேப்பான்'' என்று முனகினார்.

ஆகக்கடைசியாக இவள் விஷயத்தில் யாரும் குறைந்த பட்சம் அவன் வாயில் படுகிற நஷ்டத்தைக்கூட ஏற்கத் தயாரில்லை.

சின்ன கெட்டிமேளம் கேட்டது. மணமகனுக்குச் செய்கிற ஏதோ சடங்கு பூர்த்தியாகியிருந்தது.

அப்புறம் ''பொண்ணக் கூட்டியாங்க'' என்ற, எங்கும் வழக்கமாகக் கேட்கிற குரல்.

சிறிது நேரத்தில் பெண்ணை அழைத்து வந்தார்கள். இதில் வேடிக்கை என்னவென்றால் இவ்வளவு ஆதங்கப்படுகிற இவன் இதற்குமுன் அந்தப் பெண்ணைப் பார்த்தது கிடையாது.

பெண்ணைப் பார்த்ததும் இவன் நெஞ்சு 'திக்'கென்று நடுக்குற்றது. உள்ளே மீண்டுமொரு 'அடப்பாவிகளா' எழுந்து அதிர்ந்தது.

இதுவரை இவன் காட்டிய அனுதாபம் எல்லாம் எல்லாப் பெண்களுக்குமாக - அவள் யாராக இருந்தாலும், பாதிக்கப்படப் போகிற ஒரு ஜீவன் என்பதற்காக.

ஆனால் இப்போது மேலும் பீறிட்டுக் கிளம்பும் ஆத்திரம் இவளுக்காக - கண் முன்னால் காண்கிற இவளுக்காக.

ஆண்களிடம் போலவே பெண்களிடமும் இவனுக்கு தராதர வரிசை உண்டு.

ஒருமுறை காலை ஏழு மணி சுமாருக்கு இவன் ஒரு நெட்டைமாதை அவள் வீட்டு வாசலில் வைத்துப் பார்த்தான். அவளது கையில் கொஞ்சம் பூச்சரம். எதிரே பூக்காரன். விலை அதிகம் என்கிற ஆதங்கமோ அல்லது அளவு குறைகிறது என்கிற குறையோ - அவள் அந்தப் பூக்காரனைப் பார்க்கிறாள் ஒரு பார்வை! ஐயோ! ஒரு பூச்சரத்தைக் கையில் வைத்துக் கொண்டு எப்படி அவளால் அந்தப் பார்வை பார்க்க முடிகிறது. முகத்தின் வழி வந்த மனக்கோணலை அந்தப் பூவின் வாசமும் ஸ்பரிசமும் வடிவமும் கொஞ்சமும் நிமிர்த்தாது என்றால், இவள் எதற்காகத்தான் பூ வாங்குகிறாள்? பூச்சூடலும் ஒரு சடங்குதானா இவளுக்கு?

புருவம் இடுக்கி, மூக்கைச் சுளித்து, விழிகளைப் பக்கவாட்டில் ஒட்டி, 'நேற்று அந்தக் குழந்தையின் ரத்தம்

பூராவையும், எனக்குக் கொஞ்சம்கூடத் தராமல் குடித்து விட்டுப் போனவன் நீதானே?' என்று கேட்கிற மாதிரி நின்ற அவளைப் போல், ஒரு அரைக்கால்வாசியாவது இந்தப் பெண்ணின் முகச்சாயலும் இருந்திருந்தால், இவன் நெஞ்சு கொஞ்சமாவது அமைதிப்பட்டிருக்கும் - போகட்டும் இரண்டு அசுரர்கள் மோதிக் கொள்ளப் போவதிலே நமக்கு அதிக அக்கறை வேண்டாமென்று. குறைந்தபட்சம் அவள் தனது தகுதியால் இந்தப் பெருமாள்ராஜு வின் கடந்த காலத்திற்கும் நிகழ்காலத்திற்கும் ஒரு விசாரணை வைத்துவிடுவாள் என்று.

ஆனால் வந்தவளோ ஒரு செம்மறிக் குட்டி. மலங்க மலங்க விழித்த அந்த விழிகள் அப்படித்தான் சொல்லின. அதனால்தான் போலும் அந்த மறியை யாகசாலைக்கு இழுத்து வந்தார்கள். நிஜ மறிகளுக்கு சில நேரம் ஏழு எட்டு வயதில் 'தாய்கள்' இருப்பார்கள். அவர்கள் என் பொன்னியைத் தரமாட்டேன். மேரியை விட மாட்டேன் என்று கழுத்தைக் கட்டிக்கொண்டு அழுவார்கள். இந்த மறிக்கு அந்த பாக்கியமும் இல்லை. தாயும் சுற்றம் சூழலுமே பூசாரி முன் இழுத்து வந்தன.

அவளுக்கு வயது பதினாறு என்று சொன்னார்கள். ஆனால் உலக அறிவில் இன்னும் நான்கு வயது குறைவாக இருக்க வேண்டும். வந்திருக்கிற இடத்தை அவள் உணர்ந்து கொண்ட தாகவே தெரியவில்லை. மற்றவர்கள் சொல்கிறபடியெல்லாம் செய்துவிட்டு, பிறகு சரிதானா என்று கேட்பதுபோல் 'அந்த விழிகளால்' அவர்களைப் பார்க்கிறாள்.

இவன் கல்யாணக் கூட்டத்தைப் பார்த்தான். 'ஆசிய ஜோதி' வரிகள் ஞாபகத்திற்கு வந்தன.

**'முடமான இளமறியை தோளில் சுமந்து**
**மூவுலகும் கருணையினால் வென்ற வீரன்.'**

அவன் புத்தன். இதோ சற்று நேரத்தில் இந்த இளமறியின் முதுகில் ஒரு நோயாளிப் போக்கிரியையும் நான்கு நோயாளிக் குழந்தைகளையும் உட்கார வைக்கப் போகிறார்களே, இவர்கள் யார்?

புரோகிதர் முகத்தைப் பார்த்தான். முகத்தில் எந்தச் சலனமும் இல்லாமல், எந்திரமாய் மந்திரச் சொற்கள் வந்துகொண்டு இருந்தன. அதுசரி, பூவே ஒரு சடங்குப் பொருளாகப் போய்விட்ட ஒரு கால கட்டத்தில், சடங்குகள் செய்வதை பிழைப்புத்

தொழிலாகக் கொண்டுவிட்ட இவரிடத்தில் வேறு என்ன உயிரோட்டமுள்ள காரியம் எதிர் பார்க்க முடியும்?

இவனுக்கு லேசாக வியர்த்தது. நெஞ்சில் புகை சுருள்வதுபோல் ஓர் உணர்வு. இனி இதைப்பற்றி அதிகம் சிந்திக்காதே, அலட்டாதே என்று மூளைக்கான உடலின் எச்சரிக்கை.

லேசாகக் கீழே குனிந்து, கண்ணை மூடிக்கொண்டான். அப்போதும் மனம் அடங்க மறுத்தது. ஒரு சலுகையாக வேறு மாதிரியாக வேண்டுமானால் சிந்திக்கிறேன் என்றது.

கையில் சாட்டையோடு ஒரு ரட்சகன் வருகிறான். யார் எவர் என்று பாராமல் விளாசித் தள்ளுகிறான். கூட்டம் சிதறியோடு கிறது. அவள் காப்பாற்றப் படுகிறாள்.

திடீரென்று கெட்டி மேளத்திற்கான குரலும், தொடர்ந்து கெட்டி மேளமும் கேட்டான்.

இவன் வெடுக்கெனத் தலை நிமிர்த்திப் பார்த்தான். தாலி கட்டிக் கொண்டிருந்தான் பெருமாள் ராஜு.

அப்புறம் கண்ணில் பட்டவள் அக்காள். அவள் வாயில் முந்தானையை வைத்து அழுது கொண்டிருந்தாள். அப்புறம் அம்மா. அவளும் அப்படித்தான். அப்பாவின் வாயிலும் துண்டு. அண்ணன்மார், அண்ணிமார் கண்கள் கலங்கின. அட, அந்த அத்தான் முகத்தில்கூட வாட்டம்.

இவன் அநேகமாகக் கத்திவிட இருந்தான்! நிறுத்துங்கள் சுய காரியப் புலிகளே! எதற்கு அழுகை? யாரை ஏய்க்க அழுகிறீர்கள்? அவள் செத்துப் போய்விட்டாள் என்றா அழுகிறீர்கள்? அவ்வளவு சுலபமான சாவையா நீங்கள் அவளுக்கு சிபாரிசு செய்திருக்கிறீர் கள்? இன்னும் ஒரு நூற்றாண்டு சித்தரவதைக்குப் பிறகல்லவா அவள் சாகவேண்டும்!

உங்கள் காரியம்தான் நிறைவேறிவிட்டதே! அப்புறம் எதற்காக அழுகை? அதுதான் கை நனையாமலேயே கழட்டிக் கொண்டு விட்டீர்களே! அப்புறம் எதற்கு அழுகை?

அப்பாவுக்கு நன்றி மறந்தவன் என்ற அவச்சொல் வரும் சாத்தியம் போனது. அம்மாவுக்கு இன்னொரு மாப்பிள்ளைக்கு அலைகிற அலைச்சல் விட்டது. அண்ணன்மாருக்குப் பணம் தேடத் தேவையில்லை. அண்ணிமார் நகைகளுக்கு ஆபத்தில்லை. அத்தானுக்கு, அவன் ரோட்டில் நின்று போடுகிற கூச்சலைக் கேட்க வேண்டிய அவசியமில்லை. அப்புறம் எதற்காக அழுகை?

ஒரு வேளை உங்கள் கைவிரலில் ஈரம் படாமலேயே யாராவது தேவதூதன் தன் சொந்தப் பொறுப்பில் வந்து இவளைக் காக்கவில்லையே என்று அழுகிறீர்களோ?

இவன் விருட்டென எழுந்து, வீட்டையும் பந்தலையும் தாண்டி வெளியே வந்தான்.

இவன் எதிர்பாராமல் பந்தல் வாசலைக் கடந்துவிட்டதைக் கவனித்த ஒரு பையன் ஓடி வந்து, ஒரு தேங்காய்ப் பையை இவன் கையில் கொடுத்தான்.

அனிச்சையாக அதை வாங்கிக் கொண்ட இவனது சிந்தனை இன்னும் மணவறையிலேயே இருந்தது.

இப்போது ஒரு சந்தேகம். ஒருவேளை இன்னும் கொஞ்ச நேரம் தான் அங்கிருந்திருந்தால், தான் நினைத்தவைகளை யெல்லாம் வாய்விட்டே கத்தியிருப்பானோ?

தான் அப்படிக் கத்திவிடாததும்கூட கொஞ்சம் ஆச்சரியமாகத் தான் இருந்தது.

இல்லை; ஒரு நாளைக்கு தான் எங்காவது, அப்படிக் கத்தத்தான் போகிறான் - இந்தச் சீக்கு முற்றிப் பழுத்ததும்.

அப்போது நாலுபேர் இழுத்துப் போட்டு உதைக்கப் போகிறார்கள் - செம்மையாக.

அன்றோடுதான் தனது இந்தக் கோபமும் நோயும் தன்னைவிட்டுப் போகப்போகின்றன.

இவன் மேலே நடந்தபோது, ஸ்பீக்கரில் இருந்து 'சாப்பாடு தயாராகி விட்டது. எல்லாரும் இருந்து கட்டாயம் சாப்பிட்டு விட்டுப் போக வேண்டும்' என்ற கோரிக்கை கேட்டது.

'நீங்களே தின்னுங்கள்' என்ற இவன் தொடர்ந்து நடந்தான் ❑

# அரிசி

நீல. பத்மநாபன்

சற்றுத் தொலைவில் நீரில் துடுப்புகள் சலசலக்கும் ஓசை...

காலூன்றி நின்ற வையத்திலும், அண்ணாந்து பார்த்த வானிலும் இருள் தளம் கெட்டி நிற்கையில், விருட்சங்களுக்கு மட்டும் எப்படித் தோற்றம் இருக்க முடியும்?

மண்ணிலும் காற்றிலும் ஈரம் சொட்டுகிறது. அடுத்த மழை எப்போது வேண்டுமானாலும் பெய்யலாம்...

மேற்கு வான்மூலையில் அடிக்கடி மின்னலின் மின்சார வீச்சு... அதோடு இடியோசையும் சடசடவென்கிறது...

நெய்யாறில் மழை வெள்ளம் குமுறிக் கொந்தளித்து, ஆர்ப்பரித்து ஓடி, இங்கே பூவாறில் வந்து சேருகையில் சமுத்திரம்போல், பரந்து, படர்ந்து அலையெழுப்பி ஓடிக் கொண்டிருக்கிறது...

சற்றுத் தொலைவில் கடல் இரைந்து கொண்டிருந்தது.

பரந்து கிடந்த, ஆறே இருளில் அரூபியாக இருக்கையில், காதரின் தோணிக்கு மட்டும் எப்படி ரூபம் இருக்க முடியும்...? துடுப்புத் துழையும் சத்தம் மட்டும் காட்டாற்று வெள்ளத்தின் இரைச்சலின் இடையில், மெல்லியதாய்க் கேட்டுக்கொண்டு இருந்தது.

கரி பிடித்த லாந்தரின் முணுமுணுக்கும் மங்கிய வெளிச்சம் கூட இல்லாமல், இந்த மழை வெள்ளத்தில் அனாயாசமாக படகைச் செலுத்திக்கொண்டிருக்கும் காதர் காக்காவை நினைத்த போது, இருளுடன் இருளாகக் கரையில் நின்று கொண்டிருந்த மூக்கனுக்கு ஆச்சரியமாகத்தான் இருந்தது.

கேரள எல்லைக்குள் எந்நேரத்தில் வேண்டுமானாலும் பிரவேசிக்க, பிரத்யேக அனுமதி பெற்று ரோந்து சுற்றிக் கொண் டிருக்கும் தமிழக ஊர்க்காவற்படை, எப்போது, எங்கிருந்து,

எப்படி, அங்கே தோன்றிவிடுமென்று நிர்ணயிக்க முடியாது... பீடியின் மினுமினுப்புக் கூட, ஆபத்தானது...!

பீடியை ஒரு தடவைகூட தீர்க்கமாய் இழுத்துவிட்டு, கீழே எறிந்தான் மூக்கன். ஈரத்தில் புசுபுசுத்துத் தீமுனை அணைந்தது...

வேறு ஒருசில பேர்கள்கூட சைக்கிளில் அங்கே வந்திறங்குகிறார்கள்...

''ஆரு மூக்கனா...?''

''ஆமா... ஆரு சைமனா?''

''ஆரு உம்மறா?''

''ஆரு ராமனா?''

அங்கே சப்தங்களுக்கு உருவமும், தோற்ற வேறுபாடுகளும் இருந்தன போலும்! குரலின் வித்தியாசங்களில் இருந்து ஆட்கள் பரஸ்பரம் அறிமுகமாகிறார்கள்; இனம் கண்டு கொள்கிறார்கள்...

எல்லோரும் ஒரு முகமாக-ஒற்றுமையாகக், குளிரைச் சபித்தார்கள்.....

ஒருவருக்கும் தரையில் கால் பாகவில்லை... எங்கோ அவர்களுக்கு முற்றிலும் அஞ்ஞானமான மூலைகளில் இருந்து-முனைகளில் இருந்து, அபாயம் அவர்களை உற்று நோக்கிக் கொண்டிருக்கிறது; முறைத்துப்பார்த்துக் கொண்டிருக் கிறது. எந்த நொடியில் என்று சொல்வதற்கில்லை. அது அவர்கள் மீது பைசாச வெறியோடு பாய்ந்து, பிய்த்துப் பிடுங்கி நசுக்கிவிடும்!

ஒரு பழுத்த இலை உதிர்ந்து விழும் ஒலிகூட, சிறைத் தண்டனையின் அபாய அறிவிப்பாக அவர்களை விழித்துப் பார்த்துப் பயமுறுத்துகிறது.

டெமாக்ளஸின் கட்கம்போல், தலைக்குமேல் நூலிழையில் அசைந்தாடிக் கொண்டிருந்த அபாயத்திலிருந்து, எந்தக் கணத்திலும் ஓடித் தப்பிக்கத் தயாரெடுத்தவாறு, நாலா புறமும் பரக்கப் பரக்கப் பார்த்தவாறு, இருளில் பிசாசுக்களைப்போல் அந்த ஏழெட்டு பேர்களும் நிற்கிறார்கள்...

பேச்சொலியை வெளியே சிந்தக்கூட எல்லோருக்கும் ஒரு கிலி... காதர்காக்காவின் தோணி கரைக்கடப்பதையே அதீதமான ஆவலோடு எதிர்பார்த்தவாறு மௌனமாக அவர்கள் நிற்கிறார்கள்.

அப்பாடா...! இருளில் இழையும் ஓர் ஆமையைப்போல் தோணி கரையை அடைந்தது... காதர் எறிந்த கயிற்றை இழுத்து கரையில் நின்ற மரத்தில் மூக்கன் கட்டியதும், கூட்டம் ரொம்ப சுறுசுறுப்பாகி விட்டது.....

சைக்கிள் கேரியரில் வைத்து அவர்கள் கொண்டு வந்திருந்த மரவள்ளிக் கிழங்கு மூட்டைகள் படகுக்கும், படகில் இருந்த அரிசிச் சாக்குகள் ஒவ்வொருவர் சைக்கிள் கேரியருக்கும் இடம் மாறிக் கொள்ளும் பரபரப்பு...

எல்லாருக்கும் பயம் கலந்த ஒரே துடிதுடிப்பு....

படகு கிடந்து தத்தளிக்கிறது.....

''லே... கவனம்... கவனம்.... மலை வெள்ளத்துக்க பயங்கர ஒழுக்கு... இங்கணெயானா அசல் கசம்.... வெப்பராளப் பட்டூட்டு தண்ணீலெ விளுந்துட்டா பொறவு பொறயிதம் கூடக் கிடைக்காது... சொல்லிப்போட்டேன்....''

இப்படி அடிக்கடி அடித்தொண்டை கரகரக்கச் சொல்லியவாறு டார்ச்சை மின்ன வைத்து மின்ன வைத்து அணைக்கிறான் காதர். அதற்கிடையில் நீரில் குதிர்ந்துபோய், மடியிலிருந்த டயரியை வெளியே எடுத்து, ஒவ்வொருத்தர் கணக்கையும் தனித்தனியாக அதில் எழுதிக் கொள்வதோடு சிலரிடமிருந்து பணம் வாங்குவதும், வேறு சிலருக்கு எண்ணிக் கொடுப்பதுமாகச் சுறுசுறுப்பாக இயங்குகிறான் அவன்.

இத்தனை நேரமாய்க் குமுறிக்கொண்டிருந்த மழையும், இதுதான் சமயமென்று சடசடவென்று பெய்யத் தொடங்கி விட்டது.

''எல்லாரும் கொஞ்சம் கவனியுங்கோ... காருக்க சத்தம் கேக்குல்லா.....?'' என்று சடக்கென்று காதர் சொன்னானோ இல்லையோ, எல்லோருக்கும் வயிறு கலங்கியது.

கைகால்களுக்கு ஏன் இந்தத் திடீர் சோர்வு?

எல்லோரும் ஸ்தம்பித்துப் போய்விட்டார்கள்.

மழையின் சத்தத்தின் இடையில், இப்போது எல்லோருக்கும் அந்த ஒலியைத் தெளிவாய்க் கேட்டு, இனம் கண்டு கொள்ள முடிகிறது.

''போலீஸ் வேனேதான்...''

''இடி வண்டி......''

எல்லோருக்கும் பொறிகலங்கியது.... ஒரே ஒரு க்ஷணம் தான்! ''உம்.....சட்டுணு சட்டுணு.... தோணிக்கயத்தை அவுத்துடு..... நா அப்படி ஒதுங்கிப் போயிரட்டும்...'' என்று முண்டாசை இறுக்கிவிட்டு, லுங்கியை மடக்கி உடுத்தியவாறு காதர் சொன்னதும், எல்லாரும் பரபரப்போடு சுறுசுறுப்பானார்கள்.

விளாசு விளாசென்று மழை அடித்து நொறுக்கிப் பெய்கிறது...

படகில் ஏற்றவேண்டியதும், படகிலிருந்து இறக்க வேண்டிய தும் முடிந்துவிட்டிருந்தது.

சிலர் சைக்கிள் கேரியரில் முழுச் சாக்கை வைத்துக்கட்டிக் கொண்டிருந்தார்கள். வேறு சிலர் சைக்கிளுக்கும் தோணிக்கும் இடையில் மூட்டையுடன் நிற்கிறார்கள்.

கயிறை அவிழ்த்துவிட்டு நீரோட்டத்தோடு ஓட்டமாக, கரை யோரமாய்ப் படகைச் செலுத்தியவாறு தண்ணீரில் சரிந்து, வெள்ளத்தின் ஓட்டத்தில் சலசலத்தவாறு, மூடிக்கிடந்த மரங் களின் ராட்சசக் கிளைகளின் இடையில் சென்று மறைந்தான் காதர்.

சைக்கிளில் வைத்துக் கெட்டியது பாதி, கெட்டாதது பாதியாக சிலர் பக்கத்துப் புதர்களுக்குச் சைக்கிளை உருட்டியவாறு மரணப் பாய்ச்சல் பாய்கிறார்கள்.

இயக்கவேகம் கொண்ட பயங்கர நிமிஷங்கள்... அகப்பட்டுக் கொண்டால்.....?

போச்சு....எல்லாம் போச்சு....! பிடிப்பவர்கள் உடனடித் தரும் 'கைநீட்டத்'தின் கூட, ஏழோ எட்டோ மாசம் கம்பி எண்ணவேண்டி வந்துவிட்டால்....

வீட்டில் பெண்டாட்டி புள்ளைகள் கதி...?

அப்பா அம்மாவின் கதி?

மூக்கனுக்கு ஒன்றுமே தோன்றவில்லை....

எங்கே ஓடுவது?

எப்படிப் பதுங்குவது?

காரின் வெளிச்சம் தெரிகிறது.

போலீஸ் வேனா... இல்லை ஜீப்பா?

நினைத்துப் பார்க்கவோ, நிதானிக்கவோ, துளிக்கூட நேரம் இல்லை; அவகாசமில்லை.

உடனடி முடிவு செய்யவேண்டும்......!

கூட்டாளிகள் யாவரும் சைக்கிளில் இருக்கும் அரிசி மூட்டை யுடன் பத்திரமாய் ஒளிந்துகொண்டு விட்டார்கள். அவனுக்கு ஒன்றுமே புரியவில்லை......

கேரியரில் வைத்துப் பலமாய்க் கட்டியிருந்த ஒரு சாக்கு அரிசியோடு, சைக்கிளை, செடி கொடிகள் வழி ஆற்றோரமாய் கொஞ்சம் தூரம் உருட்டிக்கொண்டு வெகுவேகமாய் ஓடினான்... சடக்கென்று சைக்கிளைத் தண்ணீரில் இறக்கிக் கரையோடு கரையாய்ச் சேர்ந்து அழுத்திப் பலமாகப் பிடித்த படி, அவனும் ஆற்றில் இறங்கினான்.

ஏற்கெனவே மழை வெள்ளத்தாலும், வியர்வையாலும் தொப்புதொப்பென்று நனைந்து போயிருந்த உடம்பில் ஆற்று நீரின் பனிக்கட்டியைப்போன்ற குளிர், உறைக்காமல் இருக்கவில்லை.

சைக்கிளின் குறுக்குச் சட்டத்தின் உள்வழி இருகைகளையும் நுழைத்து, தலையின் மீது வந்து விழுந்து கிடந்த மரக்கிளைகளை உடும்புப் பிடியாகப் பிடித்தவாறு ஆற்றின் ஆழம் தெரியாத அடிமட்டத்து மண்ணில் போய்ச் சேராத கால்களோடு, அரிசி மூட்டை நீரில் முழுகிவிடாமலிருக்கத் தன் கை புஜங்களில் தொங்கும் சைக்கிளைத் தூக்கலான கரை மண்ணோடு மண்ணாகத் தன் முழு உடம்பால் அழுத்தித் தாங்கியவாறு, தண்ணீரில் கழுத்தளவுக்கு முழுகி அந்தரத்தில் நின்றான் அவன். கரையின் மண் விளிம்பு தலைக்கு மீது நாலைந்து அடி உயரத்தில் இருந்தது.

பிராண பயம்.....

உயிரைக் காக்கும் வெறி......

அபாயத்தை நேருக்குநேர் சந்திக்கையில் மனிதனுக்கு வந்துவிடும் அபார-அசாதாரணமான, தைரியம்தான் மூக்கனிட மும் முழுமூச்சாய் வேலை செய்தது.

உயிருக்கே ஆபத்தான விநாடிகள்... புஜங்களில் சைக்கிளும் அரிசி மூட்டையும் கீழே அழுத்த, உடம்பை நீரோட்டம் வலுக்கட்டாயமாக பக்கவாட்டில் இழுக்கிறது.....

பிராண ரட்சைக்காக மரக்கிளையை வீறோடு பற்றியிருக்கும் கரங்கள்மட்டும் ஓய்ந்துவிட்டால்.....?

அன்போடு அரவணைத்து இறுகத் தழுவி தன்னில் ஒன்று கலக்கச்செய்ய ரொம்ப நெருங்கிவந்து, கொட்டுக் கொட்டென்று அவனையே பார்த்துக்கொண்டு நிற்கிறது மரணம்...

அது எந்த உருவில்.....?

நீரில் முழுகி துர்மரணமாகவா?

இது என்ன உயிர் வாழும் சமரா: இல்லை; உணவைக் காத்து உணவைத் தேடி, ஒரு குடும்பத்தின் பட்டினிச்சாவைச் சமாளிக்கும் புண்ணிய வேள்வியா?

தமிழகப் போலீஸ் வேன் ஆர்ப்பாட்டமாக சற்று தொலைவில் வந்து நிற்கிறது.

சடசடவென்ற மழை இன்னும் ஓயவில்லை.

திமுதிமுவென்று வேனிலிருந்து இறங்கியவர்கள் டார்ச் ஒளியைப் பாய்ச்சி, அங்குமிங்கும் பாய்ந்து இரையைத் தேடுகிறார்கள்.

தன் தலைக்குமீது கரையில் காலடியோசை...

குலதெய்வங்களை எல்லாம் பிரார்த்தித்துக்கொண்டு, இமைகளை மூடி ஒருவித மோன தியானத்தில் அவன் முழுகினான்.

பார்த்துவிடுவார்களா?

பார்த்துவிட்டால்....?

பாவம்... வேலம்மை தேடித்தேடி இருப்பாள்... உம்... அம்மைக்கு சீக்கு எப்படி இருக்கோ? வீட்டிலிருந்து இறங்கும் போது அவளுக்கு நல்ல நினைவுகூட இல்லை...

கோமுவுக்குக் காய்ச்சல் எப்படி இருக்கோ? இந்த நெருக்கடி யான நாளில், வீட்டில், தான்மட்டும் இல்லாவிட்டால்...? என்னாண்ணு மூண்டு கேக்க வேறெ ஆரு இருக்கா? ஆறோ ஏழோ மாசம் ஜெயில் விருந்தெல்லாம் கழிஞ்சு, திரும்பி வரும்போது குடிசையில் யார்யார் மிஞ்சியிருப்பார்களோ என்னவோ!

''ஐயோ...''

யாரது? மேலே யாரோ அகப்பட்டுக்கொண்டு விட்டார்கள் போலிருக்குது.

''லே... இப்படி வாலே... எவ்வளவு நாளாட்டு இந்த வேலை நடக்கூ...? திருட்டு ராஸ்கல்...''

''ஐயோ... பொன்னு யசமானே... இனி மாட்டவே மாட்டேன்...''

''ஐயோ...''

''ஐயோ...''

பாவம்..... நொண்டி ராமன்தான்.

செத்தான்!

இனி அடுத்தது யாரோ?

'நான் தானா...?'

காலில் என்னவோ வழுவழுக்கிறது... நீர்ப்பாம்பா...? எதுவாக இருந்தாலும் என்ன செய்யமுடியும்! கைகள் இரண்டும் மேலே அல்லவா தொங்குகிறது... அதை விட்டு விட்டால்....

பாவம் ராமன்...! இடது காலைக் கொஞ்சம் இழுத்து இழுத்துத்தான் நடப்பான்.... ஆனா... அவன்கூட ஓட யாராலும் முடியாது... எப்படி அகப்பட்டுக்கொண்டு விட்டான்...!

முதன்முதலில் அவனைச் சந்தித்த நாள்....

மூணு நாலு வருஷங்களுக்கு முன்னால்...

நாகர்கோவிலில் இருந்து திருவனந்தபுரத்துக்கு வந்து கொண்டிருந்த ஒரு கேரளா பஸ், களியக்காவிளை செக் போஸ்டின் முன் வந்ததும், நிற்கிறது.

திமுதிமுவென்று பஸ்ஸுக்குள் நாலைந்து பேர்கள் நுழைகிறார்கள்.... துப்பாக்கி தாங்கிய போலிஸ் ஜவான்கள் வெளியில் தயாராக நிற்கிறார்கள்...

பஸ் பிரயாணிகளின் பெட்டி படுக்கைகளை, பைகளை எல்லாம் பிடித்திழுத்துத் திறந்து உள்ளே இருந்தவைகளைத் தலை கீழாகக் கவிழ்க்கிறார்கள்..... ஏழ்மையின் தரித்திர முத்திரை யோடு பரிதாபமாகத் தெரிந்தவர்களிடம் முற்றுகை பலமாக இருக்கிறது...

சில பைகளில் அழுக்குத் துணிகள்....

சில பைகளிலிருந்து வடசேரிச் சந்தைக் காய்கறிகள் உருண்டோடுகின்றன...

சில பைகளில் கன்யாகுமரிக் கலர் மண்ணு....!

சில கிராமத்துப் பெண்களின் பைகளில் இருந்து, கந்தலாகிப்போன கண்டாங்கி, எண்ணைச் சிக்கு வாடை கொண்ட சவரி, இவைகளின்கூட கீழே சிதறிய சம்பா அரிசி மணிகளும் கைப்பற்றப்படுகின்றன.

அப்போதான், பார்க்கப் பிச்சைக்காரன் போலிருந்த ஒரு நொண்டி, "ஐயோ... பொன்னு எசமானே... தர்ம தொரையே... விட்டுரும்.... விட்டுரும்... நா வீடுவீடா ஏறி இறங்கி, பிச்சை எடுத்து சம்பாரிச்சது... விட்டுரும்.... விட்டுரும்..." என்று கண்ணீர் வடித்துக் கதறியதை ஒன்றும் பொருட்படுத்தாமல்,

கந்தலாகிப்போன அவன் வேட்டியின் உள்ளிருந்து, ஒரு சின்ன அழுக்குத் துணி மூட்டையை முரட்டுத்தனமாய்க் கைப்பற்றி இழுத்தான், பரிசோதனைச் சிப்பந்தி.

பஸ்ஸில் ஒரே பரபரப்பு...

பிரயாணிகள் இரு கட்சிகளாகப் பிரிகிறார்கள்.... "அடடா...! இப்படியுண்டா அநியாயம்? இவுனுகளுக்கெல்லாம் எவ்வளவு துணிச்சல் இருக்கணும்? சார்... இப்படிப்பட்ட ராஜத் துரோகிகளை எல்லாம் தூக்கிலெ ஏத்தணும்.... அப்பம்தான் நாடு நல்லாவும்!" என்றார் கோட்டும் ஸுட்டுமாகக் கம்பீரமாய்க் காட்சியளித்த ஒருவர், அழகாய் இருந்த தன் தோல் பையை மடியில் பத்திரப்படுத்தியவாறு.

"எனக்கு நாகர்கோவிலில் சொந்த வயலிருந்தும்கூட, என் குடும்பம் இருக்கும் திருவனந்தபுரத்துக்கு நெல்லு கொண்டு போக முடியாமெ தட்டளியேன்" என்றார் ஒரு மூக்குக் கண்ணாடி ஆசாமி.

"கேரளா பஸ்ஸல்லவா...! இந்த டிரைவருக்கும், கண்டக்டருக்கும் கூடப் பங்கு இருக்கும் சார்... இவுனுகளை எல்லாம் டிஸ்மிஸ் செய்யணும்...."

இப்படி ஒருவர் ஆக்ரோஷமாக அலறியதும், பரிசோதனை அதிகாரி, டிரைவரையும், கண்டக்டரையும் பஸ்ஸைவிட்டுக் கீழே இறங்கச் சொல்லி அதிகார தோரணையில், "பிராயாணிகளின் பைகளில் அரிசி ஏதாவது இருக்காண்ணு செக் பண்ணாமல் எப்படி ஓய் பஸ்ஸில் ஏற்றலாம்...? உம்... உம்ம லைஸன்சை எடும்... பாட்ஜை எங்கே? பேரைச் சொல்லும்?" என்று சத்தம் போட்டார்.

"சார் நாங்க பார்த்துதான் ஏத்தினோம்... ஏறும்போது இதையொண்ணும் நாங்க காணவே இல்லை சார்..."

அழமாட்டாக் குறையாகக் கண்டக்டர் அவரிடம் சொல்கிறான்...

அழுகையையும் கதறலையும் ஒன்றும் பாராட்டாமல் அந்தப் பிச்சை அரிசி பறிமுதல் செய்யப்படுகிறது.

வயிற்றுப்பாட்டுக்கான குலத்தொழிலை இழந்து, பிழைப்பைத் தேடி, திருவனந்தபுரத்துக்குக் குடும்பத்தோடு யாத்திரை செய்து கொண்டிருந்த மூக்கனுக்கு, இந்தக் களேபரத்தைக் கண்டபோது பொறுக்கவில்லை.

''என்னத்துக்கு இந்த பகளம்? பாவம்... கொஞ்சம் அரிசி வீடுவீடாகப் போய் எரந்து வாங்கிக்கொண்டு போறான்... எரந்து திங்கப்பட்டவனைத் தொரந்து வாங்கியா நாடு நல்லாவப் போவுது? லாரிக்கணக்கில் அரிசியும் சோறும் மொத்தமா கொண்டுப் போறா... அதைக் கேப்பாரில்லே...!''

அவன் வார்த்தைகள் அங்கே எடுபடுமா? போனது போனதுதான்...?

பிறகு பஸ் விட்டபின், மூக்கைச் சிந்திப்போட்டு அழுதவாறு உலகத்தையே சபித்துக்கொண்டிருந்த ராமனைத்தேற்ற மூக்கன் ஒருவன் மட்டும்தான் அந்த பஸ்ஸில் இருந்தான். ''போட்டும் ஓய்... இந்த சட்டமான சட்டமெல்லாம் கடேசிலெ பாவங்களுக்க வயத்தைத்தான் வந்து அடிக்கு... உம்... ஆரூட்டெச் சொல்ல...!''

பட்டம் தாணுப்பிள்ளை முதல் மந்திரியாக இருந்த காலத்தில் கன்யாகுமரி ஜில்லாவை, தாய்த் தமிழகத்துடன் இணைக்க வேண்டுமென்று கிளர்ந்தெழுந்த மக்கள் போராட்டத்தின்போது நடந்த துப்பாக்கிப் பிரயோகத்தில், தன் இடதுகால் முடமான செய்தியையும் அப்போதுதான் ராமன் அவனிடம் வெளி யிட்டான்... இப்படித்தான் நொண்டி ராமனுடன் தனக்குப் பழக்கம் நேர்ந்தது. இதோ அவன் பிடிபட்டு விட்டான்...

இனி யாரு...?

'நான் தானா...?'

அப்பப்பா! இந்த கைகளுக்குத்தான் என்ன வலி.... தோளில் இருந்து விடுபட்டுப் போய்விடப்போகிறதோ என்னமோ....! உச்சி முதல் உள்ளங்கால்வரை உடம்பு முழுதும் மரத்துப் போய்விட்டது போலிருந்தது...

எத்தனை யுகங்களாக இந்தக் குளிர்ந்த நீரில் கிடக்கிறோம்...! இன்னும் எத்தனை யுகங்கள்...?

அதற்குள்... தன் ரத்தமும் சதையும் எல்லாம் பனிக்கட்டியாய் உறைந்து போகாதா? கடவுளே...!

மேலே காலடியோசைகள்...

பிடிபட்டு விட்டால்...?

அவனால் நினைத்துப் பார்க்கவே முடியவில்லை. மூளையில் தெளிவில்லாத என்னவெல்லாமோ ஸ்மரணைகள்...

பாலக்காட்டில் இருந்து கோயம்புத்தூருக்கும், பொள்ளாச்சிக் கும், அரிசியும் மரவள்ளிக்கிழங்குத் தூளும் கடத்திய நாட்களில்

இப்படியொரு சித்ரவதைக்கு ஆளாகவில்லை. உம்... இந்த வாதநோய் பிடிச்ச அம்மாவை ஆயுர்வேத தர்ம ஆஸ்பத்திரியில் காட்ட வேண்டி திருவனந்தபுரத்துக்குத் திரும்பிவர நேர்ந்தது ஆபத்தாக முடிந்தது.

இனி என்ன செய்ய...?

இதெல்லாம் இந்த மூணுநாலு வருஷங்களுக்கிடையில் அண்ணைக்கு நான் நாகர்கோவிலில் இருந்து இங்கே வந்தம் பொறவுதானே...!

குலத்தொழிலைச் செய்ய அனுமதிக்கப்பட்டிருந்தால் இப்படி ஏதாவது வந்திருக்குமா? அப்பா குமாரசாமி ஆசாரி தான் எவ்வளவு பெரிய பொன் வேலைக்காரர்....! எனக்கும் பிரமாதமாகத்தான் அவரு வேலை படிப்பிச்சுத் தந்திருந்தாரு... சின்னப் பயலா நா இருக்கையில் நுண்ணிய வேலைப் பாடுகளுக்கிண்ணே நீளமாய், மெல்லியதாய் அமைஞ்சிருக் குண்ணு, அப்பா என் விரல்களை எத்தனை தடவை தடவியவாறு புகழ்ந்திருக்கிறார்....!

உம்... அந்த விரல்கள் இப்போ படும்பாடு....!

கடைசியில்....? அப்பா உயிரோடு இருக்கையில் இப்படி விபரீதம் ஏதாவது உண்டா? அப்போ எல்லோரும் இதை விட செழிப்பாகத்தான் இருந்தார்கள்...

பிறகுதான், தங்கக்கட்டுப்பாடு சட்டத்தால் குடும்பமே நாசமானது... அப்படி இருந்தும் வயிற்றுப்பாட்டை நடத்த, கள்ளக்களவில் .தொழிலைச் செய்துகொண்டுதானிருந்தேன்... ஆனால் இரண்டு தடவை உருப்படி (நகை) செய்ய ஆளுகளிடமிருந்து வாங்கிக் கொண்டு வந்திருந்த தங்கத்தோடு போலீஸில் பிடிபட்டு, பணமும் மானமும் நாசம் அடைந்த பின், என்னை நம்பி யாரு பொன்னைத் தருவார்கள்....?

அதனால்தான் குடும்பத்தைக் காக்க என்னவெல்லாமோ தொழில் செய்து வேறு வழியில்லாமல், கடைசியில் இந்தத் தொழிலை வந்து சரணாகதி அடைந்தேன்.

இப்போ... அகப்பட்டுக்கொள்வேனா...?

கடவுளே... இந்த ஒரே ஒரு தடவை மட்டும் இவர்கள் கையில் சிக்கி விடாமல் என்னைக் காப்பாற்றி விட்டு விடு.... இனி இந்த அபாய விளையாட்டுக்கு நான் இல்லை.

இல்லவே இல்லை.

இது சத்தியம்.

மேலே இன்னும் ஆள் அரவம் கேட்டுக் கொண்டுதான் இருக்கிறது.

டார்ச் விளக்கின் ஒளிவட்டம், மேலிருந்து ஆற்றின் வெள்ளத்தில் சரிந்து விழுந்து, அதன் தங்க நிறத்தைக் காட்டிச் சிதறுகிறது.

*ஆற்று நீருடன் மழை நீர்.... மழை நீருடன் வியர்வை....!*

*கடவுளே! அகப்பட்டுக் கொள்ளக்கூடாதே...! நித்ய கண்டம் பூர்ணாயிசான இந்தத் தொழில் இனிமேல் வேண்டவே வேண்டாம்.... பழவங்காடி பிள்ளையார் கோவிலுக்கு இண்ணைக்கே ஒரு தேங்காய் உடைக்கிறேன்.*

*நிமிஷங்கள் இழைகின்றன...*

*சைக்கிள் வாடகை, அங்கே இங்கே கமிஷன், வழியில் செலவு இதெல்லாம் போக, திருவனந்தபுரத்தில் வாடிக்கை ஹோட்டலில் கொண்டு போய்க் கொடுத்தால், இந்த ஒரு சாக்கு அரிசியில் இருந்து கூடிப் போனால் பத்து பதினஞ்சு ரூபாதான் கிடைக்கும்...!*

*அதுவும் என்றும் கிடையாது... இந்தக் கடல் வழியையும் அதிகாரிகள் கண்டுபிடித்து விட்டார்கள்...! போலீஸ் பந்தோபஸ்து தீவிரமாய் இருந்தால், சேர்ந்தாற்போல் ஒரு மாசம் வரை தொழிலே இருக்காது.... இதுக்குப் படும் பிராணாவஸ்தை என்னா, சித்ரவதை என்னா....! இப்போதான் பார்க்கவில்லையா, கரணம் தப்பினால் மரணம்தானே...*

*ஆனால்... இந்த வரும்படியும் இல்லாவிட்டால், தான், அம்மா, பெண்டாட்டி, மூணு குழந்தைகள் எல்லாம் எப்படிக் காலம் கழிப்பது...?*

*தெரிந்த குலத்தொழிலையே செய்ய முடியாத பரிதாபம்... ஏனையத் தொழில்கள் யாவற்றிலும் போட்டியும் பொறாமையும்.... இந்தத் தொழிலையும் விட்டு விட்டால், பின் எப்படித் தான் உயிர் வாழ்வது? குடும்பத்தை வாழ்விப்பது? இல்லை பட்டினிபோட்டே அழித்து விடுவதா?*

*எது எப்படியானாலும் இதுதான் கடேசி... கடைசி முறை....! இப்போ தப்பித்துக்கொண்டால் இனி இந்த நரக வேதனை அனுபவிக்க முடியவே முடியாது... இது கடவுள் மீது சத்தியம்....!*

*உடம்பு குளிரில் மரத்துப் போகப்போக, அவனது மானசீக சபதத்தின் தீட்சண்யம் தீவிரமாகிக்கொண்டே இருந்தது.*

*ஆனா... தப்பித்துக் கொள்வேனா....?*

எவ்வளவு யுகங்கள் கழிந்தனவோ.... தெரிவதற்கில்லை... கிடைத்த இரையைக் கவ்வியவாறு போலீஸ் வேன் போய் விட்டது போலிருந்தது.

அடைமழை தூறலாகி விட்டது.

மேலே சூறாவளி ஓய்ந்த ஓர் அமைதி...

எப்படியோ முக்கி முனங்கிக் கரையேறி, மண்ணில் படுத்துக் கொண்டு சைக்கிளை அரிசி மூட்டையோடு இழுத்துக் கரையில் ஏற்றினான்...

கிழக்கு வெளுத்துக் கொண்டிருந்தது.

நேரம் விடியும்முன் திருவனந்தபுரம் போய்ச் சேர்ந்தாக வேண்டும்... அதற்கிடையில் இன்னும் எத்தனை எத்தனை தடைகளோ! சாதாரணமாக இந்த நேரத்தில், அரிசியைச் சேர்க்க வேண்டிய இடத்தில் கொண்டு போய்ச் சேர்த்து விட்டு, அவன் வீடுபோய்ச் சேர்ந்திருப்பான்... உம்... இன்று சகுனம் சரி யில்லை... அப்பப்பா... எவ்வளவு பயங்கரமான பிராண அவஸ்தை...!

கைகால்களை உதறி, தயார் எடுத்துக்கொண்டான். கேரியரில் இருக்கும் ஒரு சாக்கு அரிசியோடு இன்னும் இருபது, இருபத்தி ஐந்து மைல்களுக்கு மேல், சைக்கிளை விட வேண்டாமா?

வழக்கம்போல், எந்த க்ஷணத்திலும் பிடிபட்டு விடுவோம் என்ற அச்சத்தின் மன அவசத்தோடு, அசாதாரணமான அன்றைய ராட்சஸ பிரயத்தனத்தால் உச்சிமுதல் உள்ளங்கால் வரை விண்விண் என்று வேதனை தெறிக்க சர். சி.பியின் காலத்தில் போட்ட முக்கியக் கான்கிரீட்ரோடைத் தவிர்க்க, பலவித சின்னச்சின்ன ஊடுவழிகள் வழியாக, சைக்கிளை விட்டும், உருட்டியும், தூக்கி எடுத்துக்கொண்டு நடந்தும், அவன் திருவனந்தபுரம் போய்ச் சேரும்போதும், சேர்க்க வேண்டிய இடத்தில் பத்திரமாய் அரிசியைக் கொண்டுபோய்ச் சேர்க்கும் போதும், பின் பழவங்காடி பிள்ளையார் கோவிலில் தேங்காய் வாங்கி உடைத்துவிட்டு, வீட்டுக்குத் திரும்பும் வழியில் பரமுவின் குடிசையில் நுழைந்து கொஞ்சம் 'போட்டு' விட்டு வீட்டில் வந்து படுத்தபோதும்-எல்லா நிமிஷங்களிலும், ''இது தான் கடேசி, இனி இந்தத் தொழிலுக்கு நான் இல்லை... இல்லை...'' என்றெல்லாம் தீர்மானமாய் மனதில் தன் சத்தியத்தை ஆத்மார்த்தமாகப் புதுப்பித்துக்கொண்டே இருந்தான் அவன்.

⁕ ⁕ ⁕

முதல் நாள் களைப்பில், அடித்துப்போட்டதுபோல் தூங்கிக் கொண்டிருந்த மூக்கன், பழக்க தோஷத்தால்தானோ என்னமோ, இரவு இரண்டு மணிக்கு வழக்கம்போல் பாயிலிருந்து எழுந்து உட்கார்ந்தான்.

வெளியில் என்னவோ ஆள் அரவம்....

அவனுக்கு முன்னாலேயே எழுந்து குடிசை நடையில் நின்றவாறு வெளியே பார்த்துக்கொண்டிருந்த வேலம்மை, அவன் எழுந்து உட்கார்ந்ததைக் கண்டு அவனிடம் ஓடி வந்தாள்.

''அறிஞ்சேளா சங்கதியை...! முந்தாநேற்றுதான் ஜெயிலில் இருந்து வெளீலெ வந்த பரமுவைக் கையும் களவுமா அன்னா பின்னையும் போலீஸ் வந்து பிடிச்சிட்டுப் போவுது... அவனுக்க பொண்டாட்டி, புள்ளையொ எல்லாருக்கும்கூட கள்ளச்சாராயம் காய்ச்சத் தெரியுமாம்.....உம்....''

பெருமூச்சு விட்டுவிட்டு அவளே சொன்னாள்.

''உம்..... பாவம்.... பரமுவைச் சொல்லவும் குத்தமில்லை.... ஏளெட்டுப் பேருக்க வயத்துப்பாடு களியாண்டமா.......?''

மூக்கனின் மூளை விழிப்படைந்தது.... அவனுக்கு எரிச்சல் எரிச்சலாக வேறு வந்தது....

உட்கார்ந்து கொண்டே சுற்று முற்றும் பார்த்தான்....

முக்கி முனங்கிக்கொண்டு கிடக்கும் அம்மாவும், போர்க் களத்தில் தாறுமாறாய்ச் சாய்ந்துகிடக்கும் உடல்களைப் போல் அவனைச் சுற்றி, பட்டினிக் கோலங்களாய்த் தூங்கிக் கொண் டிருக்கும் குழந்தைகளும், முன்னால் கந்தலின் பிரத்யட்ச வடிவாய் எழுந்து நிற்கும் பெண்டாட்டியும் அவன் நேற்றுச் செய்த பிரதிக்ஞையை-சத்தியத்தைப் பார்த்து வெவ்வெவ்வே காட்டுகிறார்களா?

திக்பிரமைப் பிடித்தவன்போல் ஒரு நிமிஷம் இருந்த அவன், ஒரு கர்ம வீரனைப்போல் சடக்கென்று எழுந்தான்....

* * *

சற்று தொலைவிலிருந்து வந்து கொண்டிருந்த நீரில் துடுப்புகள் சலசலக்கும் ஓசையைக் கேட்டவாறு, நின்று கொண்டிருந்தான் மூக்கன்.



# உயிர்கள்

சா. கந்தசாமி

அற்புதராஜ் சார் கூட எப்பொழுதும் ஒரு கூட்டம்; நான்கைந்து பேர்கள். பள்ளிக்கூடத்திலாகட்டும், விளையாட்டு மைதானத்திலாகட்டும். ஆற்றங்கரை, அவையாம்பாள் தோட்டமாகட்டும்-துப்பாக்கியோடு அவர் எங்கிருந்தாலும் மாணவர்கள் கூடவே சூழ்ந்து நிற்பார்கள். ஆனாலும் அவர்களில் யாருக்குமே அவர் சார் இல்லை. கோபால் ஏழாம் வகுப்பு; தங்கையாகவும், கிருஷ்ணனும் ஆறாம் வகுப்பு. அற்புதராஜ் எட்டாம் வகுப்புக்கு சார். அந்த வருடந்தான் எட்டாம் வகுப்பு புதிதாக வந்தது; அற்புதராஜ் சாரும் வந்துவிட்டார். அவர் ஒரு வருஷம் படித்த பள்ளிக்கூடம்; அவருக்கு சாராக இருந்தவர்களெல்லாம் இன்னும் இருக்கிறார்கள்.

அற்புதராஜூம் இப்போது ஒரு சார்; பெரிய வகுப்பிற்கு வாத்தியார். பட்டணத்திற்குப்போய்ப் பட்டம் வாங்கிக் கொண்டு வந்து விட்டார். ஹெட்மாஸ்டர் மணவாள ஐயங்கார் ரிடையர் ஆனபிறகு, அற்புதராஜ்தான் தலைமை ஆசிரியர்.

சர்ச்சுக்குப் போகும்போது தங்கையா சாரைச் சந்தித்தான். ஆனாலும் ஒன்றும் பேசவில்லை. அவன் ரொம்பக் கிளர்ச்சியுற்றான். ஒருவிதமான பயங்கூட வந்து விட்டது. வேகமாய் ஓடி அக்காவின் கரத்தைப் பிடித்துக்கொண்டான். இரண்டு மூன்று வாரங்களுக்குப் பிறகு கொஞ்சம் கொஞ்சமாக அச்சங்கூட மறைந்தது. அக்கா நையாண்டி பண்ணிப் பண்ணி அதைப் போக்கினாள்.

இரண்டு நாட்கள் அவருக்கு முன்னும் பின்னுமாக நடந்து, மூன்றாவது நாள் வகுப்பிற்குப் போகும்போது, 'குட்மார்னிங் சார்' என்றான் தங்கையா. எட்டாவது சாருக்குத் துணிந்து முதன் முதலிலே குட்மார்னிங் வைத்தவன் அவன்தான். அற்புதராஜ் மெல்லத் தலையசைத்து குட்மார்னிங் சொன்னார். அந்த நிகழ்ச்சி

மாணவர்களிடையே பெரும் பரபரப்பை உண்டாக்கிவிட்டது. ஒரு நிமிஷத்திற்குள்ளேயே அவன் புகழ் பெற்றுவிட்டான். 'சாரைத் தெரியுமாடா?' என்று துளைத்துத் துளைத்துக் கேட்டவர்களுக்கு எல்லாம், மெல்லச் சிரித்துக்கொண்டே தலையசைத்து, 'சர்ச்சிலே பார்த்திருக்கேன்' என்று பெருமையோடு பதிலளித்தான்.

அடுத்தவாரம் சர்ச்சுக்குப் போகும்போது, சாரைப் பார்த்ததும் அக்காவை விட்டு விட்டு ஓடி வந்து 'குட்மார்னிங் சார்' என்றான். அப்புறம் அவன் அக்காவிடம் போகவில்லை; சார் கூடவே சென்றான். பிரார்த்தனையும் அவரோடுதான்; பிரார்த்தனை முடிந்ததும் அக்கா ஜாடை காட்டிக் கூப்பிடக் கூப்பிடத் தலையசைத்து மறுத்து விட்டான்.

'அற்புதராஜ்'- அவனுக்கு ரொம்பப் பிடித்துப்போய்விட்டது. அவர் இதமாக நெஞ்சைத் தொடுவது மாதிரி பேசினார். அவன் படிக்கும் வகுப்பைப்பற்றிக் கேட்டார். 'தனபாக்கியம் டீச்சர் தானே?' என்றதும், 'சாருக்கு எல்லாம் தெரிகிறதே' என்று நினைத்துக்கொண்டான். அவனுக்குத் தாள முடியவில்லை. மெல்லத் தலையை உயர்த்திப் பார்த்தான். சாரைப்பற்றி எல்லாரும் சொல்லுவார்கள். அவர் யார்கிட்டேயும் பேச மாட்டாராம்; 'அன்னைக்கு ராஜகுமாரி டீச்சர் மூணாம் கிளாஸ் வேலுசார் கிட்டே கேட்டாங்க. 'புது வாத்தியார் என்ன ஊமையா?'ன்னு. வேலு சாருக்குப் பொறாமை; கண்ணு ஜிவுஜிவுன்னு செவந்து போச்சு. 'எங்கிட்டப் படிச்சப் பய; எட்மாஸ்டரா வரப்போறான். அதான் திமிர் வந்துடுச்சு' என்றார். அது பொய்; சுத்தப் பொய்; வேலு சாருக்கு அதான் வேலை. எப்பப் பார்த்தாலும் யாரைப் பத்தியாவது ஏதாவது பேசிக்கிட்டே இருப்பார். சார் நீங்க சொல்றது பொய்னு சொல்ல வாய்கூட வந்துடிச்சு. சொன்னா, காதைப் பிடிச்சு முறுக்கி, நாய்க்குட்டியைத் தூக்கி சொரணை பார்க்கலே- அது போலத் தூக்கி, தலையிலே நச்சுனு கொட்டுவார். இல்லாட்டா மணிக்கட்டிலே பிரம்பாலே பத்தடி அடிப்பார்; அடி சுளீர் சுளீர்ன்னு விழும்; அதனாலே ஒன்னும் பேசலே; நினைவின் திரைகள் அகன்றன.

'சார் உங்களுக்கு ரொம்பத் திமிரா சார்?'

முன்னே சென்று கொண்டிருந்த அற்புதராஜ் அப்படியே நின்றார். காதிலே விழுந்த சொற்கள் ஒரு கணம் நினைவிற்கு வரவில்லை.

அவன் சாரைப் பார்த்துக்கொண்டே நின்றான். முகத்திலே ஒரு திருப்தி. 'அப்படியெல்லாம் இல்லே, எல்லாம் சுத்தப் பொய்' என்று தெரிந்து, உண்மை நிரூபணம் ஆகிவிட்டதால் ஏற்பட்ட ஓர் ஆனந்தம்.

'என்ன?'

'உங்களுக்கு ரொம்பத் திமிரா சார்?'

'அப்படீன்னா?'

'ராஜகுமாரி டீச்சர் கிட்டே, வேலு சார் உங்களுக்கு ரொம்பத் திமிர்னு சொன்னாங்க. எனக்கு அப்பவே தெரியும் சார், அது பொய்யினு. மூஞ்சிக்கு நேரேயே கேக்கணும்னு கோபம் கோபமா வந்திச்சி; ஆனா தவறுகள் இல்லையா? சார்?' என்று கேட்டு விட்டு அவரை நிமிர்ந்து பார்த்தான்.

அற்புதராஜ் அவன் கைகளை இறுகப் பற்றிக் கொண்டு ஏறெடுத்துப் பார்த்து லேசாக முறுவலித்தார்.

பிடிபடாத படபடப்பு. எங்கிருந்தோ கோபம் ஆத்திரம் எல்லாம் குபுகுபு வென்று பெருகிப் பெருகி வருகிறது.

அவருக்குத் தெரியும். 'தான் வேலைக்கு வந்த அன்றே முக்கால்வாசி ஆசிரியர்கள் தன்னை விரும்பவில்லை; தனியாகப் பிரிந்து சென்று விட்டார்கள்' என்பது.

'உனக்கு என்ன தோணுது?' அற்புதராஜ் குனிந்து மெல்லிய குரலில் வினவினார்.

'நீங்க ரொம்ப நல்ல சார்.'

சார் சிரித்தார்.

'இல்லே; இந்த சார் ரொம்பக் கெட்ட சார்தான். கிளாசுக்கு வந்து ஒரு நாள் பார்.'

தங்கையா சிரித்தான். அதெல்லாம் பொய். வேணுமென்று அவனுக்காகவே சொல்வது மாதிரி ஒரு நினைப்பு. இப்படி யெல்லாம் சிரித்துக்கொண்டு யார் பேசுவாங்க? தனபாக்கியம் டீச்சர், காமு டீச்சர், வேலு சார், எம்.கே. டீச்சர்-ஒருத்தரும் பேசமாட்டார்கள். அப்படிப் பேசினாலும் ஒரு வாட்டியும் சார் பேசறதுபோல இருக்காது. சாரின் குரல் அழுந்திக் காதுக் குள்ளேயே குசுகுசுக்கறதுபோல இருக்கும். சார் சிரிக்கறதே ஒரு தனியழகு; சிங்கப்பல்லு லேசாத் தெரிய ரொம்ப இதமான சிரிப்பு.

அக்காவுக்கப்புறம் சார்தான்; அக்கா சிரிக்கிறதைப் பார்த்துக் கிட்டே இருக்கலாம். சப்தமில்லாம, உடல் குலுங்காம பூப்பூவா

சிரிக்கும்; சார் அப்படியும் இப்படியும் தலையசைத்தாலும் மத்தபடி சிரிக்கிறதெல்லாம் அக்காதான்.

அன்றைக்கு சார் சிரித்தது கூட, அவனுக்குப் பசுமையாக நினைவில் இருக்கிறது. புளியமரத்தடியில் பத்துக்குத்து ஆடிக் கொண்டிருந்தவன் நிமிர்ந்து பார்த்தபோது, சார் சிரித்தவாறு நின்று கொண்டிருந்தார். மனம் திக்கென்றது; அப்பீட் எடுக்க வில்லை; சாட்டையைப் பையில் அவசரம் அவசரமாகத் திணித்துக் கொண்டு, 'சார்' என்றான். அவர் அப்பொழுதும் சிரித்துக் கொண்டிருந்தார்; தோளில் துப்பாக்கி.

'வாங்க சார்.'

'புறப்படலாமா?'

'தோ, சார்.'

அற்புதராஜுக்கு வேட்டையிலே தனி விருப்பம். எதையாவது சுடவேண்டும். படீர்படீரென்று துப்பாக்கி முழங்க வேண்டும். தாத்தாவிடமிருந்து வந்த பழக்கம். அவர் சொல்லிக்கொடுத்தது. துப்பாக்கி அவரளித்த பரிசுதான். ரொம்பப் பழையது; பல வேட்டைகளைக் கண்டது. தோள் பட்டையில் சாற்றிப் பிடித்தால், எதிரேயிருக்கும் உயிரை வாங்கிவிடும். லாவகம், நெளிவு எல்லாம் தாத்தாவின் அனுபவத்திலிருந்து பெற்றது. இரண்டு வருடத்திற்கு முன்னே கல்லூரி விடுமுறையில் வந்திருந்தபோது தாத்தா ஊரில் இல்லை. மாணிக்க ஆசாரி உலைக்களத்தில் நல்லபாம்பு என்று ஓடிவந்தார்கள்.

அப்பொழுதுதான் அற்புதராஜ் தன்னந்தனியாகத் துப்பாக்கியை எடுத்தார். மனத்தில் தைரியம். சரியாகச் சுட்டு விடலாம் என்ற நம்பிக்கை. உலைக்களத்தை நோக்கிச் சென்றார். கிட்ட நெருங்க முடியவில்லை. படத்தை விரித்துக் கொண்டு மேலேயெழும்பி நின்று பாம்பு ஆடியது. அற்புதராஜ் எட்டியே நின்றார். துப்பாக்கி தோளில் சாய்ந்தது. தாத்தாவின் யோசனை இல்லாமல் சுடுவது அதுதான் முதல் தடவை. கை கொஞ்சம் நடுங்கியது. எங்கே குறி தப்பிடுமோ என்ற பயம், யார் யாரோ கூச்சலிட்டார்கள். ஆளுக்கொரு யோசனை. இருந்தாலும் குண்டு தப்பவில்லை. பாம்பு கிர் கிர் என்று சுற்றிக்கொண்டே போய் சுவற்றில் மோத, தலை பஞ்சாய்ப் பறந்தது. அதுதான் முதல் வேட்டை. பெரிய கூட்டத்திலிருந்து குறி தவறாது சுட்டுப் புகழ்பெற்று விட்டார். தாத்தா அதனைக் கேள்விப்பட்டதும்

உள்ளம் பூரித்துப் போனார். நரையோடிய மீசையை ஒரு பக்கமாகத் தள்ளி விட்டுக்கொண்டு லேசாக நகைத்தார்.

'கொக்கு குயிலெல்லாம் இனிமே ரொம்ப சாப்பிடலாம்னு சொல்லு!'

அற்புதராஜ் தலையை அசைத்துக் கொண்டு முறுவலித்தார்.

படிப்பு முடிந்து வந்ததிலிருந்து, வேட்டைதான் பொழுது போக்கு; கொஞ்ச நாட்கள் எதிர்வீட்டு அந்தோணி கூடச் சென்று கொண்டிருந்தான். அவன் நின்று போன சமயத்தில்தான் தங்கையா பழக்கமானான்.

'போகலாமா சார்?' சார் அவனிடம் நேற்றே சொல்லி இருந்தார்; காவிரியைக் கடந்து சுடுகாடு, வெட்டாறு எல்லா வற்றையும் தாண்டிக் கரும்புத் தோட்டடத்தோடே நெய் வாசலுக்கு வேட்டைக்குப் போவதாக. ஆனால் விளையாட்டிலே அவன் மறந்து போய்விட்டான். சாரைப் பார்த்ததுந்தான் எல்லாம் அவன் நினைவிற்கு வந்தது.

சைக்களை எடுத்துக்கொண்டு போகமுடியாது. அவையாம் பாள் தோட்டத்தில் குயில் இருப்பது சரியாகத் தெரியாது. பெரிய தோட்டம்; ஒரே மரமட்டைகள். அந்தி கருக்கு முன்னேயே இருட்டிவிடும். டார்ச் இருந்தால் சௌகர்யம். புறப்படும்போது சாருக்கு மறந்து போய்விட்டது. தாத்தாவுக்குத் தெரிந்தால், பகபக வென்று பெருங்குரலில் நையாண்டி தலங்க நகைப்பார்.

'சைக்கிளை எங்க வீட்டிலே போட்டுடுங்க சார்.'

சைக்கிளை அவரிடமிருந்து வாங்கித் தள்ளமுடியாமல் தள்ளிக்கொண்டு உள்ளே போனான் தங்கையா.

சைக்கிளை உள்ளே வைத்துவிட்டு டார்ச்சைத் தேடிப் பார்த்தான். அப்பாவின் பெரிய டார்ச் அகப்படவில்லை. ஹாலிலிருந்து காமரா அறைக்கும், காமரா அறையிலிருந்து ஹாலுக்குமாக ஓடிக்கொண்டிருந்தவனை நிறுத்தி அக்கா சொன்னாள், 'சார் நிக்குறாங்க, வந்து குந்தச் சொல்லு.' நாற்காலியைத் துடைத்து ஹாலில் கொண்டு வந்து போட்டாள்.

ஒரே பாய்ச்சலாகத் தெருவுக்கு ஓடினான். 'சார் வந்து குந்துங்க சார். ஒரு நிமிஷத்திலே டார்ச்சு எடுத்தாந்துடறேன்!'

'பரவால்லே, டார்ச் வேணாம்.'

'இல்லே சார்; நீங்க வந்து குந்துங்க சார்.'

'நான் இங்கேயே நிக்கறேன். நீ போய் வா.'

அவன் சாரை ஏறிட்டுப் பார்த்தான். அப்புறம் உள்ளே சென்றான்.

'சார் வர்லியா?'

'அங்கயே நிக்கறாங்களாம்.'

'அங்க நிக்கக்கூடாதுன்னு சொல்லு.'

அற்புதராஜ் பார்வை சற்றே திரும்பியது. சன்னல் கம்பிகளிடையே புதைந்திருந்த முகம் சட்டென்று மறைந்தது. அதனுடைய கவர்ச்சியும், அதரங்களில் படர்ந்த புன்னகையும் நினைவை விட்டு அகலவில்லை. அவர் தலைகுனிந்து கொண்டார். மங்கும் வெயிலில் கோலமிட்டது மாதிரி திடீரென்று நிழல் படர்ந்தது. வானத்தை நிமிர்ந்து பார்த்தார். வெளவால் மீன் சிறகு போலக் கொக்குகளும் மடையான்களும் பறந்து சென்றுகொண்டிருந்தன. பின்னும் முன்னுமாக இரண்டு கூட்டங்கள் வந்தன. கிழக்கே வேட்டைக்காரன் வந்துவிட்டான் என்பது தெரிந்தது. எங்கேயாவது துப்பாக்கி முழக்கம் கேட்டால், அதற்கு எதிர்த் திசையில் இப்படித்தான் கொக்குக் கூட்டமும் பறக்கும்.

'மடையான் மடையான் பூப்போடு
மடைக்கு ரெண்டு பூப்போடு
அறுவா மணை தீட்டித் தாறேன்
அதுக்கு ரெண்டு பூப்போடு!'

சின்னப் பிள்ளைகள் ஒரே குரலில் ராகமிட்டு நகங்களைத் தேய்த்துக் கொண்டிருந்தார்கள்.

'சார்! பெரிய டார்ச் விளக்கோடு வந்து நின்றான் தங்கையா. அவனுக்குப் பின்னே கோபால்; சற்றே உயரம். நீள நீளமான கைகள். அவன் கரங்குவித்து சாருக்கு வணக்கம் செலுத்தினான்.

'நம்ப கோவாலு, சார்; ஏழாம் கிளாசு.'

சார் அவனைத் தட்டிக் கொடுத்தார்; ரொம்ப நாட்கள் சிநேகிதம் மாதிரி சாரோடு கோபால் பேசினான்.

அவையாம்பாள் தோட்டத்தில் நான்கு குயில்களைச் சுட்டுக் கொண்டு ஆற்றங்கரைக்குச் சென்றார்கள்; ஆற்றிலே வெள்ளம் கரைபுரண்டோடிக் கொண்டிருந்தது. பெரிய பெரிய பூவரசு மரமெல்லாம் கிளையோடு உருண்டு கொண்டிருந்தன. சுடுகாட்டு மூங்கிற்பாலம் மூழ்கிவிட்டது; அங்கங்கே ஒரொரு குச்சி. ஜனங்கள் கூட்டம் கூட்டமாக அப்படியே தேங்கி நின்றிருந்தார்கள்.

திட்டம் சிதைந்துபோய்விட்டது. நெய்வாசலுக்குப் போக வழியில்லை. இன்னும் நான்கைந்து நாட்களுக்குக் காவிரியில் தண்ணீர் குறைகிறவரையில் அக்கரைக்குப் போக முடியாது.

அற்புதராஜ் இரு கரைகளையும் மாறிமாறிப் பார்த்து விட்டுச் சொன்னார், 'அப்பத் திரும்ப வேண்டியதுதான்.'

கோபால் தன்னை மறந்து லேசாகச் சிரித்தான்.

'இது என்ன சார் தண்ணி? ஒரே பாய்ச்சல்லே அக்கரைக்குப் போயிடலாம்' என்றான்.

சார் அவனைத் திரும்பிப் பார்த்தார். தண்ணீருக்கு அஞ்சும் பிள்ளையல்ல. இக்கரையிலிருந்து கண்மூடிக் கண் திறப்பதற்குள் அக்கரைக்குப் போய்விடுவான் என்பது தெரிந்தது.

'துப்பாக்கி?'

'நான் நனைக்காம தூக்கியாந்துடுவேன் சார்!'

தங்கையா அவன் காலை மெல்ல அழுத்திச் சாடை காட்டினான். விஷயம் முழுவதும் புரிந்துவிட்டதுபோல் வெட்கத்தோடு தலையைக் கவிழ்த்து கோபால், 'வாங்க சார், ரொம்பத் தண்ணி' என்றான்.

மூவரும் ஆற்றங்கரை வழியே திரும்பினார்கள். எங்கெங்கே குயில் வரும்; கொக்கு எப்பொழுது, எங்கே வரும் என்பதைப் பற்றி கோபால் நிறையச் சொல்லிக் கொண்டு வந்தான்.

மஞ்சள் கொல்லை, பலாத்தோப்பு, அவையாம்பாள் தோட்டம்-இங்கெல்லாம் குயில் ரொம்ப வருமாம். சாமியார் தோப்பில் கிளிமூக்கு, பச்சரிசி மாமரத்தடியில் சின்னக்குளத்தில் கொக்கு வரும். கொக்கைவிடக் குயிலைப்பற்றி அவன் உற்சாகமாகப் பேசினான். குயிலில் இரண்டுவகை. ஒன்று சுத்தக் கறுப்பு; அசல் காக்கைதான். ஆனால் கொஞ்சம் சிறியது. சட்டென்று வித்தியாசம் தெரியாது. அது பெண். இன்னொன்று மேலெல்லாம் புள்ளிப் புள்ளியாக இருக்கும்; ரொம்பக் கறுப்புமில்லை; மங்கிய சிவப்பு. பழுப்பு நிறமென்று சொல்லலாம். அது புள்ளிக் குயில்-ஆண்.

கோபால் வீட்டிற்குப் பின்பக்கம் பலாத்தோப்பு. பெரிய தோப்பு; பலாப்பழக் காலத்தில் மரமெல்லாம்-மரமென்ன, வேரில் கூடப் பழம் தொங்கும். பார்த்தசாரதி அய்யங்கார் தோப்பு; கண்டவனையெல்லாம் கூப்பிட்டுப் பழம் கொடுப்பார். அங்கேதான் அடுத்த வாரம் வேட்டை என்று தீர்னித்துக் கொண்டே ஆற்றங்கரையை விட்டுச் சாலையில் இறங்கினார்கள்.

ஒரு செம்போத்துக் குரல் கணீரென்று கேட்டது. முன்னே சென்று கொண்டிருந்த அற்புதராஜ் இரண்டடி பின் வாங்கி அரசமரத்தைப் பார்த்தார். செம்போத்து தெரியவில்லை. ஆனாலும் அதன் குரல்மட்டும் விட்டுவிட்டுக் கேட்டுக் கொண்டே இருந்தது. தங்கையாவும், சார் கூடவே மரத்தைச் சுற்றிச் சுற்றி வந்தான். வானுயர்ந்த மரம்; அடி மரத்தைக் கட்டிப் பிடிக்கப் பத்துப்பேர் வேண்டும். மரத்திற்கு முன்னே ஒரு சூலம். சூலத்தில் போட்டிருந்த நீண்ட மாலை வாடிக் கிடந்தது. அரசமரத்திலே கிளை வெட்ட மாட்டார்கள்; ஆட்டுக்குக்கூட ஒரு இலை கிள்ளமாட்டார்கள். அது வால் முனி மரம்; வால் முனியைப்பற்றி எல்லோரையும்விட கோபாலுக்கு ரொம்பத் தெரியும். வானத்திற்கும் பூமிக்கும் சரியாக, விடிவதற்கு முன்னே மேலத் தெரு வழியாக கலீர் கலீரென்று சலங்கையொலிக்க நடந்து போவதைப்பற்றி அவன் பாட்டி சொல்லியிருக்கிறாள். வால்முனி உறையும் மரத்தில் வேட்டையாட சார் போவதைப் பார்த்து அவன் திடுக்கிட்டுப் போனான். செம்போத்து, சார் கண்ணிலே பட்டு விட்டது. சார் குனிந்து குனிந்து போய்ப் பனைமரத்தின் கீழ் துப்பாக்கியை மேலே உயர்த்திச் சரியாக நின்றார்.

'சார்!' அவன் குரல் கணீரென்று கட்டளையிடுவது மாதிரி இருந்தது. அற்புதராஜ் சற்றே தலையைத் தாழ்த்திப் பார்த்தார்.

'சார், இங்கே வேட்டையாடக் கூடாது சார்!'

'வால் முனி மரம் சார்; இங்கே யாரும் சுடமாட்டாங்க சார்'

அற்புதராஜ் அந்தச் சிறிய பையனை ஊடுருவிப் பார்த்தார். தன்னுடைய தீர்மானமான வேண்டுகோளை அழுத்தமாகவே வெளிப்படுத்திவிட்டான்.

முதல் நாளே அவன் சாரிடம் சண்டை போட்டுக் கொண்டுவிட்டான். அவனுக்கு ரொம்பத் திமிர்; சார்ங்கிற மதிப்பு இல்லே. சேர்த்துக் கொண்டிருக்கக்கூடாது' என்று தனக்குத்தானே சொல்லிக்கொண்டான் தங்கையா. சாருக்கு அவமானம் நேர்ந்து விட்டது மாதிரி, அவன் துயருற்றான். ஆனாலும் சார் ரொம்பப் பெருந்தன்மையோடு கோபால் வேண்டுகோளை ஏற்றுக் கொண்டார்.

வால்முனி மரத்தைத் தாண்டி வரும்போது அவன் சொன்னான்: 'சார், இது ரொம்ப சக்தி வாய்ந்த தெய்வம் சார், நெய்வாசலுக்குப் போற வழியிலே, கூந்தப் பனமரத்துக்கு அன்னான்டே இலுப்ப மரத்திலே இருக்கிற முனியும் இதுவும்

ஒண்ணு சார்; இதுவும் நெய்வாசலுந்தான் சார் அதன் எல்லை. இங்கோர்ந்து அங்கேயும், அங்கோர்ந்து இங்கேயும் போய் வந்துகிட்டிருக்கும்; பொழுது விடிஞ்சுட்டா எங்கயாச்சும் தங்கிடும் சார்!'

அற்புதராஜ் ரொம்ப கவனத்தோடு, உன்னிப்பாகக் கேட்டார். அவன் பேயைப்பற்றி, காத்தவராயனைப்பற்றி, அய்யனாரைப் பற்றி, அற்புதமான பாவத்தோடு விவரித்தான். அவருக்குப் புது அனுபவம்; அந்தமாதிரியெல்லாம் யாரும் சொன்னதில்லை. தன்னுடைய அபிப்ராயத்திற்குக் கொஞ்சமும் காத்திராமல் சொந்த நம்பிக்கைகளோடு ஒவ்வொன்றையும் விவரித்தான். வேட்டை அநேகமாக முற்றுப்பெறாமல் போனதுகூடத் தெரியா மல் போய்விட்டது. வீட்டிற்குத் திரும்பும் சமயத்தில்தான் தங்கையா கேட்டான், 'அடுத்த வாரம் எங்கே சார்!'

'அது என்னடா கேள்வி? பலாத் தோப்புதான்; என்ன சார்?'

சார் தங்கையாவை நோக்கிப் புன்னகை பூத்தார்.

கோபால் ஒவ்வொரு நாளும் காலையிலும் மாலையிலும் போய்ப் பார்த்து வைத்துக் கொண்டான். புன்னை மரத்திலே ஒரு குயில்; பிரப்பங்காட்டிற்குப் பக்கத்திலே நுணா மரத்திலே இரண்டு; புள்ளியும், கறுப்புமாக-ஆணும் பெண்ணுமாக. அவன் எண்ணிக்கொண்டே இருக்கையில் சிறகடிக்காமல் விர்ரென்று இன்னொன்று நெட்டிலிங்க மரத்தில் வந்தமர்ந்தது; அதைத் தொடர்ந்து இன்னொன்று. அவன் எண்ணிப் பார்த்தான். இங்கு மட்டும் ஆறு. தாழைக்குத்துப் பக்கம் போனால் கணக்கே கிடையாது. கள்ளுக் குருவி, நாணத்தாங் குருவி கணக்கா குயில் ரொம்ப இருக்கும்.

தங்கையாவை அழைத்துக்கொண்டு வந்து, தோப்புப் பூராவும் சுற்றிக் காட்டினான் கோபால். பெரிய தோப்பு முழுவதும் பாதை தப்பாமல் எப்படிப் போகிறான் என்பது தங்கையாவுக்குப் பிடிபடவில்லை. அதைப்பற்றிக் கேட்டதும் அவன் சிரித்தான். 'எல்லாம் பழக்கந்தான், நான் எம்மா நாளா இங்க சுத்திகிட்டிருக்கேன் தெரியுமா' என்றான்.

ஞாயிற்றுக்கிழமை நேராகத் தோட்டத்திற்குத்தான் வந்தார் கள். குயில்கள் கூவி அழைத்தன. அற்புதராஜ் கண்களைச் சிமிட்டி தங்கையாவை நோக்கிப் புன்னகை பூத்தார். மகிழ்ச்சி தாள முடியவில்லை. பூரித்துப் போய் விட்டான்.

குயில் புன்னை மரத்திலிருந்தது. அற்புராஜ் சற்றே மறைந்து நின்று துப்பாக்கியை மேலே தூக்கினார். இரண்டு பேரும் விழியிமைக்காமல் மெல்ல மெல்லச் சிறகை அசைத்துக் கொண் டிருக்கும் புள்ளிக் குயிலையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஒரு வினாடி பொறுத்து ஓர் ஓசை; படீரென்று துப்பாக்கி வெடித்தது. மேலே விட்ட கல் மாதிரி குயில் பொத்தென்று கீழே விழுந்தது. கோபால் ஓடியெடுத்தான். வயிற்றில் இரத்தம் கசிந்து கொண் டிருந்தது. மென்மையான பஞ்சு போன்ற சின்னஞ் சிறிய சிறகுகள் பிய்ந்து போய்விட்டன.

குயிலுக்கு அவ்வளவு தந்திரம் தெரியாது; ஒரு குண்டு வெடித்தால், கொக்கு. மடையான் மாதிரி மேலே எழும்பி வெகுதூரம் போகாது. ஆபத்தையே உணராத பறவை அது. குண்டு சப்தம் கேட்டால் பத்து மரங்கள் தள்ளிப்போய் உட்கார்ந்து கொண்டு சோகமாக, மனமுருகிக் குரல் கொடுக்கும்.

அவர்கள் கொஞ்சம் கொஞ்சமாக முன்னேறி, பச்சரிசி மாமரத்திற்கு வந்துவிட்டார்கள். மரத்தை ஒட்டிப் பெரிய அல்லிக்குளம்; குளத்திலே அல்லி இலைகளில் குந்தியிருந்த மடையான் கொக்கு படபடவென்று சிறகடித்துக்கொண்டு மரத்தில்போய் அமர்ந்தன. கோபால் அதைப் பார்த்துவிட்டுச் சிரித்தான்.

'இன்னைக்கு நீங்க வேணாம்; வேணுங்கிறபோது சுட்டுக்கிறோம். நீங்க ஒண்ணும் அபூர்வமில்லே!'

தண்ணீருக்குள் திடீரென்று வீழ்ந்து, மீனைக் கொத்திக் கொண்டு போகும் மீன்கொத்தியையே பார்த்துக் கொண்டிருந்த சார், பக்கென்று சிரித்துவிட்டார்.

'சார் குயில்!'-உச்சிக் கிளையில் உட்கார்ந்திருந்த குயிலைப் பார்த்து விட்டுச் சொன்னான் தங்கையா. சார் மேலே பார்த்தார். குயில் உச்சியிலிருந்தது. சாதாரணமாக அவ்வளவு தூரம் குயில் போவதில்லை; ரொம்பக் கலவரமுற்றுப் போய்விட்டது. தப்பித்துக் கொள்ள ஆசை. கூவக்கூட பயந்து கிளையில் ஒடுங்கி உட்கார்ந்திருந்தது. சார், கீழ்க்கிளையைப் பிடித்துக் கொண்டு மேல் கிளைக்குத் தாவினார். வசதியாக ஒரு கிளையில் சாய்ந்து கொண்டு துப்பாக்கியை மேல் நோக்கிப் பிடித்தார். குயில் எங்கே விழுமென்று பார்த்துக்கொண்டே இருந்தார்கள். ஆனால் எதிர் பாராதவிதமாக சிறகைப் படபட வென்று அடித்துக் கொண்டு போய்க் குளத்தில் விழுந்தது. உயிர் இன்னும் போகவில்லை.

தலையறுத்துப் போட்ட கோழி மாதிரி எழும்பியெழும்பி அல்லி இலைகளில் விழுந்து புரண்டு கொண்டே இருந்தது. சோகம் கப்பிய காட்சி. எத்தனை துரதிர்ஷ்டமான சாவு. உடல் பிய்ந்து போவது மாதிரி கணமும் ஓயாது, சிறு இறகுகளைப் பறக்க அடித்துக் கொண்டு கூவியது.

'குயில் நடுக்குளத்திலே விழுந்துடுச்சே.' சார்தான் சொன்னார்

'இருந்தா என்ன சார், இதோ நான் எடுத்தாந்துடறேன்.'

சட்டையைக் கழட்டி, தங்கையாவிடம் கொடுத்துவிட்டுத் தண்ணீரில் இறங்கினான் கோபால். முன்னே பரந்து கிடந்த, வழியை மறைத்த அல்லிக் கொடியைத் தள்ளிக்கொண்டே குயிலை நோக்கி முன்னேறினான். குயிலின் உயிர் மெல்ல மெல்லப் போய்க் கொண்டிருந்தது. ஆனாலும் படபடப்பு நிற்கவே இல்லை. பந்து மாதிரி எழும்பி இன்னொரு இலையில் வீழ்ந்தது. அதைப் பார்த்ததும் சிரித்து விட்டான் கோபால். குண்டுபட்டு விழுந்த எத்தனையோ குயிலை அவன் பார்த் திருக்கிறான். ஆனால் ஒன்றுகூட உயிரோடு அத்தனை வலுவாக, உக்கிரமாகப் போராட்டம் நிகழ்த்தியதில்லை. குண்டுபட்டதும் உயிர், ஊசி குத்தின பலூன் மாதிரி பொசுக்கென்று போய்விடும்.

நான்கு நாட்களுக்கு முன்னே, நெட்டிலிங்க மரத்திலேயிருந்த குயில் குண்டுபட்டதும், பூவரசு மரக்கிளையிலேயே தொத்திக் கொண்டு போய் விட்டது. உச்சிக்கிளை; ரொம்பச் சிறிய கிளை. ஏறியெடுக்க ஒருத்தருக்கும் தைரியமில்லை. சார் சுற்றுமுற்றும் பார்த்தார். இன்னொரு குண்டு சுட்டுக் கீழே தள்ளி விடலாம் என்று ஒரு நினைப்பு. துப்பாக்கியிலே மருந்து போட்டுக் கிட்டிக்க ஆரம்பித்ததும் கோபால் எதற்கென்று துருவித் துருவிக் கேட்டான். 'செத்த குயிலைச் சுட' என்றதும் அவனுக்குச் சிரிப்பு வந்துவிட்டது. பக்கென்று பெரிதாகச் சிரித்தான்.

'இதோ சார் ஒரு நிமிஷத்திலே கொண்டாந்துடறேன்!' கோபால் தாழ்ந்த கிளையைப் பற்றி ஏறினான். கிளைக்குக் கிளை தாவி உச்சிக்குப் போகையில் சார் கத்தினார். 'பத்திரம், மேலே ஏறாதே, கையைப் பிடிச்சிருக்கியே அந்தக் கிளையை ஆட்டு; குயில் விழுந்திடும். ஜாக்கிரதை! கெட்டியா பிடிச்சுக்கோ.'

அவர் பக்கம் திரும்பி லேசாகப் புன்னகை பூத்தான் கோபால்.

'பெரிய கோயில் தங்கக் கலசம் நல்லாத் தெரியுது சார்' என்று சொல்லிக்கொண்டே இன்னொரு கிளைக்குத் தாவினான். கீழே ஆறு; மேலே குயில். கிளை முறிந்தால் ஆற்றிலேதான் விழ

வேண்டும். நான்கு வயதிலிருந்து காவிரியில் விழுந்து வளர்ந் திருக்கிறான். எத்தனையோ சுழல், மடு எல்லாவற்றையும் பார்த்தாகிவிட்டது. கீழ்க்கிளையிலிருந்து ஒரு தாவுத் தாவி குயிலைப் பற்றிக் கொண்டு கரணம் போட்டான். சார் அப்படியே திகைத்துப் போய்விட்டார். 'ஆ' என்று தங்கையா கூச்சலிட்டான். தண்ணீரிலே விழுந்த இரண்டு நிமிஷத்திற் கெல்லாம் இடது கையில் குயிலோடு கரையேறி வந்தான் கோபால். அவன் அதரங்களில் புன்னகை நெளிந்தோடிக் கொண்டிருந்தது.

மாலைவேளைக் குளிர் வந்து விட்டது. குயிலைத் தங்கையாவிடம் கொடுத்துவிட்டு, மஞ்சள் வெய்யிலில் போய் நின்று கொண்டான்.

சாருக்கும் அவனை ரொம்பப் பிடித்துப் போய்விட்டது. எப்பொழுதும் அவன் அவர் கூடத்தான். லீவு விட்டால் அவர் வீட்டில் இருப்பான். சாப்பாடு கூட சார் வீட்டில்தான். ஆனால் அவன் கவுச்சி சாப்பிடமாட்டான். அதைப்பற்றி யாராவது கேட்டால் சிரிப்பான். அவன் வீட்டில் எல்லோரும் கவுச்சி சாப்பிடுவார்கள். ஆனால் அவன் மட்டும் நினைவு தெரிந்த திலிருந்து சைவம். அம்மா அவனுக்காகத் தனியாகக் குழம்பு வைப்பாள். சார் கூட முதலில் அவன் சொன்னதும் நம்பவில்லை. அப்பறந்தான் அது நிஜமென்றதும் ஆச்சரியப்பட்டார். 'முரண் பாடுகள் கொண்ட விசித்திரமான பையன்' என்று சொல்லிக் கொண்டார். சில நாள் அவர் வீட்டிலேயே படுத்து விடுவான். பாதி ராத்திரியில் எழுந்து பார்த்தால் இருக்க மாட்டான். 'எங்கே போனாய்' என்று கேட்டால் 'மாட்டுக்கு வைக்கல் போடாம வந்துட்டேன் சார்; அதுக்குத்தான் போனேன்' என்பான்.

இரண்டு வருடமாகப் பொத்திப் பொத்தி ஒருத்தருக்கும், தங்கையாவுக்குக்கூட காட்டாமல் வைத்திருந்த வௌவால் அடிக்கும் ஒற்றைத் தென்னை மரத்தைக் காட்டினான். குட்டைத் தென்னை; இருபதடிதான் இருக்கும். இலுப்பை காலத்தில் அங்கேதான் இரண்டு வௌவால் பழமடிக்கும். காலையில் போனால் மரக்காலில் முக்கால் மரக்கால் இருக்கும். இலுப்பைக் கொட்டை எல்லோரும் ஆறு மரக்கால் விற்றால் கோபால் மட்டும் ஒரு கலம் விற்பான். அது ரகசியம்; யாருக்கும் தெரியாதது. அந்த ரகசியத்தைத்தான் இன்றைக்கு சாரிடம் விவரித்தான். நட்பு நிறைந்த மனத்தோடு உற்சாகம் பொங்கிப் பெருக வௌவால் வேட்டைக்கு அற்புதராஜை அழைத்தான்.

இரவு பத்து மணிக்குமேல் வௌவால் வேட்டை தொடங்கியது. அதுதான் நேரம். பத்திலிருந்து மூன்று மணி வரைக்கும் வௌவால் சடசடவென்று பறந்து வந்து கொண்டிருக்கும். நொச்சிப் புதரையும், ஓணான் கொடியையும் தள்ளிக் கொண்டு தங்கையா விளக்கை அடிக்க சாருக்குப் பின்னே கோபால் சென்றான். அற்புதராஜ் மாறி மாறி நின்று பார்த்தார். தங்கையா அவர் சொல்லியபடியெல்லாம் விட்டுவிட்டு டார்ச்சை அடித்தான். பழக்கமில்லா வேட்டை அது. இருளில் எப்படிச் சுடப் போகிறார் என்பது தெரியாமல் தவித்துக் கொண்டிருந்தார்கள்.

படபடவென்று ஒரு வௌவால் சிறகை அடித்துக் கொண்டு வந்து உட்கார்ந்தது. தென்னை மட்டைகள் லேசாக அசைந்தாடின. தங்கையா டார்ச்சடித்தான்.

'அதோ சார்!' உற்சாகத்தோடு கூச்சலிட்டான் கோபால்.

'சார், சார், பாருங்க எம்மாம் பெரிசு!'

'சப்தம் போடக் கூடாது' என்று அவனை அடக்கினார்.

டார்ச்சு ஒளி வீசியது. இரண்டு வௌவால்கள்; பழந்தின்னி வௌவால்களில் கோபால் அவ்வளவு பெரியதைப் பார்த்ததே இல்லை. 'முக்கால் மரக்கால் கொட்டை போடுகிறதே அது இதுதானோ' என்று எண்ணமிடலானான்.

'சுடுங்க சார், சீக்கிரம்; பறந்துடப் போவுது!' சாரை அவன் தூண்டிவிட்டான். டார்ச்சு தங்கையாவிடமிருந்து கைமாறியது. சார் சொல்லியபடி கையசைக்காமல் நிலை குத்திட்டபடியே முழு வெளிச்சமும் வௌவால் மீது விழாமல் பிடித்தான். 'கோபால், வெளிச்சம் அப்படித்தானிருக்க வேண்டும்; நல்ல வெளிச்சத்தில் வௌவால் இருக்காது. ஏதோ ஆபத்தென்று பறந்துவிடும்!'-சார் பின்னால் இதையெல்லாம் அவனுக்குச் சொன்னார்.

அற்புதராஜ் மரத்தடியிலிருந்து வெளியே வந்தார். கோபாலுக்குச் சற்று அருகே வந்ததும் அவர் துப்பாக்கி உயர்ந்தது; ஒரு நிமிஷம் ஆழ்ந்த அமைதி. அப்புறம் படீரென்று துப்பாக்கி வெடித்தது. மரத்தோடு வழுக்கிக் கொண்டு இரண்டு வௌவால்கள் விழுந்தன. இரண்டும் அவனுக்குத்தான். சார் எடுத்துக் கொண்டு போகவில்லை. அதற்குப்பிறகு சுட்டதைக் கூட, அவர் வீட்டிற்குக் கொண்டு போகவில்லை. அவர்கள் எவ்வளவோ கெஞ்சிப் பார்த்தார்கள். சார் சிரித்துக்கொண்டே மறுத்துவிட்டார்.

அடுத்த நாள் இருள் பிரியும் முன்னே மரக்காலை எடுத்துக் கொண்டு கோபால் தென்னை மரத்தடிக்குச் சென்றான். ஒரு கொட்டை கூட இல்லை. அவன் திடுக்கிட்டுப் போய்விட்டான். அப்புறம் கொஞ்சம் கொஞ்சமாக அனைத்தும் நினைவிற்கு வந்தன. சாருக்கு சொல்லியிருக்கக் கூடாது என்று தோன்றியது. உடனே கன்னத்தில் போட்டுக் கொண்டான். தவறு செய்து விட்டதைப் போல மனம் குன்றியது. முற்றிலும் மாறான உணர்வுகள். தலைக்கு மேலே இனிமேல் ஒரு போதும் வௌவால் சிறகையடித்துக் கொண்டு போகாது. மரக்காலைக் கவிழ்த்து உட்கார்ந்து கொண்டான். ரொம்ப நேரம் தங்கையா வந்து கூப்பிடுகிற வரையிலும் அவன் அப்படியே அமர்ந்திருந்தான்.

மூன்று நாட்களுக்கப்புறம் அவனுக்கு வேறொரு மரம் கிடைத்து விட்டது. செங்கழுநீர் மரத்தில் வௌவால் அடிப் பதைக் கண்டுபிடித்தான். ஆனால் எட்டு நாட்களுக்குப் பிறகு சார் துப்பாக்கி குண்டுக்கு அந்த வௌவால் விழுந்தது, ஒரு பக்கத்து இறக்கையில்லாமல் குண்டு இறக்கையைப் பிய்த்துக்கொண்டு போய்விட்டதாக சார் சொன்னார்.

அன்றைக்கு தங்கையா, 'சார், எங்கக்கா ரெண்டு குயில் கேட்டுச்சு சார்' என்று கேட்டிருந்தான்.

அற்புதராஜ் தலையசைத்து மெல்லப் புன்னகை பூத்தார். ஓரோர் சமயம் தங்கையா வீட்டுப் பக்கமா அவர் போவார். அவன் அக்கா வாசலில் நின்றிருந்தால்,வெடுக்கென்று உள்ளே ஓடி விடுவாள். அவள் கேட்ட குயிலுக்காகத்தான் போய்க் கொண்டு இருந்தார்கள்.

ஆற்றங்கரையைக் கடந்து வெட்டாற்றுக்கு வந்தாகிவிட்டது. ஒரு குயில்கூடக் கண்ணில் தட்டுப் படவில்லை. போன இடமெல்லாம் கொக்கும் மடையானுந்தான். இரண்டு மணிப்புறா; செம்போத்தும் கூடப் பறந்து சென்றன. ஆனால் சார் ஒரு தோட்டா கூடச் சுடவில்லை. பொறுமையாக அலைந்து கொண்டிருந்தார். அவையாம்பாள் தோட்டத்தைத் தாண்டி மணிக் கிராமத்திற்கு வந்துவிட்டார்கள். எல்லாருக்கும் தெரியும். அது மண்வெளி; உழமண் பூமி, எட்ட எட்ட மரங்கள்; கொக்கு, குருவிகள் கூடக் குறைச்சல்தான்; குயில் அநேகமாக ஒன்று கூட இருக்காது.

'யாரு முகத்திலே விழிச்சமோ?' வருத்தத்தோடு சொல்லிக் கொண்டே வந்தான் கோபால்.

'அக்கா போகும்போதே எங்கேடா போறேன்னு கேட்டுச்சு; அதான்' என்றான் தங்கையா.

எல்லோருக்கும் முன்னே சென்றுகொண்டிருந்த அற்புதராஜ் நின்றார். பையன்களின் நிராசை நிரம்பிய பேச்சு முடிவுற்றது. அவர்கள் பார்வையும் புன்னை மரத்தை நோக்கிச் சென்றன. இரண்டு குயில்கள்; புள்ளியும் கறுப்புமாக; ஆணும் பெண்ணும். சார் துப்பாக்கியைத் தூக்கிப் பிடித்தார். நிச்சயம் ஒன்று விழும். எந்தப் பக்கமாக என்று நோட்டம் விட்டான் கோபால்.

ஆண் குயில் கீழ்க் கிளையிலிருந்து மேல் கிளைக்குத் தாவியது. குறி தப்பிவிட்டது. அற்புதராஜ் துப்பாக்கியைக் கீழே இறக்கினார். இரண்டடி பின்வாங்கி நெட்டிலிங்க மரத்தில் சாய்ந்தார். மேல் கிளைக்குத் தாவிய குயில் தலையசைத்து சன்னக் குரலில் கூவியது. ஆண் குயில் மேல் கிளையிலிருந்து சர்ரென்று வந்து பெண் குயிலோடு அமர்ந்தது.

சார் சாய்ந்தபடியே நின்றார். துப்பாக்கி மேலே உயரவில்லை. துப்பாக்கியைத் தோளில் மாட்டிக் கொண்டார்.

அன்றைக்கு ஒன்றும் வேட்டையில்லை; வெறும் கையோடு திரும்பினார்கள். அதுதான் முதல்தடவை. குயில் பக்கத்தில் இருந்தும் சார் ஏன் சுடாமல் விட்டார் என்பது இரண்டு பேருக்கும் விளங்கவே இல்லை. கோபால் பொறுத்துப் பொறுத்துப் பார்த்தான். அவனால் தாள முடியவில்லை. கடைசியாக சாலைக்கு வந்தப்புறம் 'ஏன் சார் குயிலைச் சுடாம விட்டீங்க' என்று கேட்டான்.

அற்புதராஜ் முறுவலித்தார்.

அடுத்த வாரம் சுட்ட நாலு குயிலையும் தங்கையாதான் எடுத்துக் கொண்டு போனான். அதிலே அவனுக்கு ரொம்பத் திருப்தி.

'உங்க சாரா நாலு குயிலையும் ஒரே நாளில் சுட்டாங்கன்னு அக்கா கேக்குது சார்...அதுக்கு ஒண்ணும் தெரியாது சார்...உங்க சார் நல்லா சுடுவாரா? எத்தனை தடவை குறி தப்பும்ன்னு கேட்டுது சார். அதுக்கு ஒண்ணும் தெரியாது சார்!'

அதற்கு அற்புதராஜ் பதில் சொல்லவில்லை.

பேசுவதைவிட சார் சிரிக்கிறதுதான் ரொம்ப. ஆனாலும் அவனுக்கு நினைவு வந்தது. ஒருநாள் சரஸ்வதி டீச்சர் என்னமோ இங்கிலீஷில் சொல்லிவிட்டுத் தலையைக் கவிழ்த்துக்கொண்டு

சிரிச்சாங்க. சார் கொஞ்சங்கூட சிரிக்கலே, அது ரொம்ப ஆச்சரியந்தான். அவர் பாட்டிற்கு எழுதிக் கொண்டேயிருந்தார். அதிலேர்ந்து சரஸ்வதி டீச்சர் சார் கிட்டே பேசறதில்லை.

தங்கையா வீட்டுப்பக்கம் வந்து விட்டால் சாருக்குச் சிரிப்பு வந்துவிடும். தலை குனிந்துகொண்டு சிரிப்பார். கண்கள் சன்னலை நோக்கி அலை பாயும். ஆனால் ஒரு நிமிஷம் அங்கே நிற்கமாட்டார். விர்விர் என்று நடைதான்.

சர்ச்சுக்குச் செல்லுகையில் தங்கையா ஓடி வந்து சொன்னான், 'உங்க சார் எதுக்குடா இப்படி ஓடுறார்ன்னு அக்கா கேட்டுச்சு சார். எனக்கு ரொம்பக் கோபம் வந்துடுச்சு; தினம்தினம் இப்படித்தான் உங்களைக் கேலிபண்ணுது. இன்னைக்கு சரியா மாட்டிகிச்சு; முதுகிலே நல்லா ஒரு குத்து விட்டுட்டு ஓடியாந்துட்டேன் சார். அதோ பாருங்க குனிந்து கொண்டே போறதெ' என்று அக்காவைக் காட்டினான்.

சார் கேட்டார்: 'அக்காவை அடிக்கலாமா?'

'அது உங்களை மட்டும் கிண்டல் பண்ணலாமா சார்?'

'கூடாதுதான்.' அற்புதராஜ் மெல்லத் திரும்பி அன்போடு அவன் கரத்தைப்பற்றிக் கொண்டார். ஆனால் அவனிடம் சொல்ல விரும்பியதையெல்லாம் அவர் சொல்லவில்லை. இரண்டு நாட்களுக்கு அந்தப் பக்கம் போவது நின்று போய்விட்டது. சர்ச்சில் அவள் உணர்த்திய ஆதரவான குறிப்புக்களால் அவர் கிளர்ச்சியுற்றார்.

மாட வீதியோடு போகையில் கிருஷ்ணன் வந்து சேர்ந்தான். அவன் ஆறாம் வகுப்பு. தங்களோடு அவனைச் சேர்த்துக் கொள்ள இருவருக்கும் விருப்பமே இல்லை. ஐயர் வீட்டுப் பையன் அதற்கெல்லாம் சரிப்படாது என்று ஒதுக்கினார்கள். ஆனாலும் சார்கிட்டே பசைமாதிரி எப்படியோ ஒட்டிக் கொண்டுவிட்டான். விருப்பம் இருந்தாலும் இல்லாவிட்டாலும் அவன் கூட்டாளி தான். கல் அடிப்பதிலே அவன் சூரன். கோபால்கூட அவன் கல் விடுவதைப் பார்த்து அசந்து போனான். அவன் திறமை வெகுவாக எல்லாரையுமே கவர்ந்தது.

கோபால் சாரிடம் சொன்னான், 'நம்ப கிருஷ்ணன் மாதிரி ஒரு பயலும் கல்லு விடமுடியாது சார். ஒரு கல்லாலே இரண்டு தேங்காயை விழ வைச்சுட்டான் சார்.'

சார் அவனைத் தட்டிக் கொடுத்தார். இரண்டு, மூன்றாகி விட்டது.

தெற்கே வேட்டைக்கு போவதாகத் திட்டம். கோபால் சொன்னான், 'கொக்கு ரொம்ப வந்திருக்காம், சோமு படையாச்சி பரி போட்டிருக்கிற பிள்ளையார் வடிகாலில் ஏராளமான கொக்காம்.'

மழை பொழிந்து விட்டிருந்தது. நண்டு நத்தையெல்லாம் ஊரும். வரப்பிலே நடக்கமுடியாது; சதசதவென்று சேறு. தண்ணீர்ப் பாம்பு வேறு கிடக்கும். கொக்கு மடையானுக்கு அதுதான் காலம். குளத்தையும் வயல் வெளியையும் சுற்றிச் சுற்றி வரும். குளத்திலே பெரிய விரால்கூட மேலே வரும். குஞ்சுகளுக்குப் பாதுகாப்பாய், துணையாய் வந்து மேய்வது பார்ப்பதற்கு ரொம்ப அழகு. அப்பொழுது மீனைச் சுடலாம். சார் மீனைக்கூடச் சுடுவார். தண்ணீரிலும்கூட அவர் குறி தப்பாது. அவர்களுக்கென்று இரண்டு விராலைச் சுட்டார். கோபாலும் தங்கையாவுந்தான் எடுத்துக்கொண்டு போனார்கள்.

காவிரிக்கரை நெட்டிலிங்க மரத்தில் குயில் தெரிந்தது. கோபால்தான் பார்த்தான்.

'சார்!'

'சுடணுமா?'

'பாருங்க சார், எம்மாம் பெரிசு. நாம குயில் சுட்டு கூட ரொம்ப நாளாச்சு சார்.'

'சுடுங்க சார்.' எல்லோரும் சேர்ந்து சாரை இணங்க வைத்தார்கள். அதிலே அவர்களுக்கு ரொம்ப மகிழ்ச்சி. குயிலும் ஆடாமல் அசையாமல் அப்படியே இருந்தது. குண்டு பட்டதும் படபடவென்று சிறகை அடித்துக் கொண்டு போய் அக்கரையில் விழுந்தது.

'அக்கரைக்குப் போயிடுச்சே' என்றான் கிருஷ்ணன்.

'போனா என்ன?' கோபால் தலையைச் சிலுப்பிக் கொண்டு நகைத்தான். மேல் சட்டையைக் கழட்டிப் போட்டுவிட்டு பத்தடி பின்னுக்கு வாங்கி ஓடி வந்து கரணமடித்தான். தண்ணீர் நாலா பக்கமும் சிதறித் தெறித்தது. உள்ளுக்குள்ளேயே சரசரவென்று போவது மாதிரி நீர் சுழித்தது. அதோ அதோ என்று கைகாட்டினான் கிருஷ்ணன். நிமிஷம் ஒன்றாச்சு, இரண்டாச்சு, மூன்றாச்சு....

'அங்க... அதோ...' கரகரவென்று சுழிக்கும் நீரைச் சுட்டிக் காட்டினான் கிருஷ்ணன்.

அற்புதராஜ் ஆற்று நீரை ஊடுருவி நோக்கினார். அப்புறம் அவர் பார்வை எதிர்க்கரைக்குச் சென்றது. விழுந்ததிலிருந்து அசைவற்று குயில் அப்படியே கிடந்தது. சாரின் பார்வை பரபர வென்று சுழன்றது. மனத்திலே தவிப்பு. ஏதோ கைநழுவி விட்டதைப்போல ஒரு நினைப்பு. சட்டையைக்கூடக் கழற்றாமல் ஆற்றில் இறங்கினார். இரண்டு பேருக்கும் ஒன்றும் விளங்க வில்லை.

'எதுக்கு சார்?'

அற்புதராஜ் சற்றே திரும்பிப் பார்த்துவிட்டு, மேலே மேலே தண்ணீருக்குள் சென்றார். ஒரு மணி நேரம்போல் இடைவிடாத தேடல்; ஒவ்வொருவராக ஆள் சேர்ந்து விட்டார்கள், நாற்பது, ஐம்பது பேர்போல; அவன் கிடைக்கவில்லை. எட்ட எட்ட ஒவ்வொருவராக நகர்ந்து கொண்டிருந்தார்கள். இரண்டு மணி நேரத்திற்குப் பிறகு புங்கமரக்கிளையில் தலை செருகிக் கிடந்தவனை அற்புதராஜ் மேலே தூக்கிக் கொண்டு வந்தார். அவர் கண்களில் துளும்பிய கண்ணீர் பொலபொல வென்று கொட்டிக் கொண்டே இருந்தது.

நீர் விழியை மறைக்க மெல்லத் தலையுயர்த்தி, தங்கையாவை யும், கிருஷ்ணனையும் பார்த்தார். இருவரும் கோவென்று கதறிய படியே சாரைக் கட்டியணைத்துக் கொண்டார்கள்.

அற்புதராஜ் நிலை குலைந்து போனார். அவர் வாயிலிருந்து ஒரு வார்த்தையும் வரவில்லை. வாழ்கை வெறிச்சோடிச் சோபை இழந்து விட்டதுபோல அவருக்குத் தோற்றமளித்தது. கோபாலைப்பற்றி வீரஞ்செறிந்த அபூர்வமான நினைவுகள் மேலெழுந்து அழுத்தின. அவர் வேட்டைக்குப் போகவில்லை. பள்ளிக்கூடமும் போகவில்லை. பிரமைபிடித்தவர் மாதிரி இருந்தார். வீட்டிற்குள்ளேயே எப்பொழுதாவது எழுந்து நடப்பார். மற்ற நேரமெல்லாம் தலை கவிழ்த்தபடியே நாற்காலியில் உட்கார்ந்திருப்பார்.

நினைவு தெரிந்த பிறகு, முதன் முதலாகச் சர்ச்சுக்குப் போவதை நிறுத்திவிட்டார்.

சாரைக் காணாமல் இரண்டுபேரும் தவித்துப்போனார்கள். கூடிக்கூடி யோசனை பண்ணிப்பார்த்தும் ஒன்றும் தெரியவில்லை. நான்கு நாட்களுக்கப்பறம் துக்கம் மனத்தை அழுத்த, சார் வீட்டுப் படியேறி உள்ளே சென்றார்கள். துப்பாக்கி தலைகீழாகத்

தொங்கிக்கொண்டிருந்தது. சார் உள்ளங்கையில் முகத்தைப் புதைத்தபடியே உட்கார்ந்திருந்தார்.

கலவரமுற்ற நிலையில் சாரை அழைத்தார்கள். குரல் கேட்டு சார் மெல்லத் தலையுயர்த்திப் பார்த்தார். என்றைக்கும்போல் புன்முறுவலில் முகம் மலரவில்லை. மௌனமாகத் தலை அசைத்து வரவேற்றார்.

'உங்களை ஒரு வாரமா காணுமே சார்?'

அற்புதராஜ் எழுந்தார்.

'அக்கா கூட உங்களைக் கேட்டுச்சு!'

சார் நிமிர்ந்து பார்த்தார்.



# மிதப்புகள் முறியும்

பாலகுமாரன்

''நம்ம வடிவேலு செத்துப் பூட்டான் சார்!''

''எந்த வடிவேலுடா?''

''கேஷுவல் லேபர் வடிவேலு சார். ஹெவி - செக்ஷன்ல வேலை செய்வான் சார். கறுப்பா, ஒல்லியா, தினம் குடிச்சுட்டு வருவானே, அந்த வடிவேலு சார்.''

சட்டையை மாட்டிக் கொண்டு, எதிர்ப்பட்ட ஆட்டோவில் ஏறித் தொழிற்சாலைக்குப் பறந்தான் கோவிந்தன். வடிவேலு இரண்டு வருஷமாய் கேஷுவல் லேபர். இவன் மாதிரி ஒரு நாற்பது பேர் வெகு காலமாய் கேஷுவல் லேபரர்ஸ். கோவிந்தனின் முக்கியமான கோரிக்கைகளில் 'கேஷுவல் லேபரை நிரந்தரமாக்கு' என்பதும் ஒன்று. இன்று இதை எப்படியாவது கிளற முடியுமா என்று பார்க்கணும். இன்னிக்கு இல்லேனாலும் இந்த வாரமோ, இந்த மாசமோ இது பத்திக் கூட்டம் போடணும். அதுக்கெல்லாம் முன்னாடி இன்னிக்கு லீவு உடறானான்னு கேட்கணும். உடமாட்டானுங்க. கேஷுவல் லேபர்தானேன்னு சட்டம் பேசுவானுங்க. புட்சி உலுக்கு உலுக்குன்னு உலுக்கினா இறங்குவானுங்க. வெறுமன லீவு உடறான்னா உடுவானா? மாலை மரியாதை பண்ணணும்னு கேட்கணும். மாலை மரியாதைக்கி சில்லறை வேணும். ஆளுக்கு எட்டணா போடுங்கடான்னு நம்ம ஆளுங்களையே கேட்கணும். எல்லாப் பசங்களும் வாங்கியே பழக்கம். எட்டணா கொடுறான்னா மூஞ்சிய தூக்குவான். எது எப்படி இருந்தாலும் வடிவேலு செத்துப் போனது ஒரு நல்ல சந்தர்ப்பம்.

* * *

கோவிந்தன் யூனியன் லீடராகி மூன்று மாதங்கள்தான் ஆகியிருந்தன. இந்த மூன்று மாதங்களில் மகத்தான மாறுதல்கள்

ஏற்படவில்லையாயினும் குறிப்பிடத் தகுந்த விதத்தில் நிர்வாகம் வளைந்து கொடுக்கத் துவங்கிற்று; தூணைப் பிளந்து கொண்டு வரும் நரசிம்மம் மாதிரி எந்த நேரமும் கோவிந்தன் அறைக்குள் நுழைவான் என்கிற பயம் அதிகாரிகளுக்கு இருந்தது!

ஆயிரத்து நூறு பேர் வேலை பார்க்கும் தனியார் கம்பெனியில், யூனியன் லீடராய் இருப்பது சுலபமல்ல. அதற்கு நெஞ்சுரம் வேண்டும். கூர்மையான நாக்கு வேண்டும். உடல் வலுவு வேண்டும். வெண்கலக் குரல் வேண்டும். கொஞ்சம் படிப்பு வேண்டும். கோவிந்தனிடம் படிப்புமட்டும் ரொம்பக் கொஞ்சம் தான் இருந்தது. எட்டாவது வகுப்பில் மூன்று முறை தோல்வி யுற்று, அப்பாவிடம் நாயாய் அடிபட்டது அடிக்கடி நினைவுக்கு வந்தது. 'படிக்கலைன்னுதானே இப்படிப் போட்டுக் கொல்றே. இந்தப் படிப்பில்லாமலேயே நா பெரிய ஆளா ஆவறேன் பார். நீ சாவறதுக்குள் உன்னைவிட யோகிதமா நிக்கறேன் பார்.'

மனசுக்குள் கறுவிக் கொண்டிருந்த வஞ்சம் நாற்றாய் செடியாய் மரமாய்க் கிளைத்து இன்று கனிய ஆரம்பித்து விட்டது. இன்று ஆயிரத்து நூறு பேருக்குத் தலைவனாய் கோவிந்தன், பெருந்தலைவன் கோவிந்தன். தேர்தலில் ஜெயித்து மாலையோடு நண்பர்கள் தோளில் சவாரி செய்தபோது அப்பா ஞாபகம் வந்தது. நிறையப் படிப்புப் படித்து எஞ்சினியராய், மானேஜராய் வரும் பையன்கள் தன்னைக் கண்டதும் நடுங்குவதைப் பார்க்கையில் அப்பா ஞாபகம் வந்தது. பத்துத் தோழர்கள் சூழ்ந்து கொண்டு, ''பிரச்சினையை எப்படியாவது முடிச்சிடுங்க தலைவரே!'' என்று குழையும்போது அப்பா ஞாபகம் வந்தது. கோவிந்தன் தலைவனான மறுநாள் புது செருப்பு வாங்கினான். அரக்கி அரக்கி நடக்கப் பழகிக் கொண்டான். அப்படி நடப்பதால் மற்றவர்க்குத் தன் வருகையைத் தெரிவிப்பதும், தனக்குள்ளேயே ஒரு நம்பிக்கை தோன்றுவதுமான உணர்ச்சி இருந்தது. எல்லாவற்றுக் கும் மேல் விளையாட்டுக்கு யாரையோ செருப்பால் அடிப்பேன் என்று பேசினபோது பின்னால் நின்று கேட்ட அப்பன், 'இருந்தா தானே அடிப்பே?' என்று பிடரியில் அடித்து, அவன் செருப்பைச் சாக்கடைக் குழியில் தள்ளி வெறுங்காலோடு துரத்தினதுக்கு எதிர்ப்பாய் இருந்தது. இங்கே கோவிந்தனை இப்படி ஏன் நடக்கிறாய் என்று யாரும் கேட்க முடியாது. கேட்கத் துணிவு கிடையாது. ஒவ்வொரு அரக்கலுக்கும் அப்பன் முகத்தை நசுக்குவதான சுகத்துடன் நடக்க முடியும்.

வீட்டைத் தவிர வேறெங்கேயும் இப்படி அரக்கி நடப்பது கோவிந்தனுக்கு வழக்கம். வீட்டிலும் நடக்கலாம். கிழம் ஏதாவது சொல்லும். கண்ணெதிரே சொல்லாது போனாலும் காது படத் திட்டும். திண்ணை விளிம்பில் இப்போது திமிர் அடங்கி துணியாய் சுருண்டு கிடக்கிற அப்பனைக் குத்திக் கிளறுவது அனாவசியம். இந்த மாதிரி பத்து கம்பெனிக்கு யூனியன் லீடராகி கார் போட்டு இறங்குகையில் சொல்லிக் கொள்ளலாம்; வூட்டுக்குள்ள கூடச் செருப்போடு நடப்பேன்னு. அப்படி ஒரு காலம் வராமலா போகும்?

* * *

ஆலை திறப்பதற்குள் வாசலில் இரங்கற் செய்தியை எழுதியாகி விட்டது. கறுப்பு ரிப்பனை வாங்கி எல்லார் சட்டையிலும் நுழையும் போதே செருகி அனுப்பியாகி விட்டது. கோவிந்தன் கேட்பதற்கு முன்பே, நிர்வாகம் ஒரு மணி நேரம் முன்னதாக வீட்டுக்குப் போக அனுமதி அளித்தது. உண்டி குலுக்க சம்மதம் சொல்லிற்று. ஒரு விதத்தில் லீவு கொடுக்காதது சௌகரியம்தான். இதோ சாப்டுட்டு வரேன் தலைவரேன்னு சினிமா பூடுவானுங்க, தனி ஆளா சாவு வூட்ல லோல் படணும். பர்மிஷன்னா மொத்த ஆளையும் வளைச்சிகினு போய்விடலாம். ஆள் படையோடு போய் இறங்கினாத்தான் பார்வையாய் இருக்கும். ஓர் உண்டிப் பெட்டி கறுப்புப் பட்டை கட்டி ஒவ்வொரு பிரிவுக்கும் ஊர்வலம் போயிற்று.

எட்டணாவுக்குக் குறைஞ்சு எவனாவது போட்டா பொல்லாதவனா இருப்பேன் என்கிற கோவிந்தன் குரலுக்கு மதிப்பு இருந்தது. பிதுங்கி வழியறதை கொட்டிப் பார்க்கையில் நானூற்றுப் பதினைந்து தேறிற்று. இருபது ரூபாய் பூமாலை. இருபது ரூபாய் பன்னீர் பாட்டில். எட்டு ரூபாய் ஊதுபத்தி. இதர செலவுகள் பதினைந்து போக இருப்பு முன்னூற்று அம்பத்து இரண்டு. எழுதிக் கவரில் போட்டுப் பையில் மடித்து வைத்துக்கொண்டான். ஒரு ஆளை முன்னதாக அனுப்பித் தன் வருகையை வடிவேலு வீட்டில் அறிவிக்கச் சொன்னான். நாலு மணிக்கு வாசலில் நின்று எல்லோரையும் தன் பின்னே மௌன ஊர்வலமாய் வரச் சொன்னான்.

''ஏமாத்திட்டுப் போகலாம்னு நினைக்கிறவங்களுக்கு ஒரு வார்த்தை; இந்த வடிவேலு நிலைமை நமக்கும் வரலாம்; ஞாபகம் வச்சிக்கிங்க...''

கூட்டம் கட்டுப்பட்டது. அடங்கி ஆட்டு மந்தையாய்ப் பின் தொடர்ந்தது. தெருவில் பஸ்கள் அங்கங்கே நின்றன. ஆயிரம் ஆட்கள் ஊர்வலமாய்த் திடுமென்று வருவதைப் பார்த்து கடைத் தெரு கன்றுக் குட்டியாய் மிரண்டது. பாதி மூடிய கதவின் வழியே பயமும் ஆச்சர்யமும் கலந்த முகங்கள் கோவிந்தனைப் பார்த்தன. வடிவேலு வீட்டு வாசலில் தெருக்கூட்டம் மொய்த்துக் கிடந்தது. ஊர்வலம் நெருங்கினதும் சரசரவென்று ஒதுங்கி கோவிந்தனுக்கு வழிவிட்டது. காலையிலிருந்து கதறித் தொண்டை கம்மிப்போன பெண்கள் கூட்டம், இவன் உள்ளே நுழையவும் ஒவென்று அழுதது. அம்மா கிழவி மாதிரி ஒருத்தி புகையிலை துர் நாற்றத்துடன் கோவிந்தனை வந்து கட்டிக்கொண்டாள்; வித விதமான குரலில் அழுதாள்; கோவிந்தனுக்கு மூச்சு முட்டிற்று. ''போற புண்யவான் பூட்டான், ஏம்மா வந்தவங்களை பேஜார் பண்ணிக்கினு? ஒதுங்கிப் போ!'' வாலிபமாய் ஒரு பையன் கிழவியை விலக்கினான்.

பெரிய ரோஜாப் பூ மாலையை வடிவேலுமீது சாத்தியபோது, இரண்டு மூன்று பேர் பழக்கம் காரணமாய்க் கை தட்டினார்கள். கோவிந்தன் முறைத்துப் பார்த்ததும் பின்வாங்கினார்கள். மூன்று கட்டு ஊதுவத்தியை ஒட்டு மொத்தமாய்க் கொளுத்தியதும் பகபகவென்று புகை கிளம்பியது. பன்னீர் பாட்டிலைக் கர்ம சிரத்தையாய் ஊற்றும் கோவிந்தனைப் பெண்கள் கூட்டம் ஆச்சரியத்துடன் பார்த்தது.

''யார்டி அது, சிநேகிதகாரரா?''

''ச்சீ - ச்சீ தலைவரு.''

''எங்கித்திக்கி தலைவரு?''

''வடிவேலு வேலை செய்ல, அங்கித்தித் தலைவரு.''

''சம்பளம் போடற ஆளா?''

''அதுக்கும் மேல. வடிவேலுக்கு துட்டு கலெக்ஷன் பண்ணி எடுத்தாந்துக்குறாரு...''

''வந்தாலும் வந்தாரு என்னா வாசனை பாருடி?''

''ச்சீ ச்சீ. அது ஊதுபத்தி வாசனை...''

''அதாண்டி சொல்றேன். நீயும் நானும் செத்தா யாரு மூணுகட்டு ஊதுபத்தி போடறாங்க - புண்யவான் வந்தாரு பன்னீரும் பத்தியுமா மணக்குது.''

''வூட்டுக்குப் பெரியவங்க யாரும்மா?'' கோவிந்தன் குரல் கொடுத்தான்.

''இந்தா கிழவி. உன்னைத்தான் கூப்பிடறாங்க.''

''வேணாம், வேணாம் கிழவி வேணாம்...'' கோவிந்தன் மறுத்தான்.

''அவ்ரு துட்டு கொடுக்கக் கூப்பிடறாரு. ஏன் கிழவிய எழுப்பற - தம்பிக்காரனை வரச் சொல்லு.'' தம்பிக்காரன் மெல்லிய மீசையும், அரை நிக்கருமாய் வந்தான். கூட்டத்துக்கு நடுவே ரூபாய் நோட்டுக்களை எண்ணி, கோவிந்தன் அவன் கைகளில் போட்டான்.

''தலைவர் கோவிந்தன் - வாழ்க!''

''தோழர் வடிவேலு - வாழ்க!''

கும்பலின் குரல் கூரையில் இடித்து ஊதுபத்திப் புகையோடு குபுக்கென்று வெளியே பறந்தது.

கோவிந்தன் கையமர்த்தி வாசலைப் பார்த்துக் கூவினான். ''யார்ரா அங்கே, மோளம் அடிக்கச் சொல்லுடா.''

''மோளம், மோளம்,'' யாரோ குரல் வாங்கி வெளியே எதிரொலித்தார்கள்.

''சட்டுபுட்டுன்னு எடுக்கச் சொல்லுமா... நாங்க போவணும்.''

''தாய் மாமன் வரலைங்க. அதான் மயங்கி நிக்கிறோம்.''

''ஆமா... மாமன் வந்துதான் மாலை மரியாதை செய்யப் போறாராக்கும். இத்தினி பெரியவங்க நிக்கிறாங்க. எதிர் பேச்சு பேசிறியே?'' குண்டாய் ஒரு பெண் கடுகடுத்தாள். கோவிந்த னைப் பார்த்து முறுவலித்தாள்.

''சீக்கிரம் முடிக்கச் சொல்லுமா, நம்ம ஆளுங்க தொலைவா போவணும்...''

கோவிந்தன் வெளியே வந்ததும் நாற்காலி போட்டார்கள். வசதியாய் உட்காரச் சொன்னார்கள்; கையில் விசிறி கொடுத்தார் கள். தள்ளி வட்டமாய் நின்று கொண்டார்கள். குடிக்க சோடா கேட்டபோது, அலுமினிய டம்ளரில் துணி மூடிக் கொடுத்தார்கள்!

''என்னாத்துக்குடா இது?''

''சாப்டு தலைவரே! காலைலேர்ந்து பேஜார் பட்டிருக்கே!''

''இது சாப்ட்டுதானேடா வடிவேலு செத்துப் போனான்!''

''அரை ஒண்ணு சாப்ட்டா ஒண்ணும் ஆவாதுப்பா - சாவு வூட்ல ஒண்ணும் கண்டுக்க மாட்டாங்க, சாப்டு!''

கோவிந்தன் சாப்பிட்டு முடித்ததும் டம்ளரைக் கொடுத்தான். பின் பக்கம் நாலைந்து பேர் டம்ளர் வைத்துக்கொண்டிருப்பதைப் பார்த்தான்: ''என்னாடா டேய்! டின்னே கொண்ணாந்துட்டிங்களா?''

''கண்டுகாத தலைவரே - நீ முடிக்கணும்னுதான் காத்துகிணு இருக்கோம்!'' பளிச் பளிச்சென்று டம்ளர்கள் கைமாறின!

பத்து நிமிடத்தில் வடிவேலு கிளம்பினான்; கூட்டம் நெரிந்து திமிறியது.

கோவிந்தன் தன் ஆட்களை வளையமாய்க் கை கோத்து நிற்க வைத்தான்; யார் யார் போக்குவரத்தை ஒழுங்கு பண்ண வேண்டும். யார் யார் கூட்டத்தை ஒழுங்கு பண்ண வேண்டும், முன்னால் எத்தனை பேர் பின்னால் எத்தனை பேர் என்று கட்டளைகள் பிறப்பித்தான். கூட்டம் இரை முழுங்கிய பாம்பாய் மெல்ல நகர்ந்தது.

''ஒண்ணுமில்லாத பையன்பா வடிவேலு - ஜே ஜேன்னு போறான் பார்!''

''கிழவிக்கு அதிர்ஷ்டம்! நம்ம தெருவிலே எவன் சாவு இப்படி போயிருக்குது?''

''கிழவி என்னா பண்ணினா - சீமாம் மாதிரி ஒருத்தன் நடத்தறான். இல்லேன்னா இந்தக் கும்பல் சேருமா?''

கோவிந்தனுக்குப் பூமியில் கால் பாவாமல் பறக்கிற மாதிரி இருந்தது. ''நீங்க போய்கினே இருங்க - வேட்டி மாத்திகிணு வரேன்.''

கூட்டத்தைப் பிளந்து கொண்டு, ஆப்தமான சில ஆட்கள் தொடரத் தன் வீட்டுப் பக்கம் போனான்.

எதிர் திண்ணையில் அப்பனுக்கெதிரே உட்கார்ந்து வேட்டிக்குக் குரல் கொடுத்தான்.

''செம கூட்டம் தலைவரே - பிரமாதம் பண்ணிட்ட போ!'' கூடவந்த ஆள் கோவிந்தன் குறிப்பறிந்து பேசினான்.

''இதென்னா பிரமாதம் பிரதர். அடுத்த தடவ இந்த மாதிரி வரட்டும். ஆயிரம் ரூபா கலெக்ஷன் ஆவுது பார்.''

''வெறும் பறை கொட்டு போதாது தலைவரே, பேண்டு வச்சிடணும்.''

''பேண்டு என்னப்பா, சிலம்பு போடற ஆளுங்களே வச்சிடலாம். அடுத்த தடவ நிச்சயம் செய்திடணும்.''

''நீ மனசு வெச்சா முடியும் தலைவரே. துட்டு பெரட்டத்தான் கஷ்டப்படணும்.''

''வுடமாட்டேனே - அடுத்த தடவ, மானேஜ்மெண்டு மடியிலே கை போட மாட்டேன்? கொண்டாடா ஐந்நூறு ரூபாண்ண மாட்டேன்? நீ பாரேன் - அடுத்த தடவ - என்னா பிரமாதமா நடத்தறேன்னு...''

சுருண்டு படுத்துக் கொண்டிருந்த கிழவன் விலுக்கென்று எழுந்தான். பக்கத்தில் இருந்த மணைப்பலகையை விசிறித் தரையில் அடித்தான்.

''எழுந்து போடா - பேமானி. நானும் பாக்கறேன், அடுத்த தடவ, அடுத்த தடவன்னு பேசிகினு. கூட இருக்கிறவன் எப்ப சாவான்னு அலையறான். இவனெல்லாம் தலைவனாம், துடப்பக்கட்டை... போடா வெளியே!''

ஏன் இந்த அப்பன் கிழம் இப்படிச் சீறுகிறது, தலைவன் கோவிந்தன் ஏன் இப்படி வேகமாய் - வேட்டி மாற்றாது வெளியே ஓடுகிறார் என்பது அவன் தோழர்களுக்குப் புரியவேயில்லை. ❑

# ஓர் உல்லாசப் பயணம்

**வண்ணதாசன்**

எப்போது நினைத்தாலும் போகலாம்.

அவ்வளவு பக்கத்தில்தான் இருக்கிறது வாய்க்கால். குளிக்கிறதற்காகப் புறப்பட்டவர்தான் இங்கேயே நின்று விட்டார். நடையிறங்கக் கால் வைக்கும்போது, மேட்டுப் பள்ளிக்கூட வாத்தியார் எதிரே குளித்துவிட்டு வந்து கொண் டிருந்தார். பாலாய்த் தேய்த்துக் குளிப்பாட்டிவிட்ட பசுவும் கன்றுக்குட்டியும் தன்னடையாய் முன்னே போய்க் கொண் டிருந்தன. இவரைப் பார்த்ததும், ஒன்றே ஒன்றை மாத்திரம் தான் கேட்பதற்கு நேரம் இருந்ததுபோல் 'என்ன, பையனை விறகுக் கடையில் பார்த்தேனே, குற்றாலம் எக்ஸ்கர்ஷனுக்கு அனுப் பலையா?' என்று நடையில் நின்றவரைப் பார்த்துக் கேட்டார். பசு தந்திப் போஸ்ட் பக்கம் போய் நின்றுகொண்டு ஒருமுறை இவரைத் திரும்பிப் பார்த்துக் கத்தியது. கன்றுக் குட்டி, எதிர்த்த வீட்டுச் சுவரோரத்தை மங்கலாய்த் தடவிக் கொண்டிருந்த ஊமை வெயிலில் நின்று சடசடவென்று உலுப்பிக்கொண்டது. தான் கேட்டதற்குத் தானே, "என்ன பொல்லாத குத்தாலம்? இரண்டு மூணு நாளா இந்த ஊரே குத்தாலம் மாதிரித்தான் இருக்கு" என்று பதிலும் சொல்லிக் கொண்டு போனார்.

ஆமாம். இரண்டு மூணு நாட்களாய் அடிக்கிற காற்றையும் சாரலையும் பார்த்தால், குற்றாலம் மாதிரித்தான் இருக்கிறது. இப்போதுகூட காலை பதினோரு மணி மாதிரியில்லை. கும்மென்று இருட்டிக் கிடக்கிறது. கிரகணம் பிடித்ததுபோல். எப்போதாவது பழுப்பு வெயில். அடிக்கிற காற்றில் பெருக்கிப் போட்டதுபோல் தெரு பளீரென்று கிடக்கிறது. நடமாட்டமே இல்லை. தெருக் கடைசியில் பார்த்தால், 'பைப்' படியில் ஒரு வெள்ளாட்டுக் குட்டி மாத்திரம், காம்பவுண்டுச் சுவரொன்றில்

நின்றபடி சத்தம் போட்டுக் கொண்டிருக்கிறது. மறுபடியும் மறு படியும் அதனுடைய சத்தம் ஒரு குழந்தையின் அழுகையைப் போலக் கேட்கிறது. பீடியிலை வாங்கிக் கொண்டுபோன நீலப் புடவைக்காரி துப்பிவிட்டிருந்த வெற்றிலைச் சாறு, சிவப்பாய்த் தரையில் குழம்பியிருக்கிறது. 'வேப்பமுத்து இருக்கா, வேப்ப முத்து?' என்ற ஒரு குரல் இந்தத் தெருவையும் அடுத்த தெருவை யும் இணைக்கிற சந்திலிருந்து கேட்கிறது. ஒரே ஓர் அரச இலை காற்றில் பறந்துவந்து விழுந்து, தரையோடு தரையாய்ச் சருகிப் போகிறது. திடீரென்று பக்கத்து வீட்டு அடுக்களை அங்கணத்தி லிருந்து கழிவு நீர் சிதறித் தெருவின் பாதிவரை, அந்த ஒற்றை அரசிலையைக் கவ்வுவதுபோல் கால்களாய் ஓடி விழுகிறது. முருங்கைக்காய்ச் சக்கையும், கத்தரிக்காய்த் தோலுமாய்ச் சோற்றுப் பருக்கையோடு விசிறிக் கிடக்கிற அருவருப்பைப் பார்த்ததும் அவருக்கு வீட்டுக்குள் போய்விடலாம் போலிருந்தது. இருந்தாலும் அவர் நின்றார். 'இப்போ முருங்கைக்காய் சீஸனோ?' என்று நினைத்துக் கொண்டார்.

தெருவின் வெறுமையைக் கலைத்துக் கொண்டு ஒரு சைக்கிள் அவசர அவசரமாகப் போயிற்று. 'என்ன அவசரம் அப்படி?' என்பதுபோல் சைக்கிள் போகிற திசையில் பார்த்தார். எதிரே விறகுச் சுள்ளிகளைக் கைக்குள் நெஞ்சோடு அணைத்துப் பிடித்த படி வந்த அவருடைய மகனோடு மோதுவதுபோல், சடாரென்று சைக்கிளை வெட்டி, சரிந்துவிடுகிறாற்போல் ஒரு செருப்புக் காலை தரையில் தேய்த்து மூக்கைத் திரும்பி மறைந்தது அது. சைக் கிளின் வேகத்தைத் திரும்பிப் பார்த்தபடியே வருகிற மகனைப் பார்த்ததும் இவருக்கு என்னவோ செய்தது. பனிரெண்டு பதின்மூன்று வயதிருக்கும். எட்டுப் படிக்கிறான். அவனைத்தான் அவர் குற்றாலம் எக்ஸ்கர்ஷனுக்கு அனுப்ப முடியவில்லை.

மூன்று வாரங்களுக்கு முந்தி ஒருநாள் காலையில் எட்டரை மணியிருக்கும். 'சாப்பிடலாமா?' என்று அடுக்களையைப் பார்த்துக் கேட்டதற்கு, ''இவளுக்குத் தலைபின்னி விடணும். சின்னதைத் தூக்கிக்கிட்டு ஆஸ்பத்திரிக்குப் போகணும். ஆத்துத் தண்ணி பிடிக்கணும், குடத்தைப் போட்டுட்டு வந்திருக்கேன். இவ்வளவு சோலிக்கும் மத்தியில் நீங்களும் 'சாப்பிடலாமா, சாப்பிடலாமா'ண்ணு சின்னப் பிள்ளையிலும் கேடாய்ப் பறந்தால் நான் என்ன பண்ண? எனக்கு என்ன ஏழு கையா இருக்கு?'' என்ற படபடத்த பதில் கேட்டு அடங்கியிருந்த நேரம். அவருடைய பையன் தன்னுடைய புஸ்தகப்பையிலிருந்து ஒரு

நோட் புத்தகத்தை எடுத்துக்கொண்டு இவர் பக்கம் வந்தான். கூப்பிட்டான். ஏறிட்டுப் பார்த்ததும் நோட்டைப் பிரித்து ஒரு சிவப்பு நிற நோட்டீஸை எடுத்துக் கொடுத்தான்.

''என்ன இது?''

''எக்ஸ்கர்ஸன் போறாங்க!'' இதற்குமேல் அவன் ஒன்றும் சொல்லவில்லை. பேசாமல் காம்பஸ் பாக்ஸை எடுத்து நோட்டில் வட்டம் போட்டான். அந்த வட்டத்திற்குள் ஒரு தாமரைப் பூவை வரைய ஆரம்பித்தான். ஒரே ஒரு வளைகோடு மாத்திரம் விழுந்திருந்தது வட்டத்துக்குள்.

அவர் அந்த நோட்டீசைப் பார்த்தார். அது அவருக்கொன்றும் புதியதில்லை. கடந்த இரண்டு வருஷமாய் அவர் பார்த்ததுதான். அவன் படிக்கிற பள்ளிக்கூடத்தில், வருடந்தோறும் சுதந்திர தினத்தை ஒட்டி இப்படியொரு உல்லாசப் பிரயாணத்திற்கு ஏற்பாடு பண்ணுவதும், தொகைவாரியாய்ப் பெரிய ஊர்களில் ஆரம்பித்து ஒரு ரூபாய் என்று கடைசியில் 'லோக்கல் எக்ஸ்கர்ஷனி'ல் முடிகிற பட்டியலை அவருக்குப் பாராமலேகூட சொல்ல முடியும்தான். போன வருடமே தான் அவனை, 'அடுத்த வருடம் கண்டிப்பாய்க் குற்றாலம் அனுப்புவதாகச்' சொல்லி யிருந்தார். வைத்தியச் செலவு, கல்யாண வீட்டுச் செலவு, அது இது என்று இந்த வருடமும் வசதிப்படவில்லை. இதை நினைக்கை யில் அவருக்கு வருத்தமாய் இருந்தது. ஒன்றும் ஓடவில்லை. கலங்கினாற்போல் அவனைப் பார்த்தார்.

''என்ன தாமரைப்பூ வரையுதியா?'' என்று கேட்டார்.

''ஆமா'' என்றபடியே பையன் அந்த எக்ஸ்கர்ஷன் அறிவிப்பு அச்சடித்திருந்த பேப்பரைப் 'பொன்னாய்ப் பூவாய்'க் கசங்காமல் வாங்கி எதிலிருந்து எடுத்தானோ அந்த நோட்டிற்குள்ளேயே வைத்துவிட்டு மறுபடியும் வரைய ஆரம்பித்தான்.

ஒரு வார்த்தைகூடக் குற்றாலம் போகவேண்டும் என்று சொல்லவில்லை. 'எங்கே போகணும்' என்று கேட்கவில்லை. இவருக்கு, அவன் அப்படியெல்லாம் கேட்கமாட்டானா, 'குற்றாலத்திற்குத்தான் போவேன்' என்று அழமாட்டானா என்றிருந்தது. தேறுதலும் சமாதானமுமாய்த் தன்னுடைய நிலையை விளக்குவதற்குக்கூட வாய்ப்புத் தராத அவனுடைய மௌனம் ரொம்பக் கனத்தது. அவர் எதையோ சொல்லப் போகையில்.... அவன் 'தாமரைப் பூ நல்லாருக்காப்பா?' என்று நோட்டை உயர்த்தி நீட்டினான்.

''அங்கே என்ன ஊரிலேயில்லாத கதை பேசி ஆகுதோ, தெரியலையே. என்னமோ ரயிலுக்குப் போகிற மாதிரி, சாப்பிட ணும் சாப்பிடணும்னு அடிச்சுக் கிட்டேளே அப்பதை.'' அடுப்படியிலிருந்து குரல் வந்தது.

''அம்மா, சாப்பிடக் கூப்பிடுதா'' அவன் குனிந்தபடியே சொல்லிக்கொண்டு காம்பஸ் டப்பாவை மூடினான்.

''விறகை கொண்டுபோய் அடுப்படிக்குள்ளேயே போட்டிரு. மழை வரும் போலுருக்கு...' எதையாவது சொல்ல வேண்டுமே என்பதற்காக அவனிடம் சொல்லியபடி, அவன் பின்னால் வீட்டிற்குள் போனார். இங்கேயிருந்து அடுப்படி வரை ஒரு நடை. வீட்டிற்குள் ஒரே இருட்டு. குழம்பு கொதிக்கிற காட்டமான வாடையும், காப்பிக்குக் கருப்பட்டி கொதிக்கிற வாடையும் ஒரேசமயத்தில் வந்து கொண்டிருந்தது. இப்போதுதான் விறகு வாங்கிப் போட்டவன் ஏதோ சில்லறையை எண்ணிப் பார்த்தபடி வெளியே மறுபடியும் போனான்.

தொட்டிலில் குழந்தை சிணுங்கியது. இவர் போனார்.

''வார பாதையிலே அப்படியே லைட்டைப் போட்டுட்டு வாங்க. ஐப்பசி கார்த்திகை மழை இப்போதான் அடைச்சுப் பெய்யப் போற மாதிரி ஒரேயடியா இருட்டிக் கிடக்கு... அவனை எங்கே, பெரியவனை? சீயக்காய்ப் பொட்டணம் வாங்கிட்டு வாண்ணு அனுப்பினேன். போயேபோய் நோயே தெளிஞ் சுட்டான் போலுக்கு. சின்னது தொட்டில்ல கிடந்துக்கிட்டு ஈளு ஈளுண்ணு சிணுங்கினால் இழுத்துவிடுகிறது யாருண்ணு தெரியலை...''

இந்தச் சத்தத்தையெல்லாம் கவனிக்காமல், அவர் தொட்டிலை இழுத்துவிட்டார். அவன் இப்படி நிலையில்லாமல் வேலை செய்கிறதையும், அவனுக்கு ஒரு சந்தோஷம் என்கிற விதத்தில் அவன் உள்ளூர விரும்புகிற குற்றாலத்திற்கு இந்தத் தடவையும் அனுப்ப முடியாமற் போனதையும் நினைத்து ரொம்ப வருந்தினார். இங்கேயே சாரலும் காற்றுமாய் இப்படி இருக்கையில், குற்றாலத்தில் அருவியில் தண்ணீர் என்னமாய் விழும் என்று நினைக்கையில், தானேகூட ஒருதடவை குற்றாலம் போகவேண்டும் போலிருந்தது.

''அது என்ன சத்தம்? மழையா விழுது? கொடியிலே ஈரத் துணியெல்லாம் காயப் போட்டிருந்தேனே. எல்லாத்தையும் வீட்டுக்குள்ளே அள்ளிக் கொண்ணாந்து போட்டா என்ன?

இதையெல்லாம் சோற்றுப் பானைக்கு முன்னால நிற்கிற மனுஷி சொல்லிக்கிட்டா இருக்கணும்?''

கொடியில் கிடந்த ஈரத் துணிகளையெல்லாம் கொண்டு வந்து வீட்டிற்குள்ளேயும், தார்சாவிலுமாய்ப் போடுகையில், சுவரோர மாய் ஒண்டி ஒண்டிக் கூடிய மட்டும் நனையாமல், கடையிலிருந்து அவருடைய பையன் வந்து கொண்டிருந்தான்.

மழை நன்றாக வலுத்துவிட்டது. வடக்கிற்கும் தெற்கிற் குமாய் சரிந்து, சடசடவென்று கனத்துப் பெய்ய ஆரம்பித்தது. ஓட்டில் மழை விழுந்து இலேசான மணம் கிளம்பியது. நனைய நனைய ஓடு நீரை உறிஞ்சியது. பிறகு குளிர்ந்து துளிர்த்தது. எப்போதோ வீசிய ஒரு பழைய, வட்ட பவுடர் டப்பாவின் மேல் தண்ணீர் விழுந்து இனிய சப்தங்களை உண்டாக்கியது. வாசலை ஒட்டிச் சொட்டுச் சொட்டாய் ஓட்டிலிருந்து நீர் குதித்து, அப்புறம் மழையின் வேகம் கூடக்கூடக் கம்பியாய்க் கொட்டியது.

''சதசதண்ணு ஈரத்தை மிதிச்சிட்டு வீட்டுக்கும் வாசலுக்கும் நடமாடி நாசம் பண்ணாதிய. ஒரு பழைய சாக்கை எடுத்துப் போடச் சொல்லுங்க அவனை. என்னமோ சுதந்திர தினம், கொடியேத்துண்ணு பெரியவளும், நடுவுள்ளதும் பள்ளிக்கூடத் துக்குப் போய்த் தொலைஞ்சுருக்கு. குடையை எடுத்துக்கிட்டுப் போய் அதைக் கூட்டிக்கிட்டு வாங்க. நனைஞ்சுட்டு வந்து, அப்புறம் காய்ச்சல், மண்டை இடிண்ணு என் பாவம் பற்றப் போகுது.''

பரண்மேல் ஏறிக் கிழிசல் சாக்கை எடுத்து, அவர் வாசலில் போடுவதற்குள், குடைகளை எடுத்துக்கொண்டு பையன் பள்ளிக் கூடம் போய்விட்டான். 'இவன் ஏனிப்படி இந்த வயதில் எல்லா வற்றிற்கும் நான் நான் என்று நிற்கிறான்? மாட்டேன், முடியாது என்று ஏன் அவனுக்குச் சொல்லத் தெரியவில்லை...' இவருக்கு அவன் மேல் அன்பும் இரக்கமும் மிகுந்தது. மனதே கப்பிப்போய், ஏதோ ஒரு துக்கம் நிகழ்ந்து போனதுபோல் தவித்தது. இருக்க முடியவில்லை. வாசலுக்கு வந்து மறுபடியும் மழையையே பார்த்துக் கொண்டிருந்தார்.

தார்சா ஓரத்திலெல்லாம் 'ஸ்ப்ரே' பண்ணியது போல், சேலைக்கரையாய் மழைத்தண்ணீர் தெறித்திருந்தது. வெள்ளை வெளேரென்று ஒரு பல்லி அசையாமல் கீழ்ச்சுவரில் ஒட்டிக் கொண்டிருந்தது. தரையில் தண்ணீர் கொப்புளமிட்டு ஓட ஆரம்பித்திருந்தது. ஒரு வாரியல் குச்சி, நேரே ஒரு படகைப் போல்

மிதந்துபோய் அப்புறம் சற்றுத் திரும்பி அரை வட்டமடித்து அசையாமல் நின்றது. ஒரு காகம் எங்கிருந்தோ கரைந்தது. ஓட்டு மேலேயோ, எதிர் வீட்டு ஏரியல் கம்பியிலோ அல்லது திடுதிடு வென்று சத்தம் கேட்கும்படி விழுகிற அந்த வடிகால் குழாயிலோ உட்கார்ந்து, அது இறகைச் சிலுப்பிக் கொண்டிருக்கலாம்.

குழந்தைகள் வருகிற சத்தம் கேட்கிறது. வெளிறிப்போன சுத்தமான சின்னஞ் சிறு பாதங்களால் விளையாட்டாக, எதிர்த்து ஓடி வருகிற தண்ணீரைத் 'திலாவி' நடக்கையில் மழைத் தண்ணீர் ஒரு கண்ணாடிப் பாளமாய்ச் சுருண்டு விழுவது அழகாயிருந்தது. பெரிய பெண் குடைக்கம்பி முனைகளிலிருந்து உதிர்கிற சொட்டுக்களை ஒரு உள்ளங்கையில் ஏந்திச் சிரித்தபடி வருகிறது. குடையைப் பிடித்திருக்கிற கையால் தம்பூர் மீட்டுவதுபோல் குடையை மடக்கிப் பொருத்துவதற்கான கம்பி வளைவை, டொக்டொக்கென்று அழுத்தி விடுத்தது. இப்போதும் சிரிப்புத்தான்.

வந்ததும், குடைகளை வாங்கி விரித்த நிலையிலேயே கறுப்புக் காளான்களாகச் சுவரை ஒட்டிச் சாய்த்துவிட்டு....

''அவனை எங்கே காணோம்?'' என்றார்.

''அண்ணன் தெருவாசல்லே நிற்காம்ப்பா. எதிர்த்த வீட்டுத் தட்டோடியிலேருந்து திடுதிடுண்ணு விழுதுல்லாப்பா, அதைப் பார்த்துக்கிட்டிருக்கான். இவ்ளோ உசரத்திலேருந்து ரொம்பத் தண்ணி விழுதுப்பா'' என்று கைகளைத் தூக்கியும், வாயைக் குவித்தும் அபிநய பூர்வமாய்ச் சொல்லியது.

''என்னது? மழைத்தண்ணி விழுகிறதை வேடிக்கைப் பார்த்துக்கிட்டு நிற்கானா? வேடிக்கை என்ன வேண்டிக்கிடக்கு? நாலு குடம் தண்ணியைப் பிடித்து வைத்தாலாவது, நாளையும் பின்னேயும் சோறு பொங்கிறதுக்கு ஆகும். ஆத்துத் தண்ணிக்குக் காத்துக்கிடக்கிற அலப்பரையாவது மிஞ்சும். அவனைக் கூப்பிட்டு, குடையைக் கையில் கொடுத்து தண்ணிபிடிக்கச் சொல்லக் கூடாதா?''

உள்ளே போய் இரண்டு செப்புப் பானைகள் இரண்டு கைகளில் தூக்கிக்கொண்டு வந்தார். கைக்கு ஒன்றாய்த் தூக்கிக் கொண்டு, தோளோடு கழுத்தைச் சாய்த்துக் குடையை அணைத்து முதுகில் ஏந்தி, வாசல் பக்கம் போனார். நடையில் பானைகளை இறக்கி வைத்தபடி, தண்ணீர் விழுகிற பக்கம் பார்த்தார்.

தண்ணீர் நிறையத்தான் விழுந்து கொண்டிருந்தது. எதிர்த்த வீட்டு மச்சுத் 'தட்டோட்டி' வடிகாலிலிருந்து தண்ணீர் இரண்டு உள்ளங்கை அகலத்திற்குப் பட்டையாய், பாதித்தெருவில் விழுகிற அளவுக்கு வேகமாய் வளைந்து விழுந்து கொண் டிருந்தது. அவருடைய பையன் அதில் கண்களை மூடி, இரண்டு கைகளையும் நெஞ்சோடு பின்னிக்கொண்டு குளித்துக் கொண் டிருந்தான். வாய் மாத்திரம் அவ்வப்போது சிரித்துக் கொண்டும், தண்ணீரை வாங்கி வாங்கிக் கொப்பளித்துக் கொண்டுமிருந்தது. 'அருவி விழுது, அருவி விழுது' என்ற வார்த்தைகளையே ஒரு ராகம்போல் பாடிக்கொண்டு, கால்களை மாற்றி மாற்றி உற்சாக மாய் அவன் ஆடிக்கொண்டிருந்தான். உச்சித் தலையில் தண்ணீர் விழுந்து, முடியெல்லாம் நெற்றியை மறைத்துக் கிடந்தது. சுவர்ப்பக்கமாய்த் திரும்பி முதுகைக் காட்டிக் குளித்தான். 'ஹோய்' என்று கைகளை உயர்த்திச் சத்தம் போட்டு, மேலே பார்த்துத் தண்ணீருக்கு எதிரே முகத்தைக் காட்டினான். மூடின கண்களைத் திறக்காமலேயே, குத்துக் காலிட்டு உட்கார்ந்து, தொண்டை நடுங்குவதுபோல், 'பிள்ளை பிடிக்க வருகிறவன்' மாதிரிச் சத்தம் கொடுத்துக் கூச்சல் போட்டான். கைகளைச் சேர்த்துத் தரையில் பதித்துக்கொண்டு, கையிலும் தலையிலும் மாறி மாறித் தண்ணீர் விழுகிற வகையில் முன்னும் பின்னும் சாய்ந்து ஆடினான். கீழே இருந்து அங்குலம் அங்குலமாகக் கையை உயர்த்தித் தண்ணீரை மேல்நோக்கித் தள்ளுகிறபோது தரைச்சக்கரம்போல் உள்ளங் கைகளிலிருந்து பூப்பூவாய்ச் சிதறுகிற தண்ணீரை ரசித்தான்.

அவர் பார்த்துக்கொண்டே நின்றார். உள்ளுக்குள் மௌன மாய் மனதால் அழுதார். செப்புப் பானைகளையும் குடையையும் தூக்கிக்கொண்டு, நனைய நனைய வீட்டைப் பார்க்கப் போனார்.

''கையிலே செப்புப் பானையுங் குடையுமா திரும்பி வந்தாச்சே என்ன விஷயம்? அவனைக் காணமா? அந்தக் கரிமுடிவான் இந்த மழையோட மழையாய் எங்கே போய்த் தொலைஞ்சான்?''

இரண்டு வினாடி பதிலே சொல்லாமல் அவர் அவளையே பார்த்துக்கொண்டிருந்துவிட்டு, பின்பு தரையில் சாய்த்து வைத்திருந்த குடைக்கம்பி முனைகளின் வழியாய்க் கசிந்து, நூலாய்த் தண்ணீர் நெளிந்து பெருகுவதைப் பார்த்தபடியே கரகரத்துச் சொன்னார்:

''குற்றாலத்துக்கு.''



# ரீதி

**பூமணி**

அந்தப்படியே முடிவாயிற்று.

மூன்று பேரும் ஒடமரத்து நிழலில்போய் உருண்டார்கள். தொரட்டிக் கம்பு மரக்கொம்பைக் கவ்வி ஏலட்டம் போட்டது.

உதிர்ந்து கிடந்த பூக்கருகல்களைப் பொறுக்கி நெறித்துக் கொண்டே பெரியவன் கேட்டான்.

''அப்ப இண்ணக்கி கஞ்சியில்லையாக்கும். எங்க வீட்ல ஆருருந்தா?''

சின்னவன் தொண்டை நனைத்தான்.

''ஒங்கம்மா புள்ளை யாட்டீருந்தா. புளிச்ச தண்ணிக்குள்ள கூட இல்லன்னு கையை விரிச்சுட்டா... அவன் வீட்ல ஆளவே காணும்.''

''நீ குடிச்சிட்டு வந்தயா?''

''அதெல்லாம் கேலி மயிருல்ல. கொஞ்சம் நஞ்சம் இருந் ததவும் எங்கண்ணக்காரன் உருட்டீட்டான்.''

''ஆரு படிக்கிறவனா?''

''ஆமாமா அவன் ஒருத்தன் வந்து கெடக்கான்ல வீட்ல.''

கரிசல் புழுதியை முகர்ந்த வெள்ளாடுகள் விதறுபட்டு ஓங்கரித்தன. பட்டுக்கிடந்த இலந்தைச் செடியையும் கொம்ட்டி நெற்றையும் கொறிப்பதுடன் அவை அடங்குவதாயில்லை. ரோட்டோரம் சில தோட்டப் பசப்புக்களைத் தவிர, எட்டாக் கை வரையில் ஒரே கரிசல் விரிப்புத்தான் கருகிக் கிடந்தது.

''செருப்புக் காலோட ஒரு ஓட்டம் ஓடி ஆட்டத் திருப்பீட்டு வந்துரு. எங்கயாச்சும் பெறப்புடுவோம்.''

''இங்க திருப்பீட்டு வந்து என்ன செய்ய. ஆட்டுக்கு வகுறு நெறஞ்சாபோகும். அந்தானக்கி சில்லாங் காட்டுக்குப் போவொம்.''

''அதுஞ் சரிதான். ரெண்டு கொப்புக் கொழைய வளச்சுக் குடுத்துட்டே போனாச்சுனா தென்னமரத்துக் கரண்டுக் கெணத்துக்குப் போயிறலாம்.''

அவர்கள் கிளம்புகையில் மேற்கே வெயில்லையில் ஆட்டுக் கூட்டம் நீய்வது போலத் தெரிந்தது.

''ஏலே ஆட்டக் குளுப்பாட்டி எத்தன நாளாச்சு. காணம் வந்துரும் போலருக்கு.''

''இவன் ஒருத்தன், ஆட்டுக்குத் தண்ணி காட்றதே பெரி சாருக்கு. இதுல குளிப்பு வேற கேக்குதோ.''

''அந்தா தெக்குத் தாருல கம்மந்தட்ட சும்மாதான கெடக்குது. அதுல வுட்டாக்கூட ரெண்டு கடிக்குமே.''

''வேற வென வேண்டாம். அவரு தன்னால் ரெண்டு மாட்ட வச்சிட்டு கூளத்துக்குத் திண்டாடுறாரு. கண்டுக் கிட்டாருன்னா நொக்கப் பிதுக்கிப்பிடுவாரு.''

''இண்ணக்கி ஆட்டுக்கு என்னதான் செய்யப் போறமோ தெரியல. எளங்குட்டி வீட்ல பாலுக்குப் பாடாப்படுத்தும்.''

''அங்க பாரு மழத் தண்ணியில்லாம மொச்சிகூடப் பட்டுப் போயிக் கெடக்குது.''

எதிர்ப்பட்ட பனை மரத்தில் கல் வைத்துச் சதைத்து நெஞ்சில் சாறு தெறிப்பதில் நிம்மதிப்பட்டான் இன்னொருத்தன். சின்ன வனுக்கு வயிறு குடைந்தது. தூரத்தில் சில உருவங்கள் கோடுகளாய் நெளிந்தன.

''ஏய் நான் ரோட்டுக்கு வடக்க கொய்யாத் தோட்டத்துக்குப் போயிட்டு வரட்டுமா?''

''ஏலேய் போயும் போயும் அதுலயா கை நீட்டப் போற. அவரு ஒரு பிசினாறி. கண்டாச்சுனா அலறீட்டு வருவாரு கடமாங் கொளவி மாதிரி.''

''நாயிருந்தாக்கூட வேட்டையாடலாம். அது இன்னியேரம் எங்க நாக்கத் தள்ளீட்டுக் கெடக்கோ.''

''எங்கயாச்சும் கரண்டுத் தொட்டிக்குள்ள கெடக்கும்.''

''அதுல்லாம அணிலு வேட்டையாடுவமே.''

''அருவாருக்குதுல்ல, ரெண்டு பனையப் பாத்து ஏறலாம்.''

''சரி வெளாரு செதுக்கீட்டு வா.''

பெரியோடைக் கரையில் கும்மல் பனைகளில் அணில் கிடக்கும் நிழலை அருவம் பார்த்து முடிக்க, ஐந்து பனை தேறியது. பெரியவன் மூன்று பனைகளில் ஏறி ஓலையோடு சேர்த்து அணில் கிடந்த பாகத்தை வெட்டி விழுத்தாட்டினான். பதமான வெட்டில் அவை கோரைப் பட்டு விழுந்து செத்தன. விடலிப் பனை யொன்றில் ஏறிய சின்னவன் குருத்தையொட்டிக் கிடந்த அணிலை ஓலையுடன் பிடித்தே நெறித்துக் கொன்றான். இன் னொன்று இந்தச் சலசலப்புக்கு நழுவி விட்டது.

சின்னவன் சுதாரித்துச் சொன்னான்.

''நாலாச்சு.''

ஆடுகள் ஓடமர அடர்த்திக்குள் மறுக்கி மறுக்கி நெற்றுப் பொறுக்கித் திரிந்தன.

''இப்ப தீக்குச்சு வேணுமே.''

''நடுக்காட்ல ஆருட்டப் போயிக் கேக்குறது?.''

''பெறகு இதத் தூக்கீட்டே அலையவா. சூட்டாங்கறி போட்ருவொம்.''

''அப்ப கொத்தப் பருத்தி கெடந்தா பெறக்கீட்டுவா. நான் ரெண்டு சீனிக்கல்லு பாத்துட்டு வாறென். சிக்கி முக்கி தட்டுவொம்.''

கொஞ்ச நேரத்துக்கெல்லாம் கரையோரம் தத்துக்குக்கீழ் தீமூட்டம் புகைந்தது. முகஞ் சுண்டச்சுண்ட நாலு அணில்களை யும் நன்றாய் வாட்டிக் குடலெடுத்தனர்.

''சூட்டோட சூடா ரெண்டு மூணு கல்லத் தீக்குள்ள போட்டு வையி.''

''நீ யென்ன அப்பிடிக் கொடலெடுக்க ஈரலெல்லாம் சேத்து. அத இங்க கொண்டா.''

சின்னவன் ஈரல் துண்டைக் கத்தரித்து தீயில் கருக வாட்டி வாயில் பிட்டுப் போட்டுக் கொண்டான்.

''ஆடு எங்க போகுதுன்னு பாருலே.''

''அது எங்க போகப் போகுது இந்த வெயில்ல.''

''நாயிருந்தாலும் இந்தக் கொடலத் திங்கும்.''

சுட்டெடுத்த அணில்களை சப்பையும் சதையுமாய்ப் பிய்த்து, சூடேறப் போட்ட கற்களில் ஒற்றி நீருறிஞ்ச வைத்தார்கள். பிறகு

மூன்று பங்காய் வைத்து கல்லாங்கூறு போட்டுப் பகிர்ந்து தின்றார்கள்.

கையைப் புழுதியில் துடைத்துவிட்டு அவர்கள் எழுந்து பார்த்தபோது ஆடுகள் அனேகமாய்த் தென்ன மரத்துக் கிணற்றை எட்டியிருந்தன.

''இண்ணக்கி அம்புட்டுத்தான் தொலஞ்சொம்.''

குடல் தெறிக்க ஓடினார்கள். ஆடுகள் அத்தனையும் தோட்டத்தில் மிளகாய்ச் செடிகளை உழப்பிக்கொண்டு போய் கிணற்றைச் சுற்றித் தளிர்த்திருந்த பாலாட்டஞ் செடிகளை மொய்த்திருந்தன.

தெற்கு மடக்கில் உழுதுகொண்டிருந்த புஞ்சைக்காரர் அவர்களுக்கு முந்தியிருந்தார். அவர் கையில் சாட்டை கம்பு இருந்தது.

அவர்கள் ஆட்டுக் கும்பலை ஓடித் திருப்பி விரட்டியதும் அவர் இரைந்தார்.

''ஏலே சாதி கெட்ட சலுப்பத் தேவிடியா புள்ளீகளா, இங்க வாங்கலே. வெள்ளாமக்காடு தெரியாம அம்புட்டெடன்னலே பூளக் கொழுப்பு. இப்ப மூணு பேரவும் தென்ன மரத்துல கெட்டித் தொலிய உரிக்கனா என்னன்னு பாரு.''

உழவு கட்டிக்குள் விழுந்தடித்து ஓடி சின்னவனைச் சாட்டையால் விளாசினார். அவன் கூப்பாடு போட்டுக்கொண்டு ஓட்டம் பிடித்தான். அதுக்குமேல் அவரால் பின்தொடர முடியவில்லை. மிச்சக் கோவத்தைக் கண்டமானக்கி வைது தீர்த்துக் கொண்டார்.

முள்ளுக் காடெல்லாம் தாண்டி வந்த பிறகும் சின்னவனுக்கு விக்கலும் விம்மலும் அடங்கவில்லை. உடம்பைச் சுற்றி புரி முறுக்கியது போல் தடிப்பு சிவந்திருந்தது.

''பெலமாப் பட்ருச்சோடா?''

சின்னவன் பேசவில்லை. மூக்கை உறிஞ்சினான்.

''அந்தானக்கி அவனத் தொரட்டிக் கம்புட்டு ஒரு போடு போடுவமான்னு வந்துச்சு. என்னமோ வெள்ளாமையெல்லாம் அழிஞ்சு போனது போலல்ல வாரான். இருக்கட்டும் ஒரு நாளைக்குத் தொரட்டிக் கத்திய நல்லாத் தீட்டீட்டு வந்து தென்னங் குருத்தெல்லாம் அறுத்துப் போட்டுட்டுப் போயிறென்.''

''இவன் துமுறுக்கு இன்னேரம் நம்மூருன்னா கெதி என்னாகும். ஈரக்கொல செதறிப் போகும். இண்ணக்கினுல்ல தொயந்து

கை நீட்டீட்டுத்தான் வாரான். எண்ணக்கித்தான் பூச வாங்கிக் கெட்றான்னு தெரியல.''

''ஆடு வெள்ளாமையில் ஒரு எல கூடக் கடிக்கல. பாவக்காரப் பெய தொட்டித்தண்ணியில சாணியக் கரச்சுவுட்டுக்கிறதப் பாரு. ரெண்டு நெத்தப் பெறக்குனதுக்கு அதுக தண்ணிகூடக் குடிக்கல.''

இனியொரு நாளைக்கு என்ன செய்யணும்னுருக்கென் தெரியுமா. வார வெருச்சியில் கத்திக் கம்பு வச்சு குத்தி ஏந்திற ணும். இவனால் செயிலுக்குப் போயிட்டாத்தான் என்ன. வாய்க் கால்ல நிண்ணு ஆடு தண்ணி குடிச்சிட்டாக்கொறஞ்சா போகுது அத்தனையும் பேசாம ரோட்டுக்கெணத்துக்கு ஆட்டவுடு.''

ஒத்தக் கடையோரம் ரோட்டுக் கிணற்றில் கமலை இறவையாடியது.

குறண்டிச் செடிகளில் சில்லான் அடித்து விட்டு, அவர்கள் லாத்தலாய்ப் போனார்கள்.

பெரியவன் சின்னவனைக் கேட்டான்.

''ஒங்க அண்ணன் எதுக்குடா ரொம்ப நாளா இங்க வந்து கெடக்கான் படிப்ப வுட்டுட்டு.''

''என்னமோ பெரிய படிப்புப் படிக்கணும்னு சொல்லி, ரெண்டு மூணு ஆட்ட வித்து அனுப்புனாக. அங்க அரிசியில்லாம சோறு சரியாப்போட மாட்டங்கன்னு சத்தம் போட்டாங்களாம். எல்லாத்தவும் இழுத்து மூடி வெறட்டியடிச்சிட்டான்.''

''சோறில்லாம வகுத்துப் பசியோட எப்பிடி உக்காந்துட்ருக் கிறது. ஒங்கய்யாவுக்குக் கோவங் கோவமாருக்குமே.''

''அதுக்கென்ன செய்யிறது. பொட்டியாருக்குக் கூழுக் களின்னா மொகஞ் சுண்டும். எங்கம்மா வேல செஞ்சிட்டு வார தவசத்துல தான் கம்மங்கஞ்சி காச்சிக் குடுக்கிறது.''

''ஒங்க வீட்டோராம் பிச்சையா குடும்பத்தோட எங்கயோ போயிட்டானாமில்லடா?''

''ஆமா மலப்பக்கம் போயிட்டான். வீட்ல கஞ்சிக்கில்லன்னா என்ன செய்யிறது. வேற வேலையுமில்ல.''

''கெணத்துக் காடெல்லாம் தண்ணியில்லாமக் கெடக்கையில என்ன வேலருக்கும்.''

''மழையாச்சும் பேயுதா, வேண்டாம் வேண்டா மிங்கப் பேயிறது. இப்பிடி நேரம் போட்டெடுக்கிறது.''

''கொஞ்ச நா போச்சுனா எல்லாரும் கௌம்ப வேண்டியது தான்.''

கமலை மாடுகள் கக்கிய நுரைக் குமிழ்கள் பறந்தவண்ண மிருந்தன. கமலையடித்த கிழவர் கூனைக்கொருக்க கிணற்றுக் குள் எட்டிப் பார்த்துக் கொண்டார். ஒரு கூனைத் தண்ணீர் ஊற்ற மாட்டு வாலைப் பிடித்துக்கொண்டு ரொம்ப தூரம் வடத்தில் உட்கார வேண்டியிருந்தது.

''அடேய் ஒழப்பீராம ஆட்டவுடுடா. எங்கயாச்சும் ஒடஞ்சிருச் சுனா எட வத்திப் போகும். ஆளுல்லாத நேரத்துல வண்ணாப்பெய வந்து வெளுத்துருக்கான் கெணத்துக்குள்ள. அவனுக்கு வேற எடங்கெடைக்கல போலருக்கு. அது பாரு அந்த அழுக்குச் சீண்றத்துக்கு தண்ணிய வாயிக்கிட்டக் கொண்டு போக முடியல.''

ஆடுகள் ஆசைதீரத் தண்ணீர் குடித்துக் கிளம்பின. சில முதுகுதறி வெயிலுறைப்பை நாக்கால் தடவிச் சென்றன. கமலைக் குழியோரம் வைத்திருந்த தண்ணீர்ச் செம்பைத் தட்டிவிடாமல் கவனித்துக் கொண்டார் கிழவர்.

அவர்கள் மூன்று பேரும் முகங்கழுவித் தெளுச்சியாகப் புறப்பட்டார்கள்.

''ஒத்தக் கடையோரம் போயிக் கொஞ்சம் அமத்துவமே.''

''ரோட்டு மேலயா?''

''அதுக்கென்ன, வேற மரமெங்க இருக்கு. வாங்கப்பா போவொம்.''

சின்னவனுக்கு இதெல்லாம் மனசிலில்லை.

''எனக்குத் தண்ணி தவிக்குது. இது வெறுஞ் சவருத் தண்ணி. வாயில வய்க்க முடியல.''

''எங்களுக்கும் தவிக்கத்தான் செஞ்சது. என்ன செய்யிறதுன்னு இதுலதான் ரெண்டு கையள்ளிக் குடிச்சொம்.''

''தாயக் கழிச்சாலும் தண்ணியக் கழிக்கப்புடாதுலே.''

''நான் எங்கயாச்சும் போயிக் குடிச்சிட்டு வாறென்.''

''அந்தா வாகமரத்தோரம் கரண்டுக் கெணறு இருக்குது பாரு. அங்க போயிக் குடிச்சிட்டு வா. நாங்க இப்பிடியே ஒத்தக் கடைக்குப் போறோம்.''

சின்னவன் வேகமாய்ப் போய்த் திரும்புவதற்குள் ஆட்டுக் கூட்டம் ரோட்டு வேம்படியில் கூடிக் குழை கடித்துக் கொண் டிருந்தது. பெரியவன் அவசரத்தில் தொரட்டிக் கம்பால் வேப்பங்

குழைகளை வளைத்து இழுத்துப் போட்டான். ஆடுகள் அமர்ந்து தின்பதைப் பார்க்க சந்தோசமாயிருந்தது அவனுக்கு.

''என்னலே தண்ணி குடிச்சயா?''

''குடிச்சென். கெணத்துக்காரப் பெய படிய இடிச்சுப் போட்ருக்கான்.''

''பெறகு?''

''கரண்டுக் கொழாயி வழியா எறங்கிக் குடிச்சிட்டு வாறென்.''

அண்ணாந்திருந்த பெரியவன் கொஞ்சம் குனிந்து பார்த்தான். அந்த நேரத்தில் கிழக்கேயிருந்து முரட்டு வாக்கில் வந்த கார்ச் சத்தத்துக்கு ஆட்டுக் கூட்டம் ஒரேயடியாக மிரண்டதைப் பார்த்ததும் சின்னவன் வாய்க்கு வந்தபடி வைது கொண்டே காருக்குப் பின்னால் ஓடிக் கல்லெறிந்தான். அப்பவும் பெரியவன் குழையிழுத்துக் கொண்டு தானிருந்தான்.

சிதறிக் கிடந்த ஆடுகளை ஒன்று திரட்டித் திருப்பி வந்த இன்னொருத்தன், ''அந்தக் கொழாயில பெரிய பாறையத் தூக்கிப் போட்ருக்கணும்லே'' என்று தென் சரிவில் உயர்ந்து தெரிந்த ட்ரான்ஸ்பாரத்தை நோக்கிக் கல் உச்சினான்.

வெள்ளாடுகள் குழை கடிப்பதில் அமைதி கண்டிருந்தன. ❑

# கரையும் உருவங்கள்

**வண்ணநிலவன்**

தலையைக் குனிந்தபடியே நடந்து வந்து கொண்டிருந்தான். அந்தத் தெருவில் நடமாட்டம் குறைந்துவிட்டது. ஒரு வீட்டுக் குள்ளிருந்து, 'ராதையின் நெஞ்சமே...' கேட்டது. வழக்கமாக எந்த இடத்தில் அந்தப் பாடலைக் கேட்டாலும் நின்று ரசித்துக் கேட்பவன், இன்று நிற்காமல் போகிறான்.

தெருவின் திருப்பத்தில் மட்டும் ஒரு டியூப்லைட் எரிந்து கொண்டிருந்தது. டீக்கடைக்காரன் சாமான்களையெல்லாம் ரொம்பச் சொந்தத்துடன், தெருவில் பரப்பி வைத்துக் கழுவிக் கொண்டிருந்தான்.

''என்ன அண்ணாச்சி... படத்துக்குப் போய்ட்டு வர்றீங்களா?''

''இல்லேப்பா...'' என்று தேங்கிக்கிடந்த கரித் தண்ணீரைத் தாண்டிக் குதித்தான். செருப்பு அறுந்து விட்டது. இரண்டு நாட்களாகப் பயமுறுத்தி வந்த செருப்பு, இன்று வீட்டுக்கருகில் ஆள் நடமாட்டமற்ற ராத்திரி வேளையில் அறுந்து போனது ஓரளவு நிம்மதியாய் இருந்தது; ஆனாலும் நாளைக்குத் தைக்க வேண்டும். பதினைந்து பைசாவாவது ஆகும்...

குனிந்து அந்தச் செருப்பையும் மற்றொரு செருப்பையும் கழற்றிக் கையில் எடுத்துக் கொள்கையில் மனதுள் பொங்கிய வேதனையை, 'சே' எனக் கூறிக் குறைக்க முயன்றான். பல சரக்குக் கடையின் முன்னால் பலகை பெஞ்ச் காலியாய்க் கிடந்தது. அதிலேகூடப் படுத்துவிடலாம். எஸ். எஸ். எல். சி. படிக்கா திருந்தால் ஒருவேளை அதில் படுக்கத் தைரியம் வந்திருக்கக் கூடும்.

தொடர்ந்து நடந்தான்.

வீட்டுக்குள் விடி விளக்கு மட்டும் எரிந்து கொண்டிருந்தது. அடுப்படியில் விளக்கொளி தெரிகிறது. கதவைத் தட்டக் கூச்சப்

பட்டு வெளியே நிற்கிறான். தெருவாசல் ஜன்னலிருட்டில் முகம் தெரிகிறது. யாரென்று தெரிகிறதுக்குள் வாசல் கதவு திறந்து கொண்டது. அக்காதான் கதவைத் திறந்தது. அந்த அரை இருட்டில் அவள் தலையிலிருந்த பிச்சிப் பூவின் வாசனை தனியே குளிர்ச்சி தந்தது.

''ஏண்டா ஊமையா வாசல்லே நின்னுக்கிட்டிருக்கே? கதவைத் தட்டினா என்னடா? இவ்வளவு நேரமாச்சே, வெளியே வந்து பார்த்துட்டுப் படுப்போமேன்னு, வாசலுக்கு வந்தேன்... எவ்வளவு நேரமா இப்படி நிக்கிறே...? ஏண்டா இப்புடி ஆயிட்டே.. கதவைத் தட்டினாத்தானே யாரும் திறப்பாங்க... நல்ல புள்ளைடா நீ? சரி... சரி.... வா..''

திண்ணைக்கு அடியில் குனிந்து மெதுவாக சத்தம் கேட்காமல் செருப்பைக் கீழே வைத்தான். அக்கா கதவை தாழ்ப்பாள் போட்ட சத்தத்தில் விழித்துக்கொண்ட அப்பா தலையைத் தூக்கிப் பார்த்தார்.

''யாரு சங்கரனா? எங்கேடா இவ்வளவு நேரமா சுத்திப் பிட்டுவாரே? காலாகாலத்துல வந்து கடனப் பத்திட்டுப் படுத்தா என்ன? பொட்டப்புள்ள எம்புட்டு நேரத்துக்கிடா முழிச்சிக்கிட்டு இருப்பா...?''

சுவரோடு சுவராய் ஒதுங்கி நின்றவனைப் பார்த்து ''நீ வாடா'' எனக் கூறி உள்ளே போனாள் அக்கா. அடுப்படியைக் கழுவி விட்டிருக்க வேண்டும். இளம் பச்சை வர்ணத்தில் பளபள வென்றிருந்த சில இடங்களில் ஈரம் காய்ந்து போயிருந்தது. ஒரு சாக்குத் துண்டை விரித்து, சங்கரனை உட்காரச் சொன்னாள்.

''எனக்குச் சாப்பாடு வேணாம்'' என்று நிலைப்படியருகே வந்து சொல்லிவிட்டுத் திரும்பிப்போக முயன்றான் அவன். வேக மாக வந்து, அவன் கையைப் பிடித்திழுத்து நிறுத்தினாள்.

அவனது முகத்தையே கொஞ்ச நேரத்துக்குப் பார்த்தாள். அவன் தலையைத் தொங்கப்போட்டுக் கொண்டான்.

''எதுக்குடா வேண்டாம்ங்கிறே... வா வந்து சாப்டுட்டுப் படு... பெரிய இவன் மாதிரிதான்....''

இழுக்காத குறையாக இழுத்து வந்து, தோளைப் பிடித்து அமுக்கி, சாக்கின் மீது உட்காரப்பண்ணினாள். தயாராய்ப் பிசைந்து வைத்திருந்த சாப்பாட்டுத் தட்டை அவன்முன் வைத்து விட்டு சிறிய மரப்பலகையைப் போட்டுக் கொண்டு எதிரே உட்கார்ந்து கொண்டாள்.

அவன் சாப்பிடவில்லை. தட்டையே முறைத்துப் பார்த்துக் கொண்டிருந்தான்.

''என்னடா பார்த்துகிட்டேயிருக்கே... சாப்பிடு... ம்... மத்தியானம் சாப்பிட்டதுதானே... சாயந்தரங் காப்பிகூடக் குடிச்சிருக்க மாட்டியே.... சாப்பிடு.''

அவளுடைய அழுத்தமான பிரியத்தை அவனால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. பொங்கி வந்த அழுகை தொண்டைக் குழியில் மரக்கட்டை மாதிரி தடுக்கிக்கொண்டு நின்றது.

பலகையை இழுத்துப் பக்கத்தில் போட்டு உட்கார்ந்து கொண்டாள். ''ம்... கையைக் காட்டு....'' சோற்றை உருட்டிக் கையில் போட்டாள்.

''ஒனக்கு மட்டுமாடா வேலையில்லாமே ஊர்ல இருக்கே? எவ்வளவு பிள்ளைகள் வேலையில்லாம உன்னைமாதிரி படிச்சுப் போட்டு வீட்ல இருக்கு. வீட்டுக்கு வீடு வாசப்படி. எனக்கும்தான் வயசும், பொழுதும் ஏறிகிட்டே போகுது. நான் யார்கிட்டேடா போய் அழட்டும்?...ம் கையை நல்லா விரி, சோறு கீழே சிந்திரப் போகுது... யார் வீட்டுக்கோ வர்ற மாதிரி தயங்கித் தயங்கி வாரே...யார் வீட்லேயோ சாப்பிடுத மாதிரி கூச்சப்படுறே...ம்... வாயில் போடு.''

இன்னும் கொஞ்சம் சோறு கேட்டு வாங்கிச் சாப்பிட்டான். அங்கணத்தில் கைகழுவத் தண்ணீர் ஊற்றினாள்.

''பார்த்துப் போ... இதுதான் கால்மாடும் தலைமாடுமா படுத்துக் கெடக்கும். இந்தா, இதெல்லாம் எடுத்து வச்சிட்டு வாரேன். போயிப் படுத்துக்கோ...''

வேட்டியில் கையைத் துடைத்தபடி அறைக்குள் போனவன் விளக்கைப் போட்டான். பெரிய தம்பி புரண்டு படுத்தான். ஊஞ்சல் சத்தம் எழும்பித் தேய்ந்தது. அந்தச் சத்தத்தை அவனுக்கு நினைவு தெரிந்த நாளிலிருந்து கேட்டு வருகிறான். அது அவனுக்கு ரொம்பப் பிடித்தமான சத்தம். அந்த ஊஞ்சலில் தம்பி, அக்கா, அவன் எல்லோரும் லீவு நாட்களில் பஸ் விளையாடு வார்கள். அவன்தான் டிரைவர். கைநிறைய காலண்டர் தாளைக் கிழித்து வைத்திருக்கும் தம்பி கண்டக்டர். ஊஞ்சலை ஓடி ஓடி ஆட்டிவிட்டுவிட்டுக் கடைசியில் ஏறிக்கொள்ளும்போது, ஒரு முறை தவறி விழுந்து நெற்றியில் வெட்டிவிட்டது. நெற்றித் தழும்பிற்கு அவனது கை தானாகவே போயிற்று.

தம்பியின் சிதறிக்கிடந்த புத்தகங்களை எல்லாம் எடுத்து அடுக்கி வைத்தான். நன்றாகப் படிக்கும் தம்பியை கஷ்டத்தோடு கஷ்டமாய் அப்பா படிக்க வைக்கிறார். ஆனால் அவனுக்கோ.... படிப்புமில்லை, வேலையுமில்லை.

சட்டையைக் கழற்றிக் கொடியில் போட்டான். படுக்கையில் சுவரோரமாகச் சாய்ந்து உட்கார்ந்து கொண்டான். தூங்கப் போறதில்லை. இருந்தாலும் படுத்தே ஆகவேண்டும். இது என்ன கஷ்டம்? வீட்டுக்குள்ளிருக்கவே சங்கடமாக இருந்தது.

அக்கா வந்தாள். அவனுடைய தலைமாட்டில்தான் அவளுக்குப் படுக்கை. ''இன்னும் என்ன யோசனை பண்ணிக்கிட்டிருக்கே! படுக்க வேண்டாமா?''

பெருமூச்சுவிட்டான்.

இவன் தலையணையிலும் அவள் தலையணையிலுமாகச் சேர்ந்து உட்கார்ந்து கொண்டாள். மங்கிய விடி விளக்கு வெளிச்சத்தில் ரொம்ப அழகாக இருந்தாள். வீட்டில் எல்லாரையும்விட அவள் நல்ல சிகப்புதான். இருந்தும் கல்யாணம் ஆகவில்லை.

''அந்தக் கம்பெனில யாரோ உன் பிரண்ட் இருக்கான், வேலை விஷயமா வரச்சொன்னான்னு சொன்னியே, பார்த்தியா?''

கொஞ்சநேரம் பேசாமல் இருந்துவிட்டு மெதுவாகப் பேச ஆரம்பித்தான்.

''பார்த்தேன். நாளன்னைக்கு வரச்சொல்லி விட்டிருக்கான். வழியில் லாலா சத்திர முக்கில் ஆறுமுகத்து மாமாவப் பார்த்தேன். நாளைக்குத் தாளையூத்துக்கு வா. எங்க சூபர்வைசர்கிட்ட சொல்லலாம்னு சொன்னா...''

ரொம்பப் பயந்து தாழ்ந்த குரலில் பேசினான்.

''அவுஹ வீட்டுல எல்லாரும் சௌக்கியந்தானா? அவுஹ பையன் வேலையிலே சேர்ந்தாச்சாமே...ம் பின்னே நம்ம அப்பாவை மாதிரியா? இவுஹளுக்கு இருக்கிற செல்வாக்குக்கு யார்கிட்டயாவது சொல்லியடிச்சு முயன்றாக் கிடைக்கும்....''

அந்த மாமாவின் பையனைக்கூட அக்காவுக்குப் பேசி விட்டு, ஒன்றும் நடக்கவில்லை.

''நாளைக்கு நீ தாளயூத்துக்கு எப்பப் போகப்போற?''

''என்னத்தைப் போகச் சொல்லுதே. அங்கேன்னாப்பலே வேலையை வெச்சுகிட்டுக் காத்திட்ருக்காஹளாக்கும்.''

''போடா முட்டாள். அந்த மாமா ஒன்னைய மெனக்கெட்டுப் பாத்துக்கூப்பிட்டிருக்கா; போய்ட்டு வருவியா....ம் பஸ்ஸுக்குக் காசு வைச்சிருக்கியா? நீ காசு இல்லாட்டா சொல்லாமக் கொள்ளாம நடந்தேக் கூட போயிருவியே..''

''ம் இருக்கு...''

''பொய்... சொல்லாதே.'' கொடியில் கிடந்த அவன் சட்டையை உட்கார்ந்தபடியே கையை நீட்டி இழுத்தாள். ஒரு ஐந்து பைசா கீழே விழுந்தது. சட்டையில் இருந்து ஒரே வியர்வை வாடை. பைக்குள் கையை விட்டுத் தேடினாள். இரண்டு கசங்கிப்போன பஸ் டிக்கெட்டை எடுத்து வெளியே போட்டாள்.

''எங்கடா காசு வச்சிருக்க! எனக்கு ஒன்னையத் தெரியாதடா'' என்று எழுந்துபோய் பீரோவைத் திறந்தாள். அவளுடைய துணிகள் இருந்த தட்டிலிருந்து ஒரு சாக்லெட் டப்பாவை எடுத்தாள். டப்பாவிலிருந்த சின்னக் குங்குமச் சொப்பை எடுத்துக் கொண்டு வெளிச்சத்திற்கு வந்தாள். மடக்கி வைத்திருந்த ஒரு ரூபாய் நோட்டைப் பிரித்து அவனிடம் நீட்டினாள்.

''எதுக்கு அக்கா...'' மெல்லச் சொன்னான் அவளை அண்ணாந்து பார்த்து.

''சரிதாண்டா...ரொம்ப பிகு பண்ணிக்கிடாதேடா...'' என்று சொல்லிவிட்டு சிரித்தாள். மீண்டும் அருகில் வந்து அமர்ந்தவள், சட்டையை எடுத்துக் கைமடிப்பை, பிரித்தாள். அவனிடமிருந்த ரூபாயை வாங்கி அந்த மடிப்புக்குள் சுற்றினாள்.

''இன்னைக்குத்தானே இந்தச் சட்டையைப் போட்டே... அதுக்குள்ளே ஒரே வேர்வையா ஆக்கிட்டு வந்திருக்கியே, சோப்புப் போட்டுக் குளிக்கிறதை ஐயா விட்டாச்சு போலிருக்கு''

அவளை நேருக்கு நேர் பார்த்தான்.

''எல்லாம் நான் பார்த்துகிட்டுத்தானே இருக்கேன். இவ வீட்ல கெடக்கவதானே இவளுக்கு என்ன தெரியும்னு நெனச்சு கிட்டு இருக்கியா?.. சோப்புப்போட்டு குளிக்கறதை விட்டுட்டே.. எல்லாரும் பேஸ்ட் எடுத்து பல்லுத் தேய்க்கிறாங்க. நீ பதினைந்து பைசாவுக்குப் பல்பொடி வாங்கிட்டுத் தேய்க்கே... அம்மாவுக்கு இதெல்லாம் கவனிச்சுப் பார்க்கத் தெரியாது... உனக்கு என்னடா வந்திச்சு? வேலை இல்லாமே இருக்கதுக்காக இவ்வளவு ரோஷத் தோட இருக்கனுமாடா? அக்காவைப்பாரு, வீட்டுல உட்கார்ந்து பத்து வருஷம் முடியப் போகுது. எந்த சௌகரியத்தையாவது

கொறைச்சிருக்கேனா? ஆனாலும் நீ ரோஷக்காரப் பயடா?'' விசும்பலாகக் குறைந்தது குரல்.

சட்டென்று, முகத்தை அவள் மடியில் குப்புற வைத்துக் கொண்டு படுத்தான். அவள் அவனுடைய விம்மித்தாழும் முதுகைத் தடவிக் கொடுத்துக் கொண்டிருந்தாள். ❑

# ஆசிரியர் குறிப்பு

## அசோகமித்திரன்

இவரது இயற்பெயர் ஐ. தியாகராாசன். 1931 ஆம் ஆண்டு சிகந்தராபாத்தில் பிறந்தார். தொடக்ககாலத்தில் ஜெமினி ஸ்டுடியோவில் பல ஆண்டுகள் பணியாற்றினார். 1955ஆம் ஆண்டு எழுதத் தொடங்கிய இவர் ''கணையாழி'' இலக்கியத் திங்களிதழோடு நெருங்கிய தொடர்பு கொண்டவர். எழுத்தையே தொழிலாகக் கொண்டு வாழ்ந்து வருகிறார். ''கரைந்த நிழல்கள்'' (1969), ''தண்ணீர்'' (1973), முதலிய நாவல்களும் ''வாழ்விலே ஒருமுறை'' (1971) ''காலமும் ஐந்து குழந்தைகளும்'' (1974) முதலிய சிறுகதைத் தொகுப்புகளும் இவரது படைப்புகளில் குறிப்பிடத்தக்கவை.

## கு. அழகிரிசாமி (1923 - 1970)

கோயில்பட்டிக்கு அருகிலுள்ள இடைசெவல் கிராமத்தில் பிறந்த இவர் சிறுகதை, நாவல், கட்டுரை, மொழிபெயர்ப்பு எனப் பலதுறைகளிலும் ஈடுபட்டு உழைத்தவர். இசை, ஓவியம் போன்ற கலைகளிலும் ஈடுபாடு கொண்டவர். சில ஆண்டுகள் மலேயாவில் ஒரு பத்திரிகையின் ஆசிரியராகப் பணியாற்றி அங்குள்ள எழுத்தாளர்களை எழுத்துப் பணியில் ஊக்குவித்தார். ''அன்பளிப்பு'' என்னும் சிறுகதை நூலுக்காக இவருக்கு சாகித்திய அக்காடமி பரிசு கிடைத்தது.

## ஆர். சூடாமணி

1931ஆம் ஆண்டு பிறந்த இவர் எண்ணற்ற சிறுகதைகளையும் நாவல்களையும் எழுதியுள்ளார். ஏறத்தாழ 35 நூல்களின் ஆசிரியர். இவரது கதைகளில் உளவியற் சித்தரிப்பு முதன்மை பெறும். ''படிகள்'' (1965), ''அந்த நேரம்'' (1969) போன்ற சிறுகதைத் தொகுப்புகளும், ''மனத்துக்கு இனியவள்'' (1960) முதலிய நாவல்களும் இவருக்குப் புகழ்தேடித் தந்தனவாகும். ''கலை மகள்'' நாவல் போட்டியில் பரிசு பெற்றவர்.

## என்.ஆர்.தாசன்

*தத்துவச் சிந்தனைகளையுடைய இவரது படைப்புகள் தாகூரின் செல்வாக்கைக் காணலாம். ''சொற்கோலம்'' என்னும் வசன கவிதைகளில் இவர் சிறந்து விளங்குகிறார். ''உயரத்தி லிருந்து...'' (1988) ''மழையாய் மலராய்...'' (1986) ''எனது சிறுகதைகள்'' (1985) என்பன இவரது படைப்புகளில் குறிப்பிடத்தக்கன. தமிழ்நாடு அரசின் பரிசைப் பெற்றவர்.*

## இந்திரா பார்த்தசாரதி

*1930 ஆம் ஆண்டு பிறந்த இவர் டில்லி பல்கலைக் கழகத்தில் நீண்டகாலம் பணியாற்றி ஓய்வு பெற்றார். இப்போது பாண்டிச்சேரி பல்கலைக் கழகத்தில் நாடகப் பள்ளியின் துறைத் தலைவராகச் செயல்பட்டு வருகிறார். நாவலாசிரியராகவும், சிறந்த நாடக ஆசிரியராகவும் தமிழ் மக்களால் போற்றப்படுபவர். ''குருதிப்புனல்'' (1975) என்னும் நாவலுக்காக இவருக்கு சாஹித்திய அகாடமி பரிசு வழங்கப்பட்டது. தமிழ்நாடு அரசின் பரிசைக் ''ஔரங்கசீப்'' நாடகத்திற்கும் ''சுதந்திரபூமி'' நாவலுக் கும் பெற்றவர். ''தந்திர பூமி'' (1969), ''திரைகளுக்கு அப்பால்'' (1974), ''சத்திய சோதனை'' என்பன இவரது புகழ்பெற்ற படைப்புகள். இவரது 'உச்சிவெய்யில்' 'மறுபக்கம்' என்ற பெயரில் திரைப்படமாகி தமிழில் முதல் தங்கப் பதக்கத்தைப் பெற்றது.*

## ஜெகசிற்பியன் (1925-1977)

*இவர் சிறந்த சிறுகதை எழுத்தாளராகவும், நாவலாசிரியரா கவும் மக்களால் அறியப்பட்டவர். ஆனந்த விகடன் 1958ஆம் ஆண்டு நடத்திய நாவல் போட்டியில் இவரது ''திருச் சிற்றம்பலம்'' பரிசு பெற்றது. 10 வரலாற்று நாவல்களும் 15 சமூக நாவல்களும் 15 சிறுகதைத் தொகுப்புகளும் இவரால் எழுதப் பெற்றன. இவரது படைப்புகளுள் குறிப்பிடத்தக்கன ''ஆலவா யழகன்'' (1960), ''பத்தினிக்கோட்டம்'' (1964).*

## ஜெயகாந்தன்

*1934ஆம் ஆண்டு கடலூரில் பிறந்தார். புதுமைப்பித்தனுக்குப் பின் தமிழ் நாட்டில் மிகவும் பேசப்பட்ட எழுத்தாளர். இவரது ''சில நேரங்களில் சில மனிதர்கள்'' (1970) என்னும் நாவல் சாஹித்திய அகாடமி பரிசையும், ''சுந்தரகாண்டம்'' (1982) தஞ்சை*

தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் இராஜஇராஜன் பரிசையும் பெற்றது. இவரது சில நாவல்கள் திரைப்படமாக்கப்பட்டன. தொடக்க காலத்தில் மார்க்சிய இயக்கத்தோடு நெருங்கிய தொடர்பு கொண்டவராக இருந்தார். தமிழ்நாடு அரசின் பரிசு பெற்றவர்.

### சா. கந்தசாமி

*1940ல் பிறந்த இவர் 1970 களில் எழுத தொடங்கினார். இவர் ''கசடதபற'' என்னும் இலக்கிய இதழுடன் நெருங்கிய தொடர்பு கொண்டவர். ''சாயாவனம்'' (1969), ''தக்கையின் மீது நான்கு கண்கள்'' (1974) என்பன இவரது குறிப்பிடத்தக்க நூல்கள்.*

### கோவி. மணிசேகரன்

*சிறந்த வரலாற்று நாவலாசியராகப் போற்றப்படுபவர். 1927 ஆம் ஆண்டு பிறந்த இவர் இதுவரை நூற்றுக்கு மேற்பட்ட படைப்புகளை வழங்கியுள்ளார். பரிசுகள் பல பெற்றவர். இவரது ''வேங்கை வனம்'' (1984) என்னும் நாவலுக்கு தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகம் இராஜராஜன் பரிசினை வழங்கி சிறப்பித் துள்ளது. இவரது படைப்புகளுள் குறிப்பிடத்தக்கவை கொல்லிப் பாவை (1984) அஜாதசத்ரு (1985).*

### நீல பத்மநாபன்

*1938 ஆம் ஆண்டு திருவனந்தபுரத்தில் பிறந்த இவர் இலக்கியத் திறனாய்வாளர்களால் போற்றப்படுபவர். இவரது ''உறவுகள்'' (1975) என்னும் நாவல் 1977 ஆம் ஆண்டு ராஜாசர் அண்ணாமலைச் செட்டியார் பரிசு பெற்றது. ''பள்ளி கொண்டபுரம்'' (1970) ''ஃபைல்கள்'' (1973) ''தேரோடும் வீதி'' என்பன இவரது படைப்புகளில் குறிப்பிடத்தக்கன. தமிழ்நாடு அரசின் பரிசுபெற்றவர்.*

### நா. பார்த்தசாரதி (1932-1988)

*சிறந்த இலக்கியப் படைப்பாளராகத் தமிழ் மக்களால் போற்றப்பட்டவர். ''தீபம்'' என்னும் இலக்கிய மாத இதழைக் கால் நூற்றாண்டுக் காலம் தொடர்ந்து நடத்தினார். ''சமுதாய வீதி'' (1968) என்னும் நாவலுக்காக சாகித்திய அகாடமி இவருக்குப் பரிசு வழங்கிச் சிறப்பித்தது. இராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் நினைவுப் பரிசு ''துளசி மாடம்'' என்னும் நாவலுக்காக வழங்கப்பட்டது. ''குறிஞ்சி மலர்'' (1960),*

சாகித்திய அக்காதெமி, சிறுகதைகள் வரிசையில் 1959-ஆம் ஆண்டு முதன் முதலாக ஒரு தொகுப்பினை வெளியிட்டது. மிக நீண்ட இடைவெளிக்குப் பின் இவ்வரிசையின் இரண்டாவது தொகுப்பு நூல் இப்போது வெளிவருகிறது.

இத்தொகுப்பு நூலில் மறைந்த முதுபெரும் எழுத்தாளர்கள், மூத்த படைப்பாளர்கள், வளர்ந்து வரும் இளந்தலைமுறைக் கலைஞர்கள் ஆகிய அனைத்துத் தரப்பினரின் படைப்புகளும் இடம் பெற்றுள்ளன. இக்காலத் தமிழ்ச் சிறுகதை இலக்கியத்தின் நோக்கையும் போக்கையும் வளர்ச்சியையும் முதிர்ச்சியையும் இத்தொகுப்பு ஒருவாற்றான் பிரதிபலிக்கும் என்பது எங்கள் நம்பிக்கை.

அமரர் அகிலன் அவர்களால் தொடங்கப்பட்டு, அமரர் நா. பார்த்தசாரதி அவர்களால் உருவாக்கப்பட்ட இத்தொகுதி இப்போது உங்கள் கைகளில் தவழ்கிறது. இத்தொகுப்பு நூலுக்கு முழு வடிவம் தந்து முன்னுரை வழங்கியிருப்பவர் பாரதிதாசன் பல்கலைக்கழகத் தமிழியல்துறைத் தலைவர் பேராசிரியர் டாக்டர் மா. இராமலிங்கம் ["எழில்முதல்வன்"] அவர்கள். சிறந்த படைப்பாளராகவும் தேர்ந்த திறனாய்வாளராகவும் விளங்கும் எழில்முதல்வன் 1981–ஆம் ஆண்டிற்கான சாகித்ய அக்காதெமி பரிசைப் பெற்றவர் என்பது குறிப்பிடத்தக்கது.

Tamizh Chirukathaigal Vol II (Tamil) Rs 80

ISBN 81-7201-429-5